# கமலினி.

## ஒரு தமிழ்க் கதை

இது

சருக்கை-இராமசாமி ஐயங்கார். பி.ஏ.

இயற்றியது



சென்னை :

டி. ஆர். சந்திர ஐயர்

1914.

# கமலினி.

## அத்தியாயம்—I.

" ஒன்று கூறுவ துண்டுறு திப்பொருள்
நன்று கேட்டுக் கடைப்பிடி நன்றரோ "

பூமாதேவிக்கு ஒட்டியாணமென விளங்கும் கா... அரசவீதியில் மூன்று மாடிகளையுடைய வீட்டின் கூடத்... கும்போது வெண்மையான வஸ்திரத்தால் மூடப்பெற்ற... யில் வயோதிகப் பருவத்தவனான ஒருவன் படுத்திருப்பதைக் காண லாம். கழுத்தளவும் போர்த்திருப்பதாலும் முகம் பனியால் நனைந்த பங்கயம் (தாமரை) போல வெண்மையாயிருப்பதனாலும் நோயாளி யென்றே காணப்படுவான். இவன் முகக்குறிப்பால் ஐம்பது வய துள்ளவன் என்று அறியலாம். கழுத்திலும் முகத்திலுமுள்ள காயக்குறிகளைக்கண்ட ஒருவன் போர்வீரனென்று எண்ணுவான். இவன் இளம்பிராயத்தில் அழகு வாய்ந்தவனென்றே காணப்படும்.

இவ்விதம் சந்தீயவீரன் படுத்த படுக்கையாயிருக்க பக்கத் தில் மூன்று காளையர்கள் உட்கார்ந்திருந்தார்கள். நோயாளியின் மெல்லிய குரலையும் கவனத்துடன் கேட்க வீடு முழுவதும் ஒருவித சப்தமு மில்லாமலிருந்தது. இச்சப்தமில்லாமையைச் சிறிதுநேரத் திற் கொருவிசை 'அம்மா! அப்பா!' என்ற பெருமூச்சுடன் பிறக் குஞ்சொற்களே தடைசெய்யும். இவன் நோயின்தன்மையை விசாரித்தால் சுரமென்றறியலாம். இச்சுரம் இவனைச் சிலதினங் களாகத் துன்பப்படுத்திக்கொண்டிருக்கிறதாகவுந் தெரியவரும். நோயாளியின் அருகில் உட்கார்ந்திருக்கும் மூவரில் மூத்தவனான சுந்தரன் தலைமாட்டில் உட்கார்ந்திருந்தான். இவனுக்கு ஒன்று அல்லது இரண்டு குறைய இருபத்தைந்து வயதிருக்கலாம். நடுவே

உட்கார்ந்திருந்த சீநிவாசன் மிக்க அழகுள்ளவனல்ல னேலும் கல்வியழகு மேம்பட்டு முகத்தொருவித சாதுரியத்தன்மை விளங்கியது. இவனுக்கு இருபத்திரண்டு வயதிருக்கலாம். மற்றைய கனிஷ்டனான மதிமுகன் மன்மதனும் ஆண்மையைவிட்டுப் பெண் ஆவாவும் வனப்புடையவன். இவனுக்கேறக்குறைய இரு ருக்கலாம். இவன் ஒருவனே நோயாளியின்மேற் கையை கண்ணீர் ததும்பத் துக்கித்துக்கொண்டிருந்தான். இப் யிற் சத்தியவீரன் மயக்கத்தினின்று விழித்துச் சிறிது டு நோக்கிப் பின்னரிவ்வாறு கூறுவானாயினன். "என ர்! யானிறக்குந்தருணஞ் சமீபித்தது. செல்வம், ம் யாவைதாமிருப்பினும் இறக்குஞ்சமயத்திற் பயன் ரந்தராய்ப் பிறந்தவுடனே இறப்பரென்பது நிச்சயம். யாதொருபோரிலு மிறவாது சாமானியமரணங் கிடைக்கப்போகின்றதென்று எனக்கு விசனமாயிருக்கின்றது. எனக்குப்பின் என் பெயரை நிலைநிறுத்துபவர் நீங்களே; யாதலினாலுங் காட்டில் வசிக்குங் காநவ்யவள்ளலை நாட்டிற்கழைத்துவந்து பட்டஞ் சூட்டுபவர் நீங்களே யாதலினாலும் யான் கூறுவனவற்றைக் கவனமாயலட்சியஞ்செய்யாது கேட்பீராக" வென்று நோயாளி முடித்தது மிளையவனான மதிமுகன் கண்ணீர் தாரை தரையாகச் சொரிந்து சிறிது உரைக்க அழத்தொடங்கினன்.

அருகிலிருந்த சீநிவாசன் மதிமுகனை நோக்கி, "என்னத்திற்கு நீ யழுவது? தந்தையா ரிறப்பதைக்குறித்தா? எப்பொழுது பிறந்தோமோ அப்பொழுதே மரணஞ் சம்பவிக்குமென்று உனக்குத் தெரியாதா? பின்னும்

"நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு."

என்ற வள்ளுவர்வாக்கு மறியாயோ? தந்தையா ரிறக்குந்தருணத்திற் கூறு மொழிகளைக் கேளாது நீ தேம்பித் தேம்பி யழுவது சரியன்று. அவரித்தருணத்துக் கூறு மொழிகள் நமக்கு வேதவாக்கிய

மல்லவா? உன் துக்கத்தைச் சிறிது அடக்குவாய். தந்தையா ரேதோ கூறத்தொடங்குகின்றார்" என்றான்.

சத்தியவீரன்றன் மூத்த மகனான சுந்தரனைப்பார்த்து "அவர்களைவிட நீதான் மிக்க சாக்கிரதையா யிவ்வுலகில் வாழவேண்டும். எனக்கு ஐம்பது வயதாகிற விஷயம் உங்களுக்குத் தெரியாததன்று. ஆதலின் எனக்கிவ்வுலகின் தன்மை சிறிது தெரியுமென்று நீங்கள் நம்பவேண்டும். யான் கூறுஞ் சொற்களை வலச்செவியாற் கேட்டு இடச்செவியால் விடாமல் என் வயோதிகப் பருவத்திற்கேனு மரியாதைவைத்து யான் சொல்லுமாறு நடப்பீரென்னும் நம்பிக்கையாற் கூறுகின்றேன்.

"யான் உங்களுக்குப் பிதுரார்ச்சிதமாக வைத்தபொருள் மிக வுஞ்சிறிதே. யானிப்பொழுது கூறும் மொழிகளே உங்களுக்குச் செல்வத்தினும் பெருஞ்செல்வம்.

"முதற்கண் என்னருஞ் சுந்தரா! நீ மூத்தவனாகையால் உன் தந்தையின் சீலவொழுக்கங்கள் உன்னிடத்திலேயே குடியிருத்தல் வேண்டும். நீ பதினான்கு செய்களையு முரிமையாகக் கொள்வாய்; சீநிவாசா! உனக்குப் பன்னிரண்டு செய்கள் உரிமையாகக் கொடுக்கின்றேன். என தருங்கண்மணி! மதிமுகா! நீ என் குதிரையும் மெய்ப்பையும் உடைவாளும் பதினாறுசெய்களும் பெற்றுக்கொள்வாய். 'அகத்தினழகு முகத்தில் தெரியும்' என்று கூறுவது உண்மையாயின் உன் அண்ணன்மார்களைவிடத் தயாளத்தன்மையினும் பெருந்தன்மையினும் நீயே சிறந்து வாழ்வாய்.

"இவ்விதமாகப் பொருள்கள் யாவையும் பகுத்துக்கொடுத்தேன். பொருளோ 'பேனமார் வெள்ளநீரிற் பிறந்திடுங்குமிழி போலும்' நிலையற்றது. ஆகையால் உங்களுக்குள்ளதைச் சாக்கிரதையாகக் காப்பாற்றி வாழ்வீர்களாக. வீணாகப் பொருளை யழித்தீர்களாயின் உங்கள் நண்பர் வருந்துவார்கள். எதிரிகள் சந்தோஷிப்பார்கள். ஆதலால் எனது சொற்களையே ஓர் அரணாகக் கொண்டு பகைவர்களாகிய ஐம்புலக்கள்வர் தஞ் சேஷ்டைகளுக்

கிடங்கொடாது நடப்பீர்களாக. உங்கள் வாழ்நாட்களிற் கர்வ மென்னும் பாறையிற்றாக்குண்டு நிலைகுலைந்து வருந்தாதீர்கள். ஈன மார்க்கமாய்ப் பொருள் தேடுவதைக் கருதாதீர்கள். இனி உங்கள் மனத்தின்கண் தேசாபிமானம் முதன்மைஸ்தானம் பெறவேண்டும். உங்கள் உயிரைக்கொடுப்பதனால் தேசத்திற்கு மிக்க நன்மையுள்ள தாயின் சிறிதேனும் பின்னிடையாது மகிழ்ச்சியுடன் கொடுக்க வேண்டும். உங்கள் சுயகாரியத்திற்குஞ் சுயநன்மைக்காகவுமே நீங்கள் பாடுபடவேண்டியதென்று எண்ணாதீர்கள், நண்பர்சொல்லு பவைகள் கடோரமாயினும் அலட்சியஞ் செய்யாதீர்கள்.

> " உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
> இடுக்கண் களைவதா நட்பு."

> " நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
> மேற்சென் றிடித்தற் பொருட்டு."

என இம்மொழிகளை நிறுத்தி நிறுத்திப் பெருமூச்சுவிட்டுக் கொண்டு சத்தியவீரன் கூறி முடித்தான். அன்றை யிரவில் அவன் இறந்தனன். அவன் மூன்று குமாரர்களும் துக்கசாகரத்தில் மூழ்கித் திக்குத்திசை காணாது திகைத்து ஒன்றுஞ் செய்யத்தோன்று மற் சிறிதுநேரஞ் சும்மாவிருந்து பெருங்குரற்பாய்ச்சி யழுது வருந்தினார்கள்.

## அத்தியாயம்.—II.

---

> " கட்டிக் கொடுத்த சோறுங் கற்றுக் கொடுத்த
> சொல்லுந் துணையாகா."

பரிசுத்தத் தன்மையாலும் பயன்படுந் தன்மையாலும் விளங்குந்தன்மையாலுந் தனக்குச் சமானமான சத்தியவீரன் இறந்ததைக் குறித்துக் கூற்றனைக் (யமனைக்) கோபிப்பான் எழுந்தான்போலுந் துக்கத்தாற் சிவந்தான்போலவுஞ் சூரியன் உதயகிரியிற் பலகதிரி களைவிரித்து உதயமாயினன். சுந்தரன் அந்தணர் பலரைக் கூவி இறந்தவனுக்குச் செய்யவேண்டிய கருமங்களைச்செய்து முடித்தான். அவ்வூரார் அனைவரும் இவனிறந்ததைக்குறித்து மிகவும்

இரக்கமுற்றார்கள். சிலநாளைக்குப் பின்னர்ச் சீநிவாசன் பழைய
படி கல்வியின்பொருட்டு மதுரைக்குச்சென்றான். சுந்தரனோ தம்பி
மார்கள் பொருளைக் கவரப் பல்வேறு சூழ்ச்சிகளை யோசித்துக் கொ
ண்டிருந்தான்.

முகம் அகத்தி னெண்ணங்களை வெளிப்படுத்துமன்றோ? ஆயி
னுஞ் சுந்தரனிடம் அவ்வாறு அறிதல் மிகவு மசாத்தியமாம். 'எத
மென்பனயாவையு மெய்துதற்கோது மூலமாய' சூது, வஞ்சனை,
பொய் முதலிய துர்க்குணங்கள் குடியிருப்புக்கு நல்லிடம் அகப்
படாமல் வருந்தி யிவன்முகமே நல்லிடமென்று நினைத்து அழ
கெனும் போர்வையைப் போர்த்திருந்தன. அக்கினியைப் பஞ்சுப்
பொதியில் ஒளித்துவைத்தால் வெளியாய் விளங்காமலொழியுமோ?
மனத்தின்கண் உண்டாகும் யோசனைகளை முகம் காட்டாதொழி
யினுஞ் செயல்களேனும் வெளியிடாவோ? மகாபுத்திசாலியாகிய
மதிமுகன் இவன் எண்ணங்களை யொழுக்கத்தால் தெளிவாய்த்
தெரிந்தான். செவிடன் காதிற் சங்கூதினாற்போலத் தந்தையார்
கூறிய புத்திமதிகள் பயன்படாமற்போயின.

இத்தகைய சுந்தரன் ஒருநாளிரவுமுழுதுந் தூக்கம்கொள்ளாது
தன் அறையிற் கூட்டிலடைத்த புலியென் உலாவிக்கொண்டு
அறிவுடன் முரணிப் பின்வருமாறு யோசிக்கலாயினான். "ஏ அறிவே!
யாவற்றிற்கும் பொருளன்றோ முக்கியம். பொருளிருந்தால் நினை
த்தவை யெல்லாம் முடியும். 'வடுவிலாவையத்து மன்னிய மூன்றில்
நடுவணதெய்த விருதலையு மெய்தும்,' எவ்விதத்தானும் பொருள்
தேடவேண்டும். நம் தம்பிமார்களை வஞ்சித்து எவ்வாறேனும் பொரு
ளைக் கொள்ளல்வேண்டும்"

அப்பொழுது அறிவு மனத்தை நோக்கி,

"என்ன முழுமூடனாய்விட்டாய்! தந்தையார் கூறிய உறுதி
மொழிகளை இவ்வளவு சீக்கிரத்திலா மறப்பது? அவர் துன்மார்க்
கத்தால் பொருள் தேடவேண்டாமென்று கூறினாரே! உடன்
பிறந்து உடன் வளர்ந்து வந்த தம்பிமார்களுக்கோ துரோகஞ்

செய்கிறது! அப்படி நினைப்பதே மகாபாதகமன்றோ ? என் அவர்களுடன் விநயமாய்க்கூடி நடக்கலாகாது ? நீ அவர்களுடன் கூடி நேசம்பூண்டு வாழ்வையேல் நின்புகழ் ஆகாயத்தை யளவாதா."

அப்பொழுது மனம் அறிவை நோக்கி

"பாழும் அறிவே! நன்றாயிருந்தது உன்புத்திமதி. தந்தையேதோ சுரவெறியால் சிலவார்த்தைகளைப் பிதற்றினால் அதை வேதவாக்கியமென்று கொள்ளுதல் மூடத்தனமன்றோ ? பின்னும் தந்தையார் பரலோகத்தில் செவ்வையாயிருப்பார். அவர் யான் செய்யும் செயல்களைக் கவனிக்கப் போகின்றாரா ? என்ன ? மதிமுகனை இளைஞன். சமபந்தியில் வைக்காது கீழ்மைப்படுத்தி வருவேன். சீநிவாசனோ இந்நிலத்தைப்பற்றிக் கவனிப்பவனல்லன். இவர்களை வைக்கவேண்டிய முறையில் வைப்பேனாயின் யான் செல்வமுடையனா யிருப்பதற்கு யாதொரு தடையுமிராது". என்று பலவாறு யோசனைபுரிந்து கடைசியில் துர் எண்ணத்துடனே சாளரவாயிலாக வெளியைப் பார்த்ததுஞ் சூரியோதய சமயமாயிருந்ததை நோக்கி அறையினின்று வெளியேபோய்த் தன் காலைக் கடனைச் செய்யத்தொடங்கினான்.

---

## அத்தியாயம்.—III.

"உடன் பிறந்தார்சுற்றத்தா ரென்றிருக்க வேண்டா
முடன் பிறந்தே கொல்லும் வியாதி."

சுந்தரன் சிலகாலந் தம்பியாகிய மதிமுகனை வேலைக்காரன் போல் நடத்திவந்தான். அவன் 'பொறுத்தார் பூமியாள்வார்' என்ற முதுரையை யெண்ணித் தமயனுக்கு அடங்கி நடந்துவந்தான். ஒருநாள் தமயன் கொடுமையை நினைத்து நினைத்து மிகவும் வருந்திப் பொறுக்கமுடியாது தன் வீட்டிற்குப் பின் புறத்திருக்கும் பூஞ்சோலையிற் புகுந்தனன்.

கண்ணினுற் காண்பதற்கு அரிதாகுங் காட்சியினை யுடையதாய அப்பூஞ்சோலையின் அழகினை யாவரே எடுத்துரைப்பார்? அப்பூஞ் சோலையில் வாழை, பலா, மா, தெங்கு, கமுகுமுதலிய பயனைத் தருவனவாகு மரங்களும் அசோகமுதலிய நிழலைத்தரும் விருக்ஷங் களும் நெருங்கியிருந்தன. தெள்ளிய நீரினையுடைய ஒரு சிறு குளம் பூஞ்சோலையாகிய பெண்ணினுக்கு முகமெனப் பொருந்தி யிருந்தது. விருக்ஷ நெருக்கத்தினு லுண்டாகிய இருளை மேக மென்று நினைத்து ஒரு சார் மயில்கள் சதமகன் (இந்திரன்) தேகம் போலுங் கண்களை மிகவுமுடைய சிறைகளை விரித்து ஆடுதலையும், பூவைமுதலிய அழகிய சிறு பறைவைகள் நிர்ப்பயமாய் இங்குமங்குந் துணைகளுடன் கூடித்திரிவதையுங் குளத்திற் புஷ்பித்திருக்குந் தாமரை மலர்களில் அன்னந் தன் பெடையொடு கொஞ்சிக்குலாவு வதையும் மதிமுகன் கண்டுஞ் சிறிதும் மனத்தளர்ச்சி நீங்கல னாய்ப் பளிங்கினுலாய மேடையின்மீது உட்கார்ந்து பின் வருமாறு யோசிக்கலாயினுன் :—

"தமயன் றந்தைக்குச் சமானமானவனென் றுலகோர் பலருங் கூறக்கேட்டும் என்மன மிவன் செய்யுந் துன்பங்களைச் சகிக்க முடி யாது மேன்மேலு மவனிடங் கோபங்கொள்கின்றது. என் செய் வது? தந்தையா ரென்மீது எவ்வளவு அன்புடையவரா யிருந் தாரோ அவ்வளவு இவன் என்மீது வெறுப்புடையவனு யிருக்கி ருன். இப்படி வருந்துவதைவிட உயிர்துறத்தல் மிகவும் நன்று. இவன் என்னை வருத்துவதற்கு யாதேனுமொரு காரணமிருத்தல் வேண்டும். ஒருவேளை யென்பொருளின்மேல் ஆசைகொண்டோ? அதற்காக என் என்னை வீணுக அடிமையைப்போல் வருத்தவேண் டும்? என்பாகம் முழுவதையுங் கேட்டால் சந்தோஷத்துடன் அளியேனே? மாபாதகனுயிருக்கின்ருன். அவனை நோவதிற் பயன் யாதுமில்லை. 'விலக்கரிதாய விதியினுல் விளைக்கும் வினைவை யாஅ றிவார்?' 'வினையூட்டாது கழியாது' என்று பெரியோர் கூறி யிருப்பினும் என்னுலினிச் சகிக்கவே முடியாது. நான் தமய

னென்று எவ்வளவு கீழ்ப்படிந்து நடக்கின்றேனோ அவ்வளவும் மேன் மேல் என்னை மருட்டுகின்றான். உடன் பிறந்து உடன் வளர்ந்த தம்பி என்று எண்ணுகின்றானிலன்." என்று சிறு குழியங்கற்களை யவ்விடம் ஓடிக்கொண்டிருக்குஞ் சிறு வாய்க்காலில் எறிந்துகொண் டிருந்தான்.

சிறிது நேரத்திற்குப்பின் மேடையின்மேல் இடதுகையைக் கன்னத்தூன்றி, இரண்டு காலையு மொன்றின்மேல் ஒன்று போட் டுக்கொண்டு கீழ்புறத்து நீட்டிப் படுத்திருந்தான்.

இச்சமயத்துச் சுந்தரன் சிறிது தூரத்தில் வருவதை மதி முகன் கவனியாதவனாய்த் தன் எண்ணத்துடன் மனத்தை நிலைப் படுத்தியிருந்தான். மிகவும் சமீபத்திற் சுந்தரன் வந்தும் மதிமுகன் எழுந்து மரியாதை செய்யாமற் படுத்திருந்தான். அப்பொழுது சுந் தரன் மதிமுகனைப் பார்த்துப் பேசுகின்றான் :

" இவ்விடம் என்ன செய்கிறாய் ?"

" செய்ய என்ன கிடக்கின்றன ?" என்று எழுந்து உட்கார்ந் தான்.

"என்னைத் தடுத்துரைக்கின்றாய் ?"

" யான் ஒன்றுந் தடுத்துரைக்கவில்லை. யான் உன்னுடன் பிறந்ததைக் குறித்து விசனப்பட்டுக்கொண்டிருக்கின்றேன்."

" நன்று ! நன்று !—"

" என்னை யிவ்வாறு நடத்துவதற்குக் காரண மென்னை ? என் னிடத்துளவற்றைச் செலவிட்டு உன்னிடத்திற் போந்து என்னைக் காப்பாற்றவேண்டுமென்று அடைக்கலம் புகுந்துளேனோ ?"

" இடந்தெரிந்து வார்த்தையாடுவாய். வீணாகப்பேச்சையோட் டாதே."

" என் கண்கள் என்னை மோசஞ் செய்யாமலிருந்தால் நாம் நம்முடைய பூங்காவனத்திற்றா னிருக்கின்றோம். அன்றி——"

"யார்முன் இவ்வாறு வார்த்தையாடுகின்றாய்? மூடா!"
"என்றமயன்முன்றா னென்று நம்புகின்றேன். ஆயினும்—"
"ஏது உனக்கு பயித்தியம் பிடித்திருக்கிறதுபோலும்."
"எனக்கா?"
"மடையா! போதும். சும்மாவிரு."

"யான் மடையன்! சத்திய வீரப்பிரபுவின் கனிஷ்ட புத்திரன் மடையன்! அவ்விதமான மகாப்பிரபு மடையர்களைப் பெற்றார் என்று சொல்பவன் பெருமடையனா யிருப்பான் என்பதற்குச் சந்தேகமில்லை. தமயனென்னும் பெயருக்கேனும் மரியாதைவைத்தல் வேண்டுமென்றே."

சுந்தரன் "அப்படித்தானிருக்கட்டும்" என்று நாலடி நகர மதிமுகன் தமயனைக் கூவி, "யான் கூறுவனவற்றைச் சிறிது செவிசாத்தல்வேண்டும்" என்று கூற அவன் மௌனமா யப்புறம்போயினான். மதிமுகனும் வீட்டினிற் சென்றான்.

சுந்திரன் மதிமுகன் கூறியவைகளை நினைத்து நினைத்துக் கோபமேலிட்டினால் முகஞ்சிவந்து கண்கள் நெருப்புப் பொறிகள் பறக்க நெற்றியில் ஏராளமாக வியர்வை யரும்ப யோசித்தொருபுற நின்றான்.

சிறிது தூரத்திற் குள்ளமும் எடுத்த நடையு முடையவனான மாணிக்கம் என்னும் மல்லயுத்தத்தில் வல்லவன் ஒருவன் வந்தனம் புரிந்து ஒதுங்கி நின்றான்.

"நல்லது மாணிக்கம்! ஏதாவது அரண்மனையில் விசேஷமுண்டா?"

"பழைய சமாசாரந் தவிர வேறென்ன? நமது காருண்யவள்ளலைத்தான் காட்டிற் சந்நியசிர்த்தீ தூரத்திவிட்டானே. அவருடனே அநேக பிரபுக்கள் போய்விட்டார்கள் இவைகளெல்லாம் யாவருக்குந் தெரிந்த விஷயந்தானே."

"கமலினியும் விசையையும் முன்போலவே நேசமாய்த் தாமே யிருக்கின்றார்கள்?"

"சந்தியகீர்த்தி மகள் விசையை கமலினியை மிகவும் நேசிக்கின்றாள். கமலினி உயிரும் விசையை உடலும் போலப் பிரியாம லிருக்கின்றார்கள்."

"சரி, அன்றி எந்தக்காட்டில் நமது காருண்யவள்ளல் வாசஞ் செய்கிறார்?"

"நமது வயல் வெளியைக் கடந்து சுமார் மூன்று காவததூரம் போகவேண்டும்?"

"அவ்வளவுதூர மிருக்குமா? நன்று. பின் நீ வந்த விசேஷ மென்ன?"

"நான் அரண்மனை முன்னர் மல்லயுத்தம் நாளைச்செய்யப் போகின்றேன்."

"ஆம். யானு மின்றைக்காலை கேள்விப்பட்டேன். யாரார் யுத்தஞ் செய்யப்போகிறார்கள்."

"உங்களுக்குத் தெரிந்திருக்கு மென்றன்றோ நினைத்தேன்? தங்கள் தம்பியார் மதிமுகர் என்னுடன் போர்செய்யப்போகின்றாராம். இதைப்பற்றித் தங்களிடம் அறிக்கைசெய்து கொள்ளலா மென்று நினைத்துவந்தேன். அவர்மிக இளம்பிராயத்தினர். நீங்கள் புத்திமதிகூறித் தடுக்கவேண்டும்."

"நீ சொல்லிய விஷயம் எனக்கு முன்னரே தெரியும். என்னாற்கூடிய வரையுந் தடுக்கமுயன்றேன். அவன் சிறிது மிடங்கொடுத்துப் பேசிலன். 'மூர்க்கனு முதலையுங் கொண்டது விடா.' என்னையுமொருசமயத்துக் கொல்லமுயன்றான்."

"உங்களையா?"

"ஆம். என்னைத்தான். அவன் கைகால் முறித்தலைவிடக் கழுத்தை முறிப்பது நலம். உனக்குத் தோன்றியவாறு செய். நான்

தோல்வியுற்றானால் அவன் உன்னை வேறு விதத்தாலேனும் கொல்லமுயல்வான். கொலைபுரி கொடியன். ஒன்றுக்கும் அஞ் சவே மாட்டான். நோய்க்கிடங்கொடுத்தாலும் பகைவனுக் கிடங் கொடுக்கலாகா தென்பதுனக்குத் தெரியுமன்றே?"

"எனக்கு முன்னரே அவர்தங் குணங்களைத் தெரிவித்தீர் களே. நாளைத்தினம் அவர் இறந்தாரென்று கேள்வியுறுவீர். அவர் முகத்தைப்பார்த்தால் மகாசாதுபோலுந் தோன்றுகின்றார். அகத் தினழகு முகத்திற்றெரியு மென்கின்றார்களே- அது முழுப்பொய் தான். சத்தியகீர்த்தியைப் பார்க்கவேண்டி யிருக்கிறது. போய் வரட்டுமா?"

"அப்படியே. நாளைச்சாயங்காலம் உன்னை யிங்குக் காண லாமே?"

"ஆ! அப்படியே தவறாமல் வருகின்றேன்" என்று கூறி மாணி க்கம் ஏகினான்.

---

## அத்தியாயம்—IV.

"பகையாளி குடியையுறவாடிக்கெடு."

இரவு சுமார் ஏழரை நாழிகையாயிற்று. மதிமுகன் தன்மாடத் தின்மேல் உலாவிக் கொண்டிருந்தான். அப்பொழுது சுந்தரன் சோலையினின்றும் வீட்டிற்குவந்து வேலைக்காரரை நோக்கி "மதி முகனெங்கே?" என்று வினவி இருப்பிட மறிந்துகொண்டு அவன் சென்றனன். சுந்தரன் மதிமுகனைக் கண்டு "மதிமுகா! என் மீது அவ்வளவு கோபித்துக்கொண்டாயே அதன் காரண மென் னவோ? யான் உன்றமயனென்று சிறிதுங் கவனித்தாயில்லை. இது வரையும் உன்னை நடத்திவந்தது சரியன்றென்று யான் ஒப்புக் கொள்கின்றேன்," என்றனன். மதிமுகன் அதற்கு "அண்ணா! பிழையைச் செய்தவன் ஒப்புக்கொண்டானாயின் அப்பொழுது அதன் கொடுமை சரிபாதி குறைந்துவிடுமென்றே! உன் குற்றத்தை

நீயே ஒப்புக்கொண்டதற்காக யான் மிகவும் வந்தனம் புரிகின்றேன்; அன்றியும் நாம் இப்படிச் சச்சரவு செய்துகொண்டு இருப்போமாயின் நமது தந்தையின் பெயர் கெட்டுவிடுவதுடன் நம்பெயரு மென்னும் ? அவர் பெயர் கூறிய இடத்தெல்லாம் நமக்கு மரியாதை நடக்கின்றதன்றோ ? நாமினிச் சிநேகர்களாக வாழ்வோம்." எனச் சுந்தரன் "மதிமுகா ! பங்காளிப்பகை நீடித்திருக்கலாகாது. நாமினி நண்பர்களே" என்றான்.

" மதிமுகா ! இரவு நாழிகையாகின்றது. உண்டிக்குச் செல்லலாம்." மதிமுகன் சிறிதுநேர மாலோசித்துப் பின்னர் " அண்ணா ! உன்னிடத்தில் ஒரு விசேஷங் கூறவேண்டும்."

" என்னையது ? "

" ஒன்றுமில்லை. நாளையதினம் அரசன் முன்னர் மல்லயுத்தம் நடக்கப்போகின்றது —"

சுந்தரன் தன்முகத்தைக் கையால் துடைத்துக்கொண்டு "நாளையதினமா? "

"ஆம். யானும் அவ்யுத்தஞ் செய்பவருள் ஒருவனாக எற்பாடு செய்துவிட்டேன்."

"நீயோ யுத்தம் செய்வது ? நன்றாயிருக்கின்றது ! நீயோ மிகவும் இளம்பிராயத்தனாயினையே ! மாணிக்கமோ மத்தளக்கட்டை போலத் தடியனா யிருக்கின்றான்."

" ஆயினென் ? இளம்பிராயத்திற்றானே பல மதிகமிருக்கும். மல்லயுத்தத்தில் வல்லவனென்னும் மாணிக்கம் எனக்கு நிகராகானெனத் தோற்றுகின்றது. ஆள் ஆகாரத்தி லென்ன விருக்கின்றன ? அவனை யோர் அடியில் தொலைத்து விடலாமென்பதற்கையமே யில்லை."

" தைரியமிருந்தா லெல்லாம் முடியும். பன்னிரு பிராயத்தன் ஒரு மதம்பிடித்த யானையை யடக்கிய கதை யுனக்குத் தெரியு

மன்றே! நீ செயிப்பையேல் உன் தந்தையின் பெயர் விளங்கும். அவரை யெப்படிப் போரிற் பின்னிடையாதவர் என்று உலகோர் கூறுகின்றார்களோ அப்படியே உன்னையுங் கூறுவார்கள். தந்தை யார் மேலுமுன் சௌரியத்தை யறிந்தன்றே தம் உடைவாளையும் மெய்ப்பையையும் கொடுத்தனர்? என் எங்களுக்குக் கொடுக்க வில்லை? நாளையதினம் தவறாமல் மாணிக்கத்தை வென்று வருவாய்."

"நீங்கள் கூறுவதனாலேயே எனக்கொருவித தைரியமுண்டாகின்றது. ஆயினும் என் மனத்தொருசார் 'வெல்லுநர் யாரே வெந்நதுகாட்டித் தொலைகுந ரெவரோ' என்ற ஐயம் நிகழ்கின்றது."

"அப்படி உனக்கு மனமொருவாறு யிருக்குமாயின் நீ செல்லவே வேண்டாம்."

வரப்போகின்ற தீங்கிற்குப் பின்னிடைபவன் ஒரு வீரனுவனோ? வருந்தீர்கு வந்தேதீரும்."

"ஆனாற் பயப்படவேண்டாம். எல்லாவற்றையும் நம் ஏகாம்பரேசுவரர் நன்றாகவே முடித்துவைப்பார்."

"அப்படித்தான் எனக்குத் தோற்றுகின்றது."

இச்சம்பாஷணையால் மதிமுகன் வீராவேசம் அதிகமாயிற்று. அச்சமயத்துப் பதின்மரெதிர்த்திருப்பினும் பின்னிடையான். பிறகு ஒரே பந்தியில் உட்கார்ந்துகொண்டு போசனமருந்தினார்கள். மதிமுகன் தான் உண்மையாகச் சயமடையப்போகின்றதை நம்பி நன்றாகத் தூக்கத்தி லிரவைக் கழித்தான்: தமபனான சுந்தரனோ இரவுமுழுவதுந் தூக்கமின்றி அறையிலடைத்த புலியைப்போல உலாவிக்கொண்டு எப்பொழுது சூரியனுதயமாகப் போகின்றான் என்று சாளரவாயிலை யடிக்கடி திறந்துபார்த்துக் கொண்டிருந்தான். கடைசியில் "நாளையதினம் அவன் இறப்பானாயின் ஏகாம்பரேசுவரர்க்கு ஐந்து அபிஷேகம் செய்து வைக்கிறேன்." என்று வேண்டிக்கொண்டு மறுபடியுஞ் சாளரத்தைத் திறந்து பார்க்கச்

சிறிது வெளிச்சந் தெரிந்தது. உடனே வெளியே சென்று வயல் வெளிகளைச் சுற்றிப்பார்த்துக்கொண்டு பத்து நாழிகைக்குமேல் வீட்டையடைந்தான்.

---

## அத்தியாயம்—V.

"பெண்பிறந்தார் யான்பட்ட பெருந்துயரம் பட்டாரார்?"

இதுகாறும் யாம் சாமானிய பிரபுவின் வீட்டிருந்தோம். இனிச் சிறிது அரண்மனையுட்சென்று பின் யாவருடனும் மல்லயுத்தத்தைக் காணவருவாம்.

காருண்யவள்ளலென்போன் அரசுமுறையை மிகவும் கவனமாய் நடத்திவந்தான். அவன்றன் அரசுமுறையில் யாதொரு குற்றமுங் காணுதலரிது. குடிகளின்பதுன்பத்தைத் தனவெனப் பாவித்து முறைவேண்டினர்க்குக் குறைவேண்டினர்க்குங் காண்டற் கெளியனாய் எல்லோரிடத்துங் கடுஞ்சொற்கூறாது செங்கோல் நடத்திவந்தான். இவ்வாறிருப்பத் தம்பியாகிய சத்தியகீர்த்தி சில பிரபுக்களைச் சேர்த்துக்கொண்டு அண்ணனை இராச்சியத்தினின்றுந் துரத்திச் செங்கோலைக் கவர்ந்தான். சத்தியகீர்த்தி காருண்யவள்ளலின் புத்திரியாகிய கமலினியைத் தன் புதல்வி விசையையின்றோழியாக வைத்துக்கொண்டான், இவர்க ளொருவருடன் ஒருவர் மிக்க நட்புப் பாராட்டிவந்தார்கள். இவ்விருவரும் மிகவும் அழகுள்ளவர்கள். உபயசந்திரர்கள் ஏகோலத்து விளங்குவதென்ன அரண்மனையில் வாழ்ந்துவந்தனர். கமலினிக்குப் பதினான்கு வயதும் விசையைக்குப் பதினைந்து வயது மிருக்கலாம். இருவர்களுங் கன்னியர்களே.

விசையையின் முகம் வட்டமாயும் பளபளப்புடையதாயும் விளங்கிற்று. அவள் சிரிக்கும் சமயத்து இரண்டு கன்னத்திலுஞ் சிறு குழிகள் உற்றிருப்பது மிக்க காந்தியை முகத்திற்கீந்தது. நெற்றி சிறிது விசாலமாகவும் புருவங்கள் தங்கியிருக்கு மிடங்கள் சிறிது

எடுத்து மிருந்தன. அவள் தன் விழிகள் இங்குமங்கு மோடிக் கொண்டேயிருந்தன. அவள் உடலுஞ் சிறிது பூரித்திருந்தது போலக் காணப்படும்.

ஆயின் நமது கமலினி பரிவேடஞ்சூழ்ந்த சந்திரன்போலத் துக்கமென்னுங் கந்தருவனிறகுகளின் சாயையால் முகம் போர்த்திருந்ததுபோலும் காணப்பட்டாள். சிரிப்பென்பது அவள் முகத்தினின்றும் பறந்துவிட்டது. அவ்வாறிருப்பினும் அவள்தன் முகத்தின் செவ்வியை யென்னென்பேம் ? பிரகாசத்திற்குறைவிலது. ஆயின் மாசுபடிந்த மணியெனத்தோன்றிற்று. அவள் உடல் மிக மெலிந்து தசையற்றிருந்தும் மென்மைத்தன்மை நீங்கிலதாய் விளங்கிற்று.

ஒருதினஞ் சாயங்காலம் கமலினி தந்தையை நினைந்து வருத்தமுற்று அரண்மனைக்குச் சிறிதுதூரத்திருக்கும் நந்தனவனத்துப் புகுந்து அவள் தன் துக்கத்தையாற்ற நினைத்தாள். துக்கம் நீங்குதற்குத் தனிமையன்றோ இன்றி யமையாதது ? ஆகலின் றனியே அப்பூஞ்சோலைக்குட் புகுந்தனள். யாவரே யவ்விளஞ்சோலையின் இனிமையை எடுத்தியம்பவல்லார் ? கண்டிடிற் கண்படைத்த பயனை யன்றே பெறுவர்.

அந்த நந்தனவனமானது தனது பெயருக்கேற்பப் பார்த்தவர்க்குச் சந்தோஷத்தையளிக்கும் பான்மையதாயிருந்தது. கொன்றை, நந்தியாவர்த்தம், மாதவி, பாதிரி, ஆத்தி, வில்வம், மந்தாரம் முதலிய மலர்மரங்கள் வேலிப்புறத்திலிருப்பதைப் பார்த்ததும் அப் புஷ்பங்களைத்தரிக்குஞ் சிவபெருமானே யரணாக விருப்பதுபோலத் தோன்றும். இவற்றின் பாங்கர் மகிழமரங்கள் மகிழ்பூப்பக் காலாட்படையென நிரல்பட வரிசையாகநின்றன. இம்மரங்களினின்றுதிரும் புட்பங்கள் தரையிலோ ரமளிவிரித்தாங்கு காணப்பட்டன. கமலினித்தேவி கால்கள்பட்டுக் கிருதார்த்த மடையலாமென்றோ அவ்வாறிருந்தன? அதனை யாம் வருணிக்கற்பாலமல்லேம். இப்பந்தியைத்தாண்டியது மொருசிறு கேணிதெள்ளிய நீருடன் சிறந்து தோன்றிற்று. இச்சிறு குளத்துட் டாமரைமலர்கள் பல மலர்ந்து

நங் கமலினியின் குவிந்த முகத்தாமரையைநோக்கி நகைத்து அவள் தன்னை யெதிர்நோக்கி நகைபுரிதலை விரும்பினவென்ன விளங் கிற்று. பரிசில்விரும்பிப் பாடுவோர்போல வண்டுகள் தேறலைவிரும் பித் திரிந்து ரீங்காரஞ் செய்துகொண்டிருந்தன. இப்பூஞ்சோலையி லிக்குமங்கு முட்காரும்பொருட்டு அநேக மேடைகள் போட்டிருந் தன.

இத்தகைய நந்தனவனத்துக் கமலினிபுகுந்து தன் தந்தை வனத்து வசிப்பதையும் தான் அரண்மனையில் வசிப்பதையும் நினைந்து மனமுருகி ஒரு மேடையின்மீதுட்கார்ந்து இடது கையைக் கன்னத்தூன்றிக்கொண்டு பின்வருமாறு யோசியாநின் றாள்.

"தேங்கமழ் மலர்கள் நிறைந்து விளங்கப்பெறு மிந்நந்தன வனம்புகுந்தும் என் மனஞ் சந்தோஷத்தை யடையவில்லையே ? என் செய்வேன் ? தந்தையார் இன்னுங் காட்டகத்துத் தவிக்கின் றாரோ ? அன்றிக் கொடுவரிவேங்கையாற் கொலையுண்டனரோ ? அவர் தம் பகைவன் வீட்டிற்றானே யான் யிருக்கிறேன். என்னை யோரடிமையாகப் பாவித்துக்கொண்டிருக்கின்றான். யாது செய் வது ? பாதகன் எந்தையைத் துரத்திவிட் டெவ்வாறு வாழ்வான் ? ஆயினும் விசையை என்னை எவ்வளவு அன்புடன் பாராட்டிவரு கின்றாள் ! உயிரில்லா உடலெனவும், உடன்பிறந்தாரில்லா வாழ் வெனவும், திங்களிலா வானம்போலவும், திலகமிலாமுகம்போலவும் எந்தை காருண்யவன்னவில்லாத இவ்விராச்சியந் தோன்றுகின்றது. தந்தைபால் யானேகலாமெனின் விசையை விநாடிப்பொழுது மென்னைப் பிரிகின்றிலள். சிறிதுநேரமாயிற்று. இப்பொழு தென்னைத்தேடி யிங்குக் கட்டாயமாய் வந்திடுவாள்."

இவ்வாறு யோசித்துக்கொண்டிருக்குஞ் சமயத்துக் கமலினீ ! கமலினீ ! என்றொரு மெல்லிய குரலுடன் காலடியோசை கேட் டது. உடனே கமலினி எழுந்து சத்தங்கேட்ட வழித்திரும்பவும் விசையை கனகமாலை யென்னுந் தோழியுடன் எதிர்ப்பட்டாள்.

உடனே விசையை "கமலினி! ஏது நீ தனியே எங்களை யழையாது இன்று இவ்வளவு சீக்கிரத்து வந்துவிட்டாய்? எங்கள் கூட்டுறவு உனக்குப் பிரியமில்லையோ?" என்று அருகிற் சென்று மூவருமுட்கார்ந்தார்கள். அப்பொழுது கமலினி "அம்மா! நீ யிப்படிச் சொல்வது தகுதியன்று. சந்திரன் கலைகளை விரும்புஞ் சகோரமென்ன உன் முகாரவிந்தத்தையே காண விரும்புகின்றேன். உன்னைத்தவிர எனக்கு யாவர் துணை? ஏதோ என்றந்தையின் ஞாபகம் வந்ததும் மிகவும் வருத்தமாயிருந்தது. அவ்வருத்தத்தை யொழிக்க யிவ்விடம் வந்தேன்."

"கமலினி! நீ ஏன் வருந்தவேண்டும். யான் என் தந்தைக்கு ஏக புத்திரி என்பதுனக்குத் தெரியாததன்று. இவ்விராச்சியமென் கீழ்வரும்போது உனக்குத் தடையின்றி யளித்துவிடுகின்றேன்."

"அம்மா! நீ மறுபடியும் மறுபடியும் இவ்வாறு சொல்கின்றனை. அற்பமாகிய இவ்விராச்சியத்தின்மீதோ யான் ஆசை வைத்துளேன்? எந்தையைக்கண்டு மனச்சந்தோஷமடைய விரும்புகின்றேன். வேறொன்றும் யான் வேண்டுகின்றிலேன். இவற்றினைப் பற்றிப் பேசுவதனால் என் மனத்துயர மதிகரிக்கின்றதே யொழியக் குறைகின்றிலது. யான் மனத்தேர்ச்சியடையும் வுண்ணமி(?)வ்விடம் போந்தேன். அம்மா! கனகம்! எங்கே சில பாடல்கள் இசையுடன் பாடுவாய். கானத்தைவிடத் துக்கத்தைமாற்றுந் தகைமையதென்னுளது?"

"அம்மா! எனக்குந் தனியே பாடக் குரலா மண்ணு? விசையையும் பாடினால் யான்கூடப் பாடுகிறேன்." என்று கனகம் லை கூறினதும் விசையை "கமலினி! நீயும்சேர்ந்து பாடுவாயானால் நாங்களிருவரும் பாடலாம்." என்றனள்.

"சரி! அப்படியே" என்னலும் மூவருங் கீழ்வரும் பாடல்களைப் பாடினார்கள்.

1. என்மனமே! நீ தனியே யெதுபற்றி இரங்குகின்றாய்?
   மன்பதையி லுனையல்லால் வருந்துகிற்கும் பொருள்யாதோ?

2. மனத்திலுறு மகிழ்ச்சியினை வருத்தந்தான் றூரத்திடினும்
வினைகழலாய்! அன்பென்னு மாண்புறுநற் பொருளாலே!

3. எப்பொருட்கு மினிமைதரு மிச்சகத்திற் றலைமையுறும்
அப்பொருளைத் துக்கத்தா லகற்றிடவுங் கூடுமோ?

4. கார்மழை பறவைகள்முன் காட்டுதல்போ லென்மனந்தான்
மார்லரு மனத்துயரம் வந்துறுமென் றியம்பிடுமால்.

5. புன்மாலை யிருள்வரவு புகன்றிடுமா றென்னுடைய
துன்பமதை யையமுணர்ந் துற்றுநின்ற தேன்செய்கேன்!

"கமலினி! நீ யாரம்பித்த பாடல் வசந்தகால மாலைப்பொழுதிற் கேற்றதன்று."

"அம்மா! யானென் செய்வேன்? என் மனத்தின்றன்மை யைச் சிறிதுணர்த்தும் பாடலதுவே யாகலின் அஃதென் னினைவுக் குவந்தது."

"கமலினி! அன்பென்றுயே! அஃதேதேனுமுன் மனத்தைக் கலக்குகின்றதோ? சொல், என்னிடத்துக் கூறலாகாதோ?"

"அம்மா! அப்படி யொன்றுமில்லை. பின்னிரண்டு பாடல்களோ என் மனத்தின்றன்மையை விளக்கும். ஆயின் முற்கூறியவற்றுடன் ஆசிரியர் கற்றுக்கொடுத்தாராகலின் அவற்றையுங் கூறினேன்."

"சரி! பொழுதுபோவதற்குள் அரண்மனைக்கேகலாம் வா போவோம்" என்று விசையை எழுந்ததும் இருவருமுடன் சென்றார்கள்.

---

## அத்தியாயம்—VI.

"மன்னனை வணங்கியேத்தி வலியுடை மல்லின் போருக்
கென்னல நில்லையென்ன வியம்பினன் முன்ன நின்றான்
உன்னருங் கீர்த்தி யுற்றா னொளிர்மதிமுகத்தினனே."

அரண்மனைமுன்னர் ஒருவெளியுளது. அது மேடு பள்ள மின்றிச் சமமாயிருப்பதுபோலக் கண்ணுக்குப்புலனாகும். தரைமுழுதும் பசும்புல்நிறைந்துதோற்றுவது மலர் தலைக்கலந்து தாம்பாளத்து மரகதம் பரப்பியதெனக் காணுகிற்கும். அதன் கண் தவறிவிழுஞ் சாலு மூறுபடாதுபோலவிருந்தது. அப்பசும் புற்றரையில் நண்பகலின் பிற்பகுதியிற் காஞ்சியிலுள்ளார் பலர்கூடி நின்றார்கள். அவ்வாறு ஒன்றுகூடி நிற்பதன்காரணத்தை நம் நண்பர்கள் உணர்ந்திருப்பார்கள். மல்லயுத்தம் நடக்கப்போகிறது. கர்வமுற்ற மாணிக்கம் என்பான் இருபஃதாட்டை யிளம்பிராயத்தானொரிளந் தோன்றலுடன் நடுவண்நின்றான். உற்றுப்பார்ப்பவனுக்குப் பின்னவன் முகத்திலொரு குறிதோன்றும். வெற்றியையுந் தோல்வியையுமொருபொருட்டாக வெண்ணாதவன் என்னத்தோற்றுகிற்கும். அவ்வாறு யாதொரு கவலையுமிலனேல் என் போருக்குவரவேண்டும்? தான் சேனாதிபதியின் மகனாகலானும், தந்தையிறக்குஞ் சமயத்துத் தனக்கே உடைவாளையும் மெய்ப்பையையுங் குதிரையையுங் கொடுத்தன ராகலானுமன்றே! கையிற் பணமிருப்பவன் சூதாட்டத்திற் கேகுவது தானுமாடலா மென்றுன்னியே யன்றோ? அதுவும் இளம்பிராயம். அரசனோ எதிரிற் பரிவாரங்களுடன் உட்கார்ந்திருக்கிறான். பின்னருங் கோடைக்காலத்து மேகந்தால மறையப்பெற்ற பல சந்திரர்களென்னச் சாளரவழியாய் அந்தப்புரத்து மாதர் பார்த்துக்கொண்டிருக்கின்றனர். இவைகளை யெல்லா முணர்ந்திடின் இரத்தங் கொதிக்காமற்போமோ? மாணிக்க மதிமுகர் மற்போருக்கேற்ற வுடைகளுடன் தாயின் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளிப்போந்த கேசரியிரண்டென நின்றனர். போர் தொடங்கச் சங்கேதமாய் ஏற்படுத்திய காலங்கிட்டலுஞ் சங்கங்கள்

முழங்கின்றன. உடனே இருவரும் தோள்புடைத்து வந்தனஞ் செய்து வலக்காலைமுன்வைத்து ஊருவைவளைத்து நின்றனர். இவ்வாறு முறைப்படி செய்யவேண்டியவற்றைச் செய்தபின்னர் ஆயிரங் கிரணங்களுடன் பிரகாசிக்கு மூழிக்காலச் சூரியன்போலுங் கோபத்தால் தாமரையாகிய கரங்கள் குவிந்தன. மாணிக்கங் கவுட்புறந்துக்குக்க எத்தனிக்கலும் மதிமுகன் அதைத் தடுத்தா னன்றியும் அவன்றன் உரத்தொருகுத்து ஒங்கிப்புடைத்தான். மாணிக்கம் மனங்கலங்கினனாயினும் வெளியிற்காட்டலாகுமோ ? மாணிக்கம் மதிமுகன் ஊருவை யிழுத்துத்தள்ள முயலுகையில் ஒரே சமயத்து இருவரும் தந்தம் கைகளால் ஒருவர் தொடையை மற்றொருவர் பிடித்துக்கொண்டு கீழே இருவரும் வீழ்ந்தனர். தெய்வசங்கற்பத்தாற்போனே மதிமுகன் மேலும் மாணிக்கம் கீழுமாய் விழ்ந்தனர். இப்பொழுது மதிமுகன் மாணிக்கத்தை ஆகாய தரிசனஞ்செய்விக்கவேண்டுவதுதான். மாணிக்கமோ அடியு நுனியுந் தறித்த புளியமரமாயினனே ! மதிமுகன் இளைத்துத் தசைகூட அதிகரின்றியன்றே யிருக்கிறான். வெகு கஷ்டத்துடன் மாணிக்கத்தின் இரண்டு கால்களையும்பற்றி யுயரவெடுத்து ஆகாயத்தை நோக்கிக் கிளையை முறித்தெறியுங் குஞ்சரமெனப் பூமியில் எடுத்து அறைந்தான். மாணிக்கம் மூர்ச்சையாயினன். அதுகண்ட மதிமுகன் மிகுந்த வருத்தத்துடன் வெற்றிவிலக்குமி தாண்டவமாடும் முகத்தை யொருவாறு சுளித்துக்கொண்டு அவனுக்குச் சீதளோபசாரஞ்செய்தான்.

மன்னன் சத்தியவீரன் இத்தகைச் சிறுவன் சயித்ததைக் குறித்து ஆச்சரியமுற்று மிக்க சந்தோஷமுற்றனன். அன்று ஆங்குக் குழீஇய சனங்கள் கைகொட்டி யாரவாரித்தார்கள். இவ்வளவிலும் கமலினிதான் வெளியில் நடப்பதைத் தெளிவாய்த் தன் நேசருடன் பார்த்திருப்பினும் பிறரால் அவளையே காணுதல்கூடா தெனின் அவள் மனத்தின்றன்மையை யாரே எடுத்துரைப்பார்? அப்படி எடுத்துரைப்பினும் நம்புவாரெவரே ? கமலினிதன் முல்லை முகைகள் சிறிதுதோன்ற முறுவலித்தாள். இதனைக்கண்ட விஜ

யை " பார்த்தாயா ! கமலினி ! அவ்வளவு சிறுவனாயிருந்தும் கர்வந்
தலைக்கொண்ட மாணிக்கத்தைவென்றான்." என்றாள். கமலினி
" அக்காள் அதோ பார்த்தாயா ! அவர் உன்றந்தையிடமணுகி வந்த
னஞ் செய்கின்றார்." என்றாள். அதற்கு விசையை " ஏது ! சிறுவன்
றிறத்தை மெய்ச்சுவார் என்று எனக்குத் தோன்றவேயில்லை. ஆயி
னுமவர் என்னதான் சொல்கின்றாரோ கேட்போம்." எனலும்
இருவரும் கவனமாய் அப்புறநோக்கி நின்றார்கள்.

அரசன் மதிமுகனை நோக்கி " உன் பெயர் மதிமுகன்றானே,
உன்றிறத்தை மிகவும் மெய்ச்சுகின்றேன். உன்றந்தை யாவரோ?"
என்றதும் " யான் சத்திய வீரப்பிரபுவின் கனிஷ்டபுத்திரன் "
என்று மதிமுகன் கூறினான். சத்தியவீரன் என்ற பெயரைக்கேட்
டதும் இடிமுழக்கங்கேட்ட அராவென்னவும், அசுணர்தம் பெய
ரைக்கேட்ட தேவரென்னவும் சத்தியகீர்த்தி முகம் வெளுத்து ஒரு
வாறாயினான். பின்னர்ச்சிறிது தன்மெய்ப்பாட்டை யடக்கிக்கொண்டு
அரசன் "சத்தியவீரப் பிரபுவின் புத்திரனா நீ ? நன்று. நாளை உனக்
குச் சொல்லி யனுப்புகின்றான்" என்று கூறித் தன் பரிவாரங்களு
டன் அரண்மனைக்குட் சென்றான்.

மதிமுகன் குழாத்துடன் கூடித் தன் நேயர்பலர் ஆசிகூறத்
தன் வீட்டையடைந்தான். இவன் பெயர் முதலிய யாவுஞ்சாளர
வாயிலிருந்த மாதருட் கமலினி வெகு கவலையாய்க் கேட்டனள்.
" என்ன ! மதிமுகன் என்றோ சொன்னார் ?" என்ற இச்சொற்கள்
தாமாகவே அவள் வாயினின்று முற்பவித்தன. இவ்வாறொழுகிய
கமலினியின் மனநீர்மையை யெவ்வாறு விசையை முதலியோர்
உணர்ந்தார்களோ? அரசன் ஏதும் பரிசில் அளியாததைப்பற்றி
வருந்திய கமலினி விசையையினைப்பார்த்து,

" அக்காள் ! உன்றந்தை ஏன் ஏதும் பரிசிலளித்திலர் ? என்னை
யோ எனக்குச் சிறிது வருத்தமாய்த்தான் இருக்கின்றது."

" அவன் சத்தியவீரன் புத்திரன் என்ற பின்னரும் அவர் வெகு
மதி யளிப்பரோ ?

"என்? அப்படிச் சத்தியவீரன் உன்றந்தையின் பகைவனோ?"

"என்ன? அப்படிக்கேட்கின்றாயே! உனக்குத் தெரியாதோ? சரிதான்! உன்றந்தையிடத்து மிகவும் ஆர்வமுற்றவன் சத்தியவீரன். அதனாற்றான் சும்மா லிருந்தனர். எனக்கும் உன்னினும் வருத்த மதிக மாய்த்தானிருக்கிறது."

"பார்த்தாயோ! அரசன் உட்சென்றதுஞ் சனங்களின் முகக் குறியை?"

"முன்னரே தந்தையைச் சனங்கள் விரும்பவில்லை அன்றியும் இஃதொரு பெருங்கலகத்திற் கேதுவா மென்று தோன்றுகின் றது."

"நம் அரசர் இவ்வாறு செய்ததை யவர்கள் தங்களுக்கு அவமா னம் நேரிட்டதாக வன்றோ நினைப்பார்கள்? உலகவியவகாரஞ் சிறி தும் தெரிந்திலர்."

"முன்னரே ஆஸ்தானிகருட் பலர் காருண்யவள்ளலிடஞ் சென்றனர். இப்பொழுது அநேகர் செல்வார்கள் என்பதற் கைய மில்லை."

கமலினி காருண்ய வள்ளலென்ற பெயரைக் கேட்டதுங் கண்களினின்றுந் தாரைதாரையாக நீர்சொரிந்தினள். அப்போ ழுது விசயை "காடோடாயிற்றானல் நாடுகாடாகும். யானும் என் தந்தைசெய்த கொடும்பாதகத்தைக் குறித்து வருந்தவேண்டுவ தில்லை" என்றாள்.

கமலினி வார்த்தையொன்றுஞ் சொல்லாமல் தன் அறைக் குட்சென்றாள். சிறிது நேரத்திற்கெல்லாம் கனகமாலை கமலினி யிடம்வந்து "அம்மா! விசையவல்லி அம்மாள் இன்றைக்கு ஏகாம் பரேசுரரைத் தரிசிக்கவரச் சரிப்படவில்லையாம். ஆகலின என்னை உன்னுடன் செல்லச் சொன்னாள்."

கமலினி "அப்படியே போகலாம்" என்றாள்.

## அத்தியாயம்—VII.

"கொண்டானுயர் மாமிசை கோல்வளையை
மண்டானுறு மின்னின் மயங்கினளால்"

மல்லயுத்தந்தன்றைச் சாயங்காலம் இரண்டு வீரர்கள் போர்க்கோலம் பூண்டு குதிரைமீதேறி ஏகாம்பரேசுரர் கோயிலை நோக்கிச் சென்றனர். கோபுரவாயிலை யுற்றதும் ஒரே சமயத்து இருவரும் நின்றனர். பெருமானுள்வழிப் பரிமாவின்மீதேறிக்கொண்டு சேறலாகா தென்ற பக்தியினுற்றுனே கீழே இறங்கினர்? அவ்விடம் முன்னரேவந்து காத்துக்கொண்டிருக்கு மிரண்டு ஆட்களிடம் குதிரைகளைப் பார்த்துக்கொள்ளும்படி விட்டுவிட்டு உள்ளே போயினர். காலடியும் ஓசைப்படாமல் மெல்லச்சென்று கருப்பக்கிருகத்திற்கு அருகிலிருக்கும் ஒரு தூண்மறைவில் ஒளித்துக்கொண்டனர். சிறிதுநேரத்திற்குப்பின் ஒரு வீரன் மற்றவனைப் பார்த்து,

"ஐயா! அ[illegible]வருகின்றார்கள்" என்றான். மற்றவன் "அடே பேசாதே. அருகில் வருகின்றார்கள்" என்றான்.

ஒருவன் மரியாதையாகக் கூப்பிட மற்றவன் 'அடே' என்று பேசுவதைக் கவனித்தால் ஒருவன் பிரபுவென்றும் மற்றவன் வேலைக்காரனென்றும் உணரலாம். பின்னும் முகத்தை மறைத்த பா[illegible]கயைக் கழற்றலும் அருகிலிருக்கும் எவரும் எளிதிற் சுந்தரன் என்று அறிவார்கள். மற்றவன் குள்ளமாயும் சிறிது பருத்து மிருத்தலின் நம் நண்பர்கள் மாணிக்கம் என்று உணர்வார்கள்.

அபிஷேகம் ஆரம்பித்தார்கள். நம்சுந்தரன் எளிதிற் கமலினி வழக்கப்படி விசையையுடன் வாராமற் கனகமாலையுடன் மாத்திரம் வந்திருப்பதைக் கண்டான். அவள் முகத்தை யருகிற் கண்டதும் நம்சுந்தரன் ஆசையதிகரித்துத் தான் செய்யப்போகும் செயலுக்கு ஒருவித தைரியங்கொடுத்தது. அவன் மனத்தை யலைத்து இவ்வித துர்க்கிருத்தியஞ் செய்யத் துணிவுகொடுத்தது முற்றும் ஆசை

யான் மாத்திரமன்று. இராசாங்க விஷயத்தில் இவன் மனம் தலைக்கொண்டு "கமலினியை மணந்தாற் காருண்ய வள்ளலை மெதுவாகக் காட்டினின்றும் அழைத்துவந்து சத்தியகீர்த்தியை இரகசியமாய்க் கொன்றுவிட்டு பட்டஞ்சூட்டிவிடலாம் பின்னர்க் காருண்ய வள்ளலும் தன்புத்திரியை நாம் இரகசியமாய் மணந்ததற்கு யாதொரு குறையுங்கூறுன். காருண்யவள்ளலோ . வயது முதிர்ந்தவன்; நெடுநாளிரான். இராச்சியம் பின்னர் நம்மதேயாகும்" என்ற பேராசையுங் கொண்டான். சத்தியகீர்த்தியைக்க கொல்ல முடியாமற்போனல் கமலினியையேனும் மனைவியாக அடையலாம். அவனிடத்திற் சென்று கமலினி நாட்டிற்றுனே இருப்பாளாயின் கலகம் விளையும்; முன்னரே அநேக பிரபுக்கள் காருண்யவள்ளலை அடைந்திருக்கின்றுர்கள். ஆகையால் மிகவுஞ் சாக்கிரதையாயிருக்கவேண்டும் என்போம். உடனே நம்மையே மெதுவாகக் கமலினியை மறைந்துவைக்கும்படி அவன் கட்டளையிடுவான்."என்ற எண்ணங்கள் அவன் மனத்தில் தலையெடுத்து நின்றன.

அவ்வாறிருப்ப, சந்திரனைக்கண்டு குவியும் தாமரை யென்னக் கமலினியினது கூப்பிய கையையும், கண்கள் மேல்நோக்கின நிலைமையையுங்கண்டு சுந்தரன் ஆசையென்னும் அக்கினி அவனைக் காணுங்காட்சியென்னுங் காற்றினுல் தூண்டப்பட்டு சுவாலையுடன் விளங்கிற்று.

கமலினி சிறிது நேரத்திற்கெல்லாம் பெருமான் சந்நிதியினின்றுந் திரும்பிச்சென்றுள். சுந்தரன் தாழ்ந்த குரலுடன் "நீ முன்போய்க் குதிரைகளைக் கோபுரவாயிலுக்குவெளியே கொண்டுபோய் வைத்திருக்கும்படி சொல்லிவிட்டு மேலண்டைவாயில் கதவின் அருகிலிரு" என்று மாணிக்கத்தை கட்டளையிட்டான். கமலினி ,மெதுவாக அன்னநடையுடன் சிறிது நேரத்திலடையப்போகிற துன்பத்தை உணராதவளாய் மதிமுகனைப்பற்றிய எண்ணத்துடனே கனகமாலையுடன் சென்றுள். இச்சமயத்தில் இவள் நடையை எம்மால் வருணிக்கமுடியுமோ?

'வல்லியை யுயிர்த்தநில மங்கையிவள் பாதம்.
மெல்லிய வுறைக்குமென வஞ்சிவெளி யெங்கும்
பல்லவ மலர்த்தொகை பரப்பின ளெனத்தன்
நல்லணி மணிச்சுடர் தவழ்ந்திட நடந்தாள்.'

என்று கம்பநாட்டாழ்வார் சீதாபிராட்டியின் நடையைப்பற்றி வருணித்து வனமயூர விருத்தத்திற்பாடியதுதவிர எமக்கு ஞாபகம் வரவில்லை.

மேலண்டைக் கோபுரவாயிலை யடைந்ததும் சுந்தரன் புலி ஆட்டுக்குட்டியின்மீது பாய்தல்போல் கமலினியின் இடுப்பிற் கையைச்சுற்றி மாணிக்கம் பயத்தினுல் முன்னரே மூர்ச்சையாகியவள் முகத்தில் துணியொன்றிட்டு மூடலும் சுந்தரன் எடுத்துச்சென்றான். கனகமாலையோ திடுக்கிட்டு மூர்ச்சையாயினாள். சுந்தரன் அழகிய சுமையுடன் குதிரையின்மீது ஏறிக் காற்றினும் வேகமாகச் சென்றான். மகா இலட்சிமிக்குச் சமானமானவள் தன் முதுகில் ஏறப்பெற்ற சந்தோஷத்தினாலோ இவ்வாறு மனோவேகமாய்க் குதிரையுஞ் சென்றது? மாணிக்கம் முதலிற்சென்றான். சுந்தரன் வீட்டின்பின்புறத்தால் கமலினியை ஒரு கிழவி உதவியால் எடுத்துச்சென்று மூன்றுமாடத்தில் முன்னரே ஆயத்தப்படுத்திவைத்த அறையிற்கொண்டுபோய் ஒரு பஞ்சணையில் வளர்த்தான். அமாவாசை சமீபதினமானதால் இரவுநிலவின்றி இருந்தது. இச்செயலை யாவரும் அறிந்திலர். கனகமாலை மூர்ச்சையினின்று எழுந்ததுந் தனியாயிருப்பதை யோசித்துப் பயத்தினுல் ஓடி விசையையிடம் கமலனிக்கு நேர்ந்த அபாயத்தை நிறுத்தி நிறுத்திக் கூறினாள். விசையை அடக்கமுடியாத வருத்தத்தால் கண்ணீர் தாரை தாரையாகச் சொரிந்துகொண்டு ஓடித்தன் தந்தையிடம்போய்ச் சொன்னாள். அப்பொழுது சத்தியகீர்த்தி கூறுகின்றான்.

"அதைப்பற்றி வெளியே சொல்லக்கூடாது. நமக்கன்றோ அவமானம்? இரகசியமாய் எடுத்துச்சென்றவனை யான் கண்டுபிடிக்கத்தக்க ஏற்பாடுகள் செய்கின்றேன். அன்றியும்,—"

"அப்பா! என்ன அவ்வாறு சொல்லுகின்றீர்களே! அத்துஷ்டர்கள் அவளைக்கொன்றுவிடுவார்களோ என்னவோ? உடனே நமது காவலாளரைச்செல்ல உத்தரவளியுங்கள்."

"விசையே! நீ சொல்வது உண்மைதான். அவள் தந்தையே தன் புத்திரியைக்கொண்டுவரும்படி செய்திருப்பான். ஆகையால் இவ்விஷயத்தில் வெளிப்படையாயிருக்கலாகாது. பின்னும் அவளைப் பரபுருஷன் தொட்டனனாகலால் கற்பழிந்தவளாயினளே! அவளை நாம் மீட்டும் அரண்மனைக்குக் கொண்டுவருவது நம் வம்சத்திற்கே பேரவமானமாம். உன்னை யாராவது கமலினி எங்கே என்றால் தந்தையிடஞ்சென்றாள் என்று சொல்லவேண்டும். கனகமாலையையும் அப்படியே சொல்லச்சொல். இல்லாவிட்டால் அவள் உயிர் நீங்கிவிடுமென்று சொல். செல் சீக்கிரம்."

"தந்தையே! பரபுருஷன் தொட்டால் கற்பழியுமோ? என்ன நீங்கள் சொல்வது மிகவும் விந்தையாயிருக்கின்றதே? அவள் இஷ்டத்துடனோ பரபுருஷன் அவள் உடலைத் தீண்டுகின்றான்? பொன்னைத்தொட்டால் மாற்றுக் குறைந்துவிடுமென்று சொல்பவர்களைப்போலன்றோ இருக்கின்றது? அவள் கற்பழிந்தவளாகத் தாம் நினைப்பது சரியன்று. பின்னும் அவளை உடனே மீட்காதிருப்பது நமது வீரவம்சத்திற் கேற்றதன்றென்று தோன்றுகின்றது. ஒரு பெண்ணிற்கு அபராதம்செய்த அயலானை க்ஷத்திரியர்கள் வேருடன் களைந்த கதைகளை நான் சொல்லவேண்டுமோ? தன் மக்கள் மனைவியர்களை யபகரித்தவனைத் தண்டியாது சும்மாவிருத்தல் ஆண்பிள்ளைத்தனத்திற்கே ஏற்றதன்று?"

"எனக்கு புத்திசொல்லவந்துவிட்டாயோ? நல்லது! நல்லது!! நான் சொல்லியபடி நடக்கக்கடவாய்" என்று சத்தியகீர்த்தி எழுந்துசென்றான். விசையையின் மார்பம் பறைகொட்ட ஒன்றுஞ்செய்யச்சொல்லத்தோன்றாமல் கனவுகண்டுகொண்டே நடந்து செல்லு முயிரென்னத் தன்னறையை அடைந்தாள். அவ்விடம்

கனகமாலை மூர்ச்சையாய்க்கிடந்தாள். அவளைத்தேற்றி அரசன் சொல்லியவைகளைக் கூறினாள்.

இதுநிற்க. முன்னர்க்கூறிய முதியவள் கமலினியை மூர்ச்சையினின்றுந் தெளிவித்து அருகிலிருந்த ஒரு நாற்காலியின்மீது உட்கார்ந்தனள். கமலினி எழுந்து படுக்கையின்மீது உட்கார்ந்து "என்ன அதிசயமாக இருக்கின்றது? என்னுடைய அறை இது தானோ? அல்லவே. கனவுகாண்கின்றேனோ? (கண்களைப்புறங் கையால் துடைத்து) இல்லையே! ஆம்! ஆம்! யாரோ பாவி என்னைத்தூக்கிக்கொண்டன்றோ வந்தான்? ஆ! நான் எங்கிருக்கின்றேன்?" என்றாள்.

"மங்காய்! சத்தியவீரப் பிரபுவின் வீட்டிலிருக்கின்றாய்." என்று மூத்தவள் மிகவும் மரியாதைக்குரலுடன் சொல்லினாள்.

"சத்தியவீரப் பிரபுவின்வீடு! சரிதான். இத்தகைய கொடுஞ் செயல்செய்த பாதகன் எவனோ?" என்று சந்தேகமுற்றவளைப் போலக் கூறினாள்.

"அம்மா! அப்படிக் கூறவேண்டாம். மகாப்பிரபுவாகிய சுந்தரர் உன்மீதுள்ள ஆசையால் அவ்வாறு செய்தார்."

"சுந்தரர்! உண்மையில் ஏதோ இவ்விஷயத்தில் பிழையிருக்கின்றது. யாருக்குப்பதிலாகவோ என்னை அழைத்துவந்தனர்."

"அப்படி எதொரு பிழையுமில்லை." என்று கிழவி சொல்லியதும் சுந்தரன் பிரவேசித்து "இன்றையிரவு நடந்தவிஷயத்தில் யாதொரு தப்பிதமுமில்லை. யான் உன்னை இவ்வாறு நடத்தியதற்காக என்னை மன்னிக்கவேண்டும்."

"என்னை ஆதரிப்பவரிடமிருந்து இவ்வாறு என்னைப் பிரித்துக் கொணர உங்களுக்கு என்ன சுதந்தரமிருக்கின்றது?" என்று கமலினி மிக்க தைரியத்துடன் அதிகாரக்குரலுடன் கூறியதும் சுந்தரன் சிறிது அச்சமடைந்து,

"ஏ பெண்ணே!" என்று தன் மார்பிற் கையைவைத்துக் கொண்டு, "ஏ மங்காய்! என்னை நோவதிற்பயனில்லை. உன்

னுடைய அழகினைத்தான் நீ நோவவேண்டும். உன் எழிலின் மயங்கிய யான் புரியுஞ்செயல்கள் என்னுடையன வாகுமோ ?" என்ருன்.

"என்னுடைய அழகே எனக்குத் தீங்கியற்றியதானுல் இக் கூறிய நகம் அதை பங்கப்படுத்திவிடும்."

"அப்படி நீ செய்வாயானுல் என் உயிர் நிலையாது. அழிந்த அழகினை என் கண்கள் காணவேகாறுது. அவைகளைப் பிடுங்கி முன் கண்ணப்பன் சுவாமி திருவடியில்வைத்தபடி உன் பாதகமலங்களில் வைத்துவிடுவேன்."

உடனே கமலினி "மகாபிரபு !" என்று பரிகாசக்குரலுடன் கோபத்திஞல், "இன்றிரவு நீ புரிந்த தீச்செயல் என்மனத்தைப் பிளந்துவிட்டது. என் எழிலை உயர்த்திக் கூறுவதனுல் உன் பாதகச் செயலை மறந்து விடுவேனென்று எண்ணுதே" எனவும்,

அங்ஙனம் அவள் கற்பினுற் கூறிய சொற்களால் தாக்குண்ட சுந்தரன் "அப்படியன்று கண்ணே! இரக்கமின்றி இவ்வாறு செல்லாதே." என்று கூறினுன். என்னை ? கற்பிற்குத் தெய்வீகமான அதிகாரமிருக்கின்றதன்றே. அதன் அதிகாரத்தினுல் பயமடையாதவனும் இருக்கின்ருனே ?

"முதலில் அவ்விரக்க முன்னிடத்திலிருக்கின்ற தென்பதைக் காட்டு. என்னை அரண்மனைக்கு இப்போதே போகச்செய். பார்க்கலாம். உன்னுல் நேர்ந்த துன்பத்தை என் மனத்திலேயே வைத்துக்கொள்வேன். என்னைச்சேர்ந்தவர்களும் உன் கொலைப் பாதகச் செயலை அறியார்கள் என்று யான் வாக்குத்தத்தஞ் செய்கின்றேன்" என்ருள்.

"இதைத்தவிர வேறு எதை விரும்பினுலும் அளிக்கச் சந்தத்தமாயிருக்கின்றேன். இவ்வறையினின்றும் சுந்தரன் மனைவியாக அல்லாமல் வேறு விதத்தால் சுயேச்சையை யடையலாம் என்று எண்ணுதே" என்று சுந்தரன் உரத்த குரலுடன் கூறினுன்.

"நீ சொல்வது ஒன்றும் எனக்குத் தெரியவில்லை." என்று பயத்தால் மிழற்றும் கிளியைப்போல் கூறினுள். "ஏ! காதற் கிளியே! உன்மீது யான் காதலுற்றிருக்கிறேன்" என்று மெல்லக் கமலினியின் அருகிற்சென்று அவளுடைய அழகிய அஸ்தங்களைப்பற்றி முத்தமிட முயலுகையில் அவள் தன்கையை விடுவித்துக்கொண்டு ஒரு சத்தமிட்டாள். சுந்தரன் சிறிது பயந்து சிறிது தூரஞ்சென்று ஒருநாற்காலியின்மீது விழுந்தான். கமலினியோ மிகவும் மனத்தளர்ச்சியால் ஒருவாறு மூர்ச்சையாயினுள். உடனே சுந்தரன் நாற்காலியினின்று எழுந்து அவளருகிற் சென்று "கண்மணி! யான் உன் கண்ணிற்கு ரமணீயமாக விருக்கவில்லையோ? என்ன அப்படி யான் உன்னை நெருங்கினதும் நாய் கழுதை முதலிய இழிய பிராணிகளினின்றும் ஒதுங்குதல்போலப் பின்னிடைகின்ருயே. ஒருகால் வேறொருவன்மீது காதல் கொண்டிருக்கின்ருயோ?"

கமலினி சுந்தரன் கடைசியிற் கூறியமொழிகளால் மிகவும் திடுக்கிட்டு மதிமுகனைப்பற்றிய எண்ணமானது அதிகரித்து தூக்கத்தில் வார்த்தை சொல்லுபவர்களைப்போல மெதுவாகத் தனக்குள் வார்த்தை சொன்னுள். அப்பொழுது அவளுடைய அதரங்கள் அசைவுற்றதைக்காணின் காதலைத்துறந்து காட்டில் திரியும் கடுந்தவமுனிவரும் ஆசைநோயடைந்து தவிப்பார்கள் என்பதற்கு ஐயமில்லை.

"ஏ! மாதே! உன்னுடைய இரகசிய எண்ணத்தை யறிந்தேன். உன்னுடைய அன்பு வேறொருவனிடத்துப் பொருந்தியிருக்கின்றது. ஆகையால் அவன் என் பங்காளியாவன். அவன் இன்னுன் என்று சொல். அவனை இக்கணமே கொன்று உன் தளிர்போன்ற கரத்தை எனதெனப் பாவிப்பேன்."

இவ்வார்த்தைகளைச் சிறிது வீராவேசத்துடன் கூறியதும் கமலினி மிகப்பயந்து "ஜகதீசுவரா!" என்று கூச்சலிட்டாள்.

"ஏ! நங்காய்! அபலையான உன்னிடத்து இவ்வளவு வீரத்தனத்துடன் கூறியதற்காக என்னை மன்னிக்கவேண்டும். உன்மீது எனக்குக் காதல் மிகுந்திருப்பதால் எனக்கு பங்காளியாக இருப்பவளைப்பற்றிக் காதிலுங்கேளேன்."

"நீங்கள் இவ்வாறு சொல்லுவதால் என்மனத்துயரம் அதிகரிக்கின்றது" என்று சிறிது உரக்க அழத்தொடங்கினாள்.

"யானாவது மிக இழிவான ஜெந்துவாக அவள் கண்களுக்குப் புலனாகவேண்டும். அன்றி இப்பயனற்ற நாரி இழிவான எண்ணத்தினளாயிருத்தல்வேண்டும்." என்று சிறிது கோபத்துடன் கதவின் வழி பார்த்து நின்றான். உடனே முன் சொல்லிய முதியவள் "ஐயா! இம்மாதினிடம் காதல் கூறுவதில் மிகவும் அவசரப்படுகின்றீர்கள்." என்று தாழ்ந்தகுரலில் சுந்தரன் காதிற் சொன்னாள்.

"அம்மா! அப்படியா நினைக்கின்றாய்? ஆயின் யான் செல்லுகின்றேன்." கமலினியைப் பார்த்து "அதோ பார்த்தாயா; இன்னும் அம்மாது அழுகின்றாள். நீ மெதுவாகத் தேறுதல் கூறி என்னை மணப்பதனால் அடையக்கூடிய நன்மைகளை நன்றாய்ச் சொல்லுவாய்" என்று கிழவியிடங் கூறினான்.

"யான் சொல்வதைக் கேளுங்கள். நாளையதினம் நீங்கள் வரும்பொழுது எவ்வளவு அன்புடன் அவள் இருப்பாளென்பதை நீங்களே பாருங்கள்."

"நாளை எவ்வாறேனும் கல்யாணம் இரகசியத்தில் நடத்த வேண்டியது. நாளைக்காலை இங்கு வருகின்றேன். எங்கே பார்க்கலாம் உன்னுடைய தந்திரத்தை" என்று சொல்லிவிட்டுச் சுந்தரன் அவ்வறையினின்றும் வெளியிற் போனான்.

கதவு மூடிய ஓசையைக்கேட்டு கமலினி சிறிது சந்தோஷமாயினாள். சிங்காரமென்னும் அக்கிழட்டுப்பிணம் சுந்தரனை மிகவும் உயர்த்திக்கூறினாள். சுந்தரன் தைரியத்தையும், அவனுடைய

உள்ளத்தையும், புத்திசாலித்தனத்தையும், அழகினையும் உயர்வு நவிற்சியால் கூறினள். அவனுடைய பழைமையான குலத்தையும், பண மிகுதியையும் பற்றிக்கூற மறக்கவில்லை. இத்தகைய துரை மகனை மணக்கக் கொடுத்துவைத்தவள் பாக்கியமே பாக்கியம்' என்று சொல்லினள். இப்பிசாசம் கூறியவார்த்தைகளில் ஒன்றும் நம் கமலினியின் காதிற்படவில்லை; ஏனெனின் அவள் மிகவும் மனத்தளர்ச்சியால் ஒருவகையான மூர்ச்சையுற்றிருந்தாள். அவள் சொற்களுக்கு யாதொரு பதிலுஞ் சொல்லவில்லை. கிழவி கமலினியின் கருத்தில் சுந்தரன் வடிவம் படிந்தது என்று நினைத்தாள். உடனே நன்றாகக் கதவை அடைத்துக்கொண்டு உணவு கொண்டுவந்து கமலினியின் அருகில் வைத்துவிட்டு அவளைத்தன் கையால் தடவி எழுப்பினள். கமலினி இதுயாருடைய பரிசமோ என்று நினைத்துக் கூக்குரலிட்டுக்கொண்டு எழுந்தாள். எழுந்து சிங்காரத்தைக்கண்டு மயங்கி மயங்கி விழித்துத் தலையை யசைத்து உணவு வேண்டாம் என்று சைகை செய்தாள். கிழவி வருத்தத்துடன் கதவை நன்றாக மூடிக்கொண்டு வெளியிற் சென்றாள்.

கமலினியும் மதிமுகனைப்பற்றி நல்ல கனவு கண்டுகொண்டு நித்திரை செய்தாள். சில நாழிகைக்கெல்லாம் விழித்துக்கொண்டு "நான் என்செய்வது?" என்று தன்னைத்தானே பலமுறை கேட்டுக் கொண்டாள். ஒன்றுந் தோன்றாமல் யார் தன்னை மீட்கப்போகிறார்கள் என்றவருத்தத்தால் மனம்நொந்து அழத்தொடங்கினள்.

சுந்தரன் சொல்லிய கொடிய மொழிகளின் அர்த்தத்தை முழுதும் உணர்ந்தாள். அவன் இராக்ஷதமணம் செய்வதில் கருத்துடையவனென்று நன்றாக நம் கமலினிக்குத் தோன்றிற்று. உடனே மதிமுகனுடைய ஞாபகம்வந்தது. அவனிடத்துள்ள காதலை இப்பொழுதுதான் நன்றாக உணர்ந்தாள். மதிமுகனைக்கண்டு சில நாழிகைப்பொழுதுதானே ஆகின்றது. அதற்குள் காதலுற்றனளே. ஆ ! ஆ ! காதலென்னும் பொருள் தெய்வீகமென்பதற்குச் சந்தேகமில்லை. மதிமுகன் மீதுள்ள காதல் இவள் மனத்தில் தோன்றி

யதும் சுந்தரனை மணப்பதன் இழிவு நன்றாக அவள் மனத்தில் குடிகொண்டது. இறந்தாலும் இந்தப் பாதகனை மணஞ்செய்வதில்லை என்று சபதஞ்செய்துகொண்டு ஒருவாறு வருத்தமொழிந்தாள். விசையையேனும் மீட்க உபாயஞ்செய்யாமற் போவாளோ? என்ற நினைவுடன் மறுபடியும் உறங்கத் தலைப்பட்டாள்.

---

## அத்தியாயம்—VIII.

"மாறிலா வீரன்போந்து மங்கையை மீட்டான் மாதோ."

நன்றாக இரவுமுழுதும் மதிமுகன் தூங்கினான். முஷ்டியுத்தஞ் செய்தவனாகையால் உடம்பு ஒருவாறாயிருந்த மதிமுகன் தன் வீட்டின் பின்புறத்துளதாய பூஞ்சோலைக்கண் உலாவச்சென்றான். என்னவோ யோசித்துக்கொண்டு அடிமேல் அடிவைத்து முன்னும் பின்னும் வெருண்டவனென்னப் பார்த்துச்சென்றான். ஒரு கொடியின் அருகில் ஒருபொழுது நிற்பான். அந்தப்பொழுது தோன்றும் விதத்தைப்பற்றி எண்ணுவான். "ஆ! ஆ! இக்கொடி என்ன இனிமையாய்க் காணப்படுகின்றது! நிகரில்லாத ஸ்திரீகளுடைய மெல்லிய உடலுக்கு இணையெனப்போந்து அவமானமன்றோ அடைகின்றது. தன் சக்தியில் மிகுதியும் நம்பியவர் இவ்வாறு தான் துன்பத்திற்காளாகவேண்டும். நாம் இரங்குவதில் யாது பயன்?" என்பான். மற்றொருபொழுது மேடையருகிற்சென்று கையால் தொடுவான். அவ்விடம் பரவிக்கிடக்கும் பனித்துளிகள் முத்தெனக் காண்பதை நோக்கி மனமகிழ்வான். 'சந்திரனாகிய உன் நாயகனைச் சிறிதும் பாராததனால் மனம்வருந்தி ஏராளமாக வியர்வை அரும்பியதோ' என்பான். இவ்வாறு இயற்கைபொருள்களின் அழகினைப் புகழ்ந்துகூறிக்கொண்டு மெல்லெலன நடந்துசென்றான்.

வசந்தகாலச் சூரியன் மிக்க பிரகாசத்துடன் ஆகாயத்தில் உதயமாயினான். அவனுடைய சிவந்த கிரணங்கள் பரவிக்கிடப்பது கமலினிக்குத் தீங்கியற்றியதற்காகக் கோபித்துக்கொண்டெட்

பூவதென்னத் தோன்றிற்று. சிறு கொடிகளின்மீதுற்ற பனித்துளி கள் பரிதியின் கிரணம் படலும் உருகித் தரையில் வீழ்ந்து நமது மதிமுகன் நேற்றையடைந்த வெற்றியுடன் இவ்விடம் வருகின்றான் என்று தன் சந்தோஷத்தைக் காட்டின. நேற்றையடைந்த வருத் தத்தை நீக்குவதற்காகச் சோலையுள்ளே போன மதிமுகன் கன்னங் களில் வசந்தக் காற்றாகிய மாது மிகவும் ஆசையுடன் முத்தமிட்டுக் கொள்வதென்ன மெல்லெனக் காற்றுவீசிற்று. மரங்களெல்லாம் புகையால் மூடியதென்னப் பனியால் மூடியிருந்தன. சூரியனாகிய நாயகன் தன் கிரணங்களாகிய கரங்களாற் பூஞ்சோலையாகிய தன் புதுமணப் பெண்டீரின் வெள்ளிய போர்வையை மெள்ளென இழுப்ப நாணத்தால் (அவைகள்) அசைத்துத் தடுப்பதையொப்ப அப்பனி நீக்கமானது தோன்றிற்று. சிறு பறவைகள் துயிலெழுந்து சத்தஞ்செய்தலானது நம் மதிமுகன் வெற்றியையே விளக்கும் பாடல்களைப் பாடிக்கொண்டிருப்பதாகத் தோன்றிற்று. இயற்கைப் பொருளனைத்தும் இவ்வளவு மகிழ்ச்சியடைந்த விசேஷத்தை ஆரா யுந்தால் என்னவோ நன்மை நம் தலைவனுக்கு நேரிடப்போகின்றது போலும். அழகு என்னும் பொருளையே கருவியாகக்கொண்டு ஒரு கைதேர்ந்த தச்சன்செய்த பிரதிமைக்கு இறைவனருளால் உயிர் சிறிது சிறிதாக வரப்பெற்றதெனக் கமலினி உறக்கத்தினின்றும் எழுந்தாள். முற்பிறப்பின் பழவினை அப்போதைக்கப்போதே பிறவிகடோறும் தோன்றுவதென்னப் பழைய ஞாபகம் வந்தது. இன்றைக்கும் நேற்று வருத்திய வண்ணந்தானே செய்வான் என்று மனமழிந்தாள். என்செய்வாள்? பாவம்! சமயத்திற்கு உபகாரஞ் செய்பவர் யாவருமில்லையே! பூஞ்சோலையைப் பார்த்துக்கொண்டி ருந்த ஒரே சாளரத்தின் வழியே நோக்கி "இக்கொலைபாதகன் தம்பியாகிய மதிமுகனைக் காணுமற்போவோமா?" என்று எண்ண மிட்டுக்கொண்டு நின்றாள். தெய்வத்தின் செயலை உணர்ந்தவர் எவரே! ஆகாததையும் ஆக்குவிக்கும் திறமை அவனுக்கிருக்கின்ற தன்றே. கமலினி எண்ணத்தின் தலைவன் அவளுக்கு முதுகுகாட் டிக்கொண்டு சிறிது தூரத்தில் இருக்கும் மேடையண்டை சாய்ந்

நுகொண்டு 'ரோஜா' புஷ்பம் ஒன்றைக் கையில் ஏந்தி முத்தங் கொண்டான். "நம்மை அவன் அவ்வாறு முத்தங்கொள்ளுநாள் எந்நாளோ?" என்று தன் வருத்தமெல்லாம் நினைவிலின்று ஒழிய வென்றுவாள். மறு க்ஷணத்தில் "என்ன பயித்தியக்காரியாக விருக்கின்றேன்! நானோ சிறையிலிருக்கின்றேன். என்செய் வேன்?" என்று கூறுவாள். உடனே கமலினி கைகொட்டி மதி முகனைக் கையால் வரும்படி குறித்தாள். மதிமுகன் திடுக்கிட்டு நாற் புறமுஞ் சுற்றிப்பார்த்தான். தனக்கு ஒன்றும் கண்ணுக்குத்தென்பட வில்லை. "என்ன இன்னம் சப்தம் கேட்கின்றதே!" என்று உயரப் பார்த்தவுடன் ஒரு சுந்தரச் செல்வி மூன்று மாடியின் சாளரத்தின் அருகில் நின்றுகொண்டு பின்னும் வரும்படி சைகை செய்வதைப் பார்த்தான். கமலினியின் முகத்தின் காந்தியையும் மானென மருண்டு நோக்கும் விழிகளின் தீக்ஷண்யத்தையும், அதிக வெட்கத் துடன் கரங்களால் அழைப்பதையும் புறங்கைகளின் நரம்புகள் அசைவதன் அழகினையுங்கண்டு இம்மாதின் இருப்பிடம் "பாரோ வலாரியின் பாருலகோ, கஞ்சப்பார்வையண்ணலூரோ, விதிதன் பதியோ, மதியின் உதயமோ" என்று சந்தேகித்தான். பின்னர் உயர்ந்த இடத்திலிருத்தலாலும், கண்ணிமைகள் முதலிய அசைத லாலும் இவ்வளவு அழகுடைய நங்கையைக்கண்ட பிரமகன் (பிரமன்) தான் மணவாது வருத்தமடையும்படி செய்யானதலாலும் சிருங்கார ரசமமைந்த மாது "அலைவிக்கும் விடயத்தினின்று நீங்கி, பெருமறைக ளுணர்ந்துமதி மந்தமாய" பிரமன் உலகத்திராள் ஆத லாலும் பூரணை சமீபமாகலாலும் முற்கொண்ட சந்தேகத்தினின் றும் நீங்கினான். கமலினி இடைவிடாது சைகை செய்வதைநோக் கிப் பின்னும் மதிமுகன் நினைக்கின்றான்.

"உண்மையில் ஏதோ பிழைதானிருக்கவேண்டும். அந்நங்கை நம்மைப்பார்த்தன்றோ சைகை செய்கின்றாள்.—என்ன? ஓயாமற் கையால் அழைக்கின்றனளே! யான் கனவுகாண்கின்றேனோ? இல்லையே! உண்மையாக இலட்சுமிக்குச் சமானமான மாதை

யன்றே காண்கின்றேன்! அதுவும் நம்வீட்டின் மூன்றாம்மாடியில். என்னவிஷயமோ? சமீபத்திற் போய்ப்பார்க்கலாம்,'' என்று மதிமுகன் கையையமர்த்தி மிக்க வேகமாய் வீட்டை நோக்கிச்சென்றான். அப்படிப்போகும்போது இவ்வித எண்ணங்கள் அவன் மனத்திலுதிக்கின்றன :—

"அப்பெண் உண்மையாகக் காவலிற்றான் வைக்கப்பட்டிருக்க வேண்டும். நம்மை அக்காவலினின்றும் நீக்குவிக்குமாறு வேண்டுகின்றாள். ஏதேனும் ஒரு பெருங்கஷ்டத்தில் இராவிடின் இவ்வாறு செய்கை செய்யாள். நற்குலத்து மாதர் இம்மாது செய்யுமாறு சைகை செய்யார்கள். இவள் முகத்தைப்பார்த்தால் நற்குலத்தவளென்றே காணப்படுகின்றாள். நாம் இவளை இதுகாறும் பார்த்திலமே! நம்மை அவளுக்குத் தெரிந்திருக்குமோ? இல்லாவிட்டால் அவள் துன்பத்தின் கொடுமையைச் சகிக்க வொண்ணாமல் யாவரேயாயினும் அவரை யழைத்து உதவிபுரியுமாறு வேண்டுவோம் என்று எண்ணினாளோ" என்று மதிமுகன் பலவாறு யோசித்துச் சன்னலுக்கு நேராகக் கீழே நின்றுகொண்டு "அம்மா! என்னத்திற்காக என்னை யழைத்தீர்கள்" என்றான். அப்பொழுது அழுகைக் குரலுடன் கமலினி சொல்லுகின்றாள் :—

"ஐயா! என்னைக்காப்பாற்றவேண்டும்! காப்பாற்றவேண்டும்! கருணைபுரியவேண்டும்!"

"அம்மா! துன்பப்படவேண்டாம். துன்பப்படவேண்டாம். தங்களுக்குத் தீங்கு செய்தவன் இன்னனென்று சொல்லுங்கள்; உடனே அவனைக்கொன்று தங்களை மீட்கின்றேன்."

"அந்தோ!" என்று கமலினி இருகரங்களையும் பிசைந்துகொண்டு "ஒன்றுஞ் சொல்லத் தெரியவில்லையே! கதவைத் தாழிட்டிருக்கின்றார்கள். யான் இவ்வழியாய்த் தங்கள் கைகளிற் குதித்துவிடலாம் என்றாலும் இவ்விரும்புக் கம்பிகள் தடைசெய்கின்றன. என்னை உங்கள் தமயன் சுந்தரன் நேற்றுச் சுவாமி தரிசனஞ்செய்

யும்போது சிறைகொண்டார். தன்னை மணஞ்செய்துகொள்ளுமாறு கட்டாயப்படுத்துகின்றார்" என்று சொன்னாள்.

"அம்மா! யான் உள்ளே வருகின்றேன். என் கையில் ஒரு வாளிருக்கும்வரைக்கும் உங்களை மீட்க முயலுகின்றேன். அப்படியுங்களை மீட்காமற்போனால் என உயிரினால் அடையக்கூடிய பயன் எதுமில்லை. பயப்படாதேயுங்கள்" என்று சொல்லி ஒரு நொடிப் பொழுதில் உள்ளே சென்று இருபுறமுங்கூர்மையான ஒருவாள் ஏந்திக்கொண்டு இரண்டு மாடிப்படிகளையுந் தடையின்றித் தாண்டிச் சென்றான். மூன்றும் மாடிப்படியை நெருங்கலும் ஒருவன் ஏந்திய வாளுடன் எதிர்த்து நின்றான். அவனை மதிமுகன் உடனே மாணிக்கம் என்று தெரிந்துகொண்டான்.

"நேற்று என்னுடன் போர்செய்த வீரனோ? தாங்கள் இவ்வளவு அவசரமாய் இவ்விடம் வருவதற்கு என்ன காரணமோ?" என்று மாணிக்கம் பரிகாசக்குரலுடன் சொன்னான்.

"இம்மாடியினறையில் ஒரு பெண்ணைப் பலாத்காரமாய் யாவனோ தடுத்துச் சிறையிட்டிருக்கின்றான். அவளை மீட்பேனென்று நான் சபதஞ்செய்திருக்கின்றேன். பின்னும் என்னுடையவீட்டில் நீ எவன் என்னை மறித்துக்கேட்பதற்கு? விலகி நிற்பாயானால் பிழைத்தாய். இல்லையேல் உன்னுயிர் இவ்வாளுக்கிரையாகும்." என்று அதிகோரத் தொனியுடன் மதிமுகன் கூறினான்.

"என்னை! உன்னுயிரை யின்று இவ்வாள் குடிப்பதாய்ச் சபதஞ்செய்திருக்கின்றது." என்று மாணிக்கம் வாளைச் சுழற்றினான். உடனே மதிமுகன் சிறிது பின்னுக்குப்போய்த் தானும் போர் தொடங்கினான். மாணிக்கம் நேற்று இவனால் அபஜயமடைந்ததை நினைத்து அவ்வவமானத்தை நீக்கப் பிசாசத்தைப்போல் ஆவேசங்கொண்டு போர்செய்தான். மதிமுகனோ மாணிக்கத்தின் வாள்வீச்சுக்களைத் தடுத்து நின்றான். மாணிக்கத்தைக் கீழேவீழ்த்த நினைக்கவில்லை. இருவரும் இவ்வாறு காயம்படாமல் சிறிது நேரம் வாட்

போர் செய்தனர். தன்னை மீட்பதாய் வாக்களித்த நாதன் இன்னும் வாராததனாற் கமலினி மனந்தளர்ந்து ஒரு கூச்சலிட்டாள். இப்படி இவள் கூவியதானது மாணிக்கத்துக்கு அச்சத்தையும் மதிமுகனுக்குத் தைரியத்தையும் கொடுத்தது.

"எனக்காகப் பயப்படவேண்டாம்" என்று மதிமுகன் கூறிக்கொண்டே மாணிக்கத்தின் கைகளினின்று வாளை விழ்த்துமாறு ஒரு வீச்சு வீசினான். மாணிக்கத்தின் வாள் சிறிதுதூரம்போய் வீழ்ந்ததன்றியும் அவன் தலையில் மிகவும் அபாயமான ஒரு காயமும்பட்டது. அக்காயத்தினின்று மிக்க இரத்தம் புறப்பட்டதனால் மாணிக்கம் மூர்ச்சையாயினான்.

மதிமுகன் கமலினியிருக்கும் அறையண்டைசென்று கதவின் மீது பலமாய் ஒருதை உதைத்தான். கதவு திறந்தது; உடனே கமலினி மிகவும் வேகத்துடன் எதிர்வந்து மதிமுகன் கரங்களில் மூர்ச்சையாயினாள். அவளை யெடுத்து மூன்று மாடிப்படிகளையுந் தாண்டிக்கொண்டு கீழ்முற்றத்திற் செல்லும்போது சுந்தரன் எதிர்ப்பட்டான். சுந்தரன் தன்கையில் ஆயுதமின்மையின் மதிமுகனைக் கோபத்துடன் நோக்கிப் "பாதகா! இப்பெண்ணை ஏன் எடுத்துச்செல்கின்றாய்?" என்றான். "பாவீ! இம்மாதைப் பலாத்காரமாய்ச் சிறையிட்டதன்றியும் மீட்பவனைத் தடுக்கின்றாயா! சாக்கிரதை! தடுப்பையேல் இதோ இருக்கின்றது உன்னை இவ்விடமே வீழ்த்துவதற்கு" என்று மதிமுகன் தன் வாளைக்காட்டிக் கூறினான்.

சிங்காரமென்னும் முதியவள் இச்சமயத்து மாணிக்கத்தின் கையினின்றுங் கீழே வீழ்ந்திருந்த வாளைச் சுந்தரனிடத்திற் கொணர்ந்து கொடுத்தாள்.

மதிமுகன் கமலினியை மெதுவாக ஒரு துணிமீது சாய்ந்துகொள்ளும்படி விட்டுவிட்டுச் சுந்தரனுடன் போர்புரிந்தான். ஒரு நொடியினிற் சுந்தரன் கீழேவிழுந்தான். மதிமுகன் கமலினியின்

முகத்தை நன்றாய்ப்பார்த்தவுடன் ஒரு முத்தங்கொண்டான். முன்போலவே அதிக வேகமாக அவளை யெடுத்துக் குதிரைகளிருக்குமிடத்திற்குப்போனான். நண்பர்காள்! நம்மதிமுகன்மீது கமலினியை முத்தங்கொண்டதற்காகக் குற்றஞ்சாட்டாதீர்கள். கமலினியின் எழிலின்மீது குற்றஞ்சாட்டுங்கள். சந்தோஷக்கலையுடன் கரும்பாம்பினால் உமிழப்பெற்ற சந்திரனைபோன்று விளங்கும் அவள் வதனத்தைக்கண்டு ஆசைகொண்டான். அவளை முத்தங்கொண்டது ஒருவித ஆவேசத்தாலன்றி வேறன்று. கமலினி குதிரைகள் கட்டியிருக்குமிடத்தை யணுகலும் மூர்ச்சை தெளிந்தாள்.

இருள்சீத்து விளங்குமதி யெனத்தமஞ் சிறிதுமிலா
திரவிடையிலொளிர்தீப மெனக்கரைக ளிடிந்துவிழ
வரைக்கணத்திற் றெளிவடையுமலையாருங் கங்கையைப்போ
லுரைசாலும் பொற்புடைய வொள்ளிழையாள் தெளிந்தனளே.

உடனே மதிமுகன் "நீங்கள் எவ்விடஞ் செல்லல்வேண்டும்?" என்று வினவினான். அதற்குக் கமலினி யான் அரண்மனைக்கு ஏக வேண்டுமென்றாள். மதிமுகன் குதிரையின்மீது ஏறிக் கமலினியை ஓர் போர்வையால் மூடித் தன் அருகிலமர்த்திக்கொண்டு அதிக வேகமாய் அரண்மனையை நோக்கிச்சென்றான். வழியில் யாதொரு சம்பாஷணையும் நடக்கவில்லை. அரண்மனையை யடைந்தவுடன் மதிமுகன் "தங்கள் பெயரை யறியலாமோ" என்றான். "என் பெயர் கமலினி என்பார்கள்" என்று கமலினி உத்தரமளித்தாள். சிறிது நேரத்திற்கப்பால் "நாளைச்சாயங்கால முங்களுக்குச் சொல்லி யனுப்புகின்றேன். தாங்கள் கட்டாயமாய் வரவேண்டியது" என்று கமலினி கூறி மிக்க வந்தனமளித்து உள்ளே சென்றாள். மதிமுகனும் குதிரையை விட்டைநோக்கித் திருப்பினான்.

---

## அத்தியாயம்—IX.

"உபகாரம் செய்பவருக்கு அபகாரம் நேரிடும்."

மதிமுகன் குதிரைமேல் ஏறிக்கொண்டு பத்தடி நகருதலும் நால்வர் திடீரென்று அவனை வளைந்துகொண்டனர். அவர்கள் தடித்த உடலினர், கருத்த மேனியர், சிவந்தவிழியினர், பரந்த மார்பினர், ஏந்திய வாளினர், எவரும் எளிதில் அவர்களைப் போர்வீரரென்றே உணர்வார். இந்நால்வருள் ஒருவன் நம்மதிமுகனுடைய குதிரையின் கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டான். மிக்க வலியுடன் பிடித்தனன் ஆதலால் குதிரை முன்னங்கால்களைத் தூக்கிக் கொள்ள மதிமுகன் கீழேவிழுந்தனன். மதிமுகன் விழுந்த அதிர்ச்சியால்மூர்ச்சையாயினன். உடனே ஒருவன் குதிரையை அவ்விடத்திலுள்ள மரத்தில் கட்டினன். மற்றவர்கள் நம்மதிமுகன் பக்கத்திலுள்ள வாளை உறையினின்றும் கழற்றிக்கொண்டனர்; அன்றியும் அவன் உடைகளைப் பரிசோதித்தனர். அவ்விடம் ஒன்றும் காணாமையின் அவனை எடுத்துச்செல்ல யத்தனித்தனர். உடனே மதிமுகனும் மூர்ச்சை தெளிந்தனன். அப்போது அந்த நால்வருள் ஒருவன் உரத்த குரலுடன் "எங்களுடன் வரக்கடவாய், ஓடிப்போகப்பிரயத்தனப்பட்டால் உன் உயிரை மேலுலகத்து அனுப்புவோம்!" என்றான். மற்றவன் "இவன் கண்களைக் கட்ட வேண்டாமோ?" என்றான். மூன்றாமவன் துணி ஒன்றுகொணர்ந்தான். நான்காமவன் கண்ணை இருகக் கட்டிவிட்டபின் மதிமுகன் தன்னை அவர்கள் சிறைகொண்டு செல்லும் சமயத்துப் பின் வருமாறு எண்ணுகின்றான்:—

"இஃதென்னை விநோதமாயிருக்கின்றது!! யான் என்ன பிழை இயற்றினேன்? என் மனமார ஒன்றும் செய்யவில்லை என்றே தோன்றுகின்றது. இவர்களைக் காணின் வீரர்கள் போலத் தோன்றுகின்றார்கள். இவர்கள் செயலினை ஆராய்ந்தால் மறவர்களென்றே மதிக்கவேண்டியிருக்கின்றது. ஆயினும் அவர்களைகேட்

கின்றேன் ; என்னதான் சொல்லுகின்றார்களோ? பார்க்கலாம்'' என்று மதிமுகன் வீரர்களைப்பார்த்து "உங்களைப்பார்த்தால் சுத்த வீரர்போலத் தோன்றுகின்றீர்கள். உங்கள் செயல் உங்கள் வீரத்தவத்திற்கு ஏற்றதாமோ? உங்களிடத்து யான் சிறிதும் அபசாரப் பட்டிலேன் என்று யான் தைரியமாய்க்கூறுவேன். மற்று என்னுடன் போர்செய்யு மெண்ணமுடையவராயின் ஒவ்வொருவராய் வாருங்கள், போர்புரியச் சன்னத்தனாக விருக்கின்றேன்" என்றான். அப்பொழுது நால்வருள் ஒருவன் "எங்களுக்கு யாதொரு விஷயமும் தெறியாது. கட்டளைப்படி நடக்கின்றோம், எங்களுக்கு நேரே ஏதொரு பிழையும் செய்திலீராயினும் எங்களை ஆட்கொண்டவருக்குப் பிழைசெய்திருக்கின்றீர்'' என்றான்.

"உங்களை இக்கொடிய செயல் செய்யுமாறு ஏவின மகா சுத்த வீரன் யாவனோ? தெரிய மிகவும் ஆவலுடனிருக்கின்றேன்'' என்றான் மதிமுகன்.

"அப்படி அவர்தம் பெயரைக்கூறுவதில் யாதொரு பிரயோஜனமுமில்லை. இனிமேதும் என் எஜமானரை இழிவுபடுத்தும் சொற்கள் உன்வாயினின்றும் உத்பவிக்குமாயின் இவ்வாளினால் இருதுண்டாய் வெட்டிவிடுவேன் ஜாக்கிரதை!'' என்றான் அந் நால்வருள் தலைவன்.

பலபுலிகளால் சூழப்பெற்ற ஆட்டினைப்போல வலியிழந்து மதிமுகன் அவர்கள் கட்டளைப்படி நடக்கலாயினான். என் செய்வான்? பாவம்! தலைக்குமேல் வெள்ளம்வந்துவிட்டது. வந்தது வந்தே தீரும். எல்லாம் அவனருள் ; எல்லாம் அவன் செயல். நால்வருட் டலைவன் உரத்த குரலுடன் "சும்மா எங்களுடன் வருவையேல் உன் உயிர் பிழைக்கும். எங்களினின்றும் தப்பிக்கொள்ள முயலுவையேல் உயிர் உன்னை அளவும் சிறையினின்றும் நீங்காய்'' என்றான்.

ஏறக்குறைய அரைக்காவததூரம் போவதாய் மதிமுகன் உணருமாறு சுற்றி அவனை அழைத்துக்கொண்டு இறுதியில் ஓர் அறை

யில் உய்த்தனர். அவ்வறையில் போம்போது இவ்வித எண்ணங்கள் அவன் மனத்தில் உதிக்கின்றன :—

"யார் நம்மை இவ்வாறு சிறையிட்டனர்? ஒருகால் சுந்தரன் ஏவலினாலோ? பின் கமலினியைக் குதிரைமீது ஏற்றிக்கொண்டு வந்தோமென்று அரசன் உணர்ந்து இவ்வாறு செய்தனனோ? எனக்கு ஒன்றும் தோன்றவில்லையே! என்னை யாதுகாரணம்பற்றி சிறையிட்டனர்? ஒருகால் இவர்கள் திருடர்களோ? அப்படித்தானிருக்க வேண்டும். சில நாட்களாய்ச் சத்தியகீர்த்தியின் கொலைப்பாதக அரசுமுறையை விரும்பாதவராய்த் திருட்டுத்தனத்தைச் சிலர் கைக்கொண்டு வாழ்கின்றனர் என்று நாம் கேள்விப்பட்டிருக்கின்றோமல்லவா? விதியின் வழி எல்லாம் நடக்கின்றன" என்று ஒருவாறு தேறினான்.

இவனை உள்ளே அடைத்து வீட்டுக்கதவை நன்றாய்த் தாளிட்டு அவர்கள் வெளியே போயினர். காலடி ஓசை அடிக்கடி கேட்டதனால் மதிமுகன் ஒருவன் காவலாயிருக்கின்றான் என்று உணர்ந்தான். சிறிது நேரத்திற்கெல்லாம் ஒரு பணிப்பெண் உணவுகொணர்ந்து பரிமாறினாள். மதிமுகன் துக்கமேற்கொண்டவனேனும் நன்றாக உண்டான். அப்பெண்ணைப்பார்த்து "அம்மா, யான் எவ்விடமிருக்கின்றேன்?" என்று வினவினான். "என்னவோ எனக்குத் தெரியாது. உங்களுக்கு என்னவேண்டுமோ அதைக்கூறுங்கள். அவைகளை அளிக்குமாறு எனக்குக் கட்டளையேயொழிய வேறு ஏதும் சொல்லக்கூடாது" என்றாள் அப்பெண். மதிமுகன் நடந்த இளைப்பால் பகல் முழுதும் நன்றாய்த் தூங்கினான். பிற்பகலில் அப்பணிப்பெண் மறுபடியும் உணவுகொணர்ந்து பரிமாறினாள். மதிமுகன் உண்டதும் முன்போலவே நால்வர் உள்ளேபோயினர். அவன் கண்ணிணைக்கட்டினார்கள். சிறிதுதூரம் அழைத்துக்கொண்டு முன்னரே காத்துக்கொண்டிருந்த குதிரை கட்டிய ஒருவண்டியின்மீது முதலில் இருவர்சென்று உட்கார்ந்தார்கள். பின்னர் மதிமுகன் உட்கார்ந்தான். மற்றைய இருவரில் ஒருவன் வண்டியின்

பின்னும் மற்றையவன் குதிரை ஓட்டும் ஸ்தானத்தில் உட்கார்ந்தார்கள். வண்டியும் அதிவேகமாகச்சென்றது. எத்திசைநோக்கிச்சென்றதோ நம்மதிமுகன் உணரவில்லை. ஆயினும் நம் நண்பர்கள் தீவாந்தை நோக்கிச் செல்கின்றது என்று அறிவார்கள். மதிமுகன் நிராயுதபாணியாய் இருப்பதினாலும் கண்ணைக்கட்டிவிட்டதனாலும் தப்பித்துக்கொள்ளப் பிரயத்தனப்படவில்லை. அப்படிப் பிரயத்தனப்பட்டு இருந்தவனேனும் பயன்படாமலேதான் போயிருக்கும். மாலைப்பொழுதில் வண்டியானது கற்படுத்திய தரையின் மீது போவதாய் மதிமுகன் உணர்ந்தான். வண்டியும் நின்றது. உள்ளேயிருந்த இருவரில் ஒருவன் "இனி இந்தக்கட்டு வேண்டியதில்லை" என்று அவிழ்த்தான். மூவரும் வண்டியினின்றும் அதிஜாக்கிரதையாய் இறங்கினார்கள். எந்திய வாளுடைய எட்டு வீரர்கள் மதிமுகனை உள்ளே அழைத்துச் சென்றனர்.

சிறிது நேரத்திற்கெல்லாம் ஒரு வீரன் இடுப்பிற்கட்டிய வாளுடன் வந்தனன். உடனே நம்மதிமுகன் தன்னைச்சுற்றி இருக்கும் எண்மர் மரியாதையாய் விலகி இருத்தலால் சிறைகாவலாளரின் தலைவனானவன் என்று அறிந்து "ஐயா! உண்மையாக யான் யாருக்குப் பதிலாகவோ கொண்டுவரப்பட்டேன் அதற்குச் சந்தேகமே இல்லை" என்றான்.

"ஐயா! எப்பொழுதும் யாங்கள் பிழை செய்யவேமாட்டோம். இச்சிறைக்கு யாவர்தாம் வரினும் அவர்கள் குற்றவாளிகளே என்பதற்குச் சந்தேகமேயில்லை."

"ஆயினும் ஐயா! யான் வேண்டுவனவற்றைச் சிறிதுகவனத்துடன் கேட்டு அளிப்பீர்களாயின் மிக்க வந்தனமுடையவனாயிருப்பேன்."

"அஃதென்னையோ? என் வேலையைத் தவிர யான் ஒன்றும் செய்யமுடியாது."

"ஆயினும் தம்மிடத்து என் குற்றத்தைப்பற்றி அறியவிரும்புகின்றேன்."

"எமக்குத்தெரியாது."

"என்மீது குற்றஞ் சாட்டியவன் பெயரையேனும் அறியவிரும்புகின்றேன்."

"அதுவும் எனக்குத்தெரியாது."

"என்னுடைய பெயர்தான் என்ன? அதையேனுங் கூறுங்கள். என்னை அழைத்துக்கொண்டு வந்ததில் பிழை ஒன்றும் இல்லையோவென்று அறிந்துகொள்கின்றேன்."

"பெயரைப்பற்றி இங்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை."

இத்தருணத்து முப்பத்தி யைந்து வயதுள்ள ஒரு வைதிகப் பிராம்மணர் பஞ்ச கச்சம்வைத்து வேஷ்டி உடுத்து துவாதசத்திருநாமம் சாத்திக்கொண்டு எதிர்ப்பட்டனர். அவர்முகத்தில் ஒருவித வசீகரிக்கும் தன்மை யுள்ளதுபோலத் தோன்றும். அவரைக் கண்டவர் எவரும் பணியாது ஒழியார். பின்னும் வைதீகப் பிராம்மணர் மூகத்திலேயே இருக்கும் ஒருவகை முகவிலாசமும் தோன்றிற்று.

காவலர் தலைவன் குருவெனப் போற்றும் சடகோபரை வணங்கி, "ஐயா! இவர் இன்று புதிதாக வந்தவர். இவர்காலத்தைச் செம்மையாகக் கழிக்க அப்போதைக்கப்போது உபதேசம் செய்ய வேண்டுகின்றேன்" என்று கூறினன்.

"யான் செய்யவேண்டிய வேலையைச் சரியாய்ச் செய்வேனென்று தோன்றுகின்றது" என்றூர் குரு முனிவர்.

"இவரைப் பன்னிரண்டா மறையிற் கொண்டுபோய் விட்டுவிடுங்கள் என்று காவலன் கட்டளையிட்டான். உடனே இருவர் அவ்வறையில் கொண்டுசென்றனர். சடகோபரும் நம்மதிமுகனுக்கு உடனே வருவதாக வாக்களித்துச் சென்றனர்.

அச்சிறையின் அறை பன்னிரண்டு அடி சதுரமாகவும் பத்தடி உயரமாகவும் இருந்தது. ஒரு சாளரம் மிகவும் உயரத்தில் வைத்தி

ருந்தது. அதன் வழியோ மிகவும் பருமனான இருப்புக்கம்பிகளால் நெருக்கமாக அடைக்கப்பட்டிருந்தது.

ஒரு படுக்கையும் நாற்காலியும் படிப்பதற்குச் சில புஸ்தகங்களுமே அவ்விடத்துள்ள சாமான்கள். அப்புஸ்தகங்களாவன: திருவாய்மொழி, தேவாரம், திருவாசகம், நித்தியானுஸந்தானம் முதலியன. மதிமுகன் தன் துன்பத்தையும் மறந்து கமலினியைப்பற்றி எண்ணிக்கொண்டிருந்தான்.

இவ்வாறு இரண்டு நாழிகை கழிந்தன. நம்மதிமுகன் எப்பொழுதும் தெய்வபக்தி உள்ளவனாயினும் துக்கமேற்கொண்டவனாயினனே; ஆதலின் இப்பொழுது பெரிதும் சடகோபரது வரவினை ஆவலுடன் எதிர்பார்த்து நின்றான். சிறிது நேரத்திற்கெல்லாம் அறையின் கதவங்கள் திறக்கப்பட்டன. சடகோபர் மதிமுகன்முன் நின்றனர். உடனே சடகோபர் சிறைக்காவலனை நோக்கி ஒரு நாழிகைகழிந்தபின் வருக என்று உத்திரவளித்தார். உடனே அவன் அறையை வெளியே தாளிட்டுச் சென்றனன்.

நம்மதிமுகனும் அவரை நமஸ்காரம் செய்தான். என்னவோ நம்மதிமுகன் கரங்கள் அவர்காலிற்பட்டதும் வெறுப்புடன் பின் இடைந்தார். உடனே மதிமுகன் "ஸ்வாமி! தாங்கள் இவ்வாறு பின்னிடைவதன் காரணத்தைத் தெரிந்துகொண்டேன். ஏதேனும் கொலைப்பாதகச் செயல் செய்ததனால் சிறை செய்யப்பட்டேன் என்று எண்ணுகின்றீர்களோ? தாங்கள் அவ்வாறு எண்ணுவது மிகவும் சகஜந்தான்" என்றான்.

"அப்பா! உன் முகத்தைப் பார்த்தால் அத்தகைக் கொடிய செயல் செய்திராய் என்றே தோன்றுகின்றது. இச்சிறையிற் கொணரப்படுபவர் யாவரும் இறந்த பிறகுதான் சுவாதீனத்தை அடைவர். இச்சிறைச்சாலையின் சட்டத்தில் ஒருவரும் சிறையாளிகளின் உடலினைத் தீண்டல் ஒண்ணாது என்றிருக்கின்றதனால் அவ்வாறு பின்னிடைந்தேன். மற்றொன்றுமில்லை."

"சுவாமி! யான் செய்த குற்றம் இன்னதென்று அறியவிரும்புகின்றேன். தங்களுக்குத் தெரிந்திருக்குமாயின் தயவுசெய்து சொல்லுங்கள். யாவரிடத்திலேனும் அறிந்திருப்பீர்களே."

"யாவரும் என்னிடத்தில் உரைக்கவில்லை. மற்று இச்சிறைச்சாலையில் உள்ள எவரும் உன் குற்றத்தை அறியார். காவலர் தலைவனும் அறியான்."

"அப்படியாயின் கருணைகூர்ந்து யான் சொல்லுவதைக் கவனமாய்க் கேட்டருளவேண்டும்" என்றான் மதிமுகன்.

"நீ கூறுவனவற்றை யான் கேட்கக்கூடாது. இச்சிறைச்சாலையின் சட்டங்களுக்கு நேர்விரோதமாம்" என்றார் சடகோபரும்.

"ஓ! தெய்வமே!" என்று மேல் நோக்கியக் கண்களுடனும் கூப்பிய கரத்துடனும் மதிமுகன் நின்றான்.

"அப்பா ஏன் வருத்தப்படுகின்றாய்? ஸ்ரிய:பதியாய் அவாப்த ஸமஸ்தகாமனாய் ஸமஸ்தகல்யாண குணாத்மகனான ஸர்வேசுரன் உன்னை அளிப்பார் என்பதற்கு ஏதும் ஐயமில்லை. உன் முகத்தைப் பார்த்தால் மகா குணவானென்று தோன்றுகின்றது. அநித்தியவாழ்வையுடைய இந்நரர்களால் என்னசெய்யக் கிடக்கின்றன. அப்படிச் செய்தாலும் அதுவும் அவன் செயலே.

> "நித்த நிகழ்கின்ற நீலலகின் மாந்தர்செய
> லத்தனையு மீசனருள்."

உடனே மதிமுகன் முனிவரது தாட்களில்வீழ்ந்து பாதாரவிந்தத்தைக் கண்ணில் ஒற்றிக்கொள்ள எத்தனித்தான். உடனே சடகோபர் பின்னிடைந்தார். அப்பொழுது, "சுவாமி! குற்றவாளியின் பரிசத்தினின்று பின்னிடைதல்போலப் பின்னிடைகின்றீர்களே! தாங்களே என் குற்றத்தை நம்பவில்லை என்கின்றீர்கள். ஐயோ! என்னைக்காப்பாற்றுபவர் ஒருவரும் இல்லையோ! இச்சமயத்து உதவத்தக்க நண்பர்கள் எவருமில்லையே" என்றான் மதிமுகன்.

"இச்சிறையில் குற்றவாளியெனவரும் எவரிடத்திலும் யான் நட்புப்பாராட்டலாகாது. குற்றவாளியின் பரிசமுமாகாது. அவரிடத்து இரக்கமும் கொள்ளலாகாது."

"ஆயின் யான்வைத்த நம்பிக்கையும் பயன்படாமல் போயிற்று."

"அப்பா என்னிடம் தெய்வத்தின்மீது வைத்திருக்கும் நம்பிக்கையொழிய வேறு எவ்வித நம்பிக்கையும் இனிவைக்கலாகாது."

"சுவாமி! என்விருத்தாந்தத்தைத் தாங்கள் கேட்குமாறு யான் கூறவேனுயின் என்ன செய்வீர்கள். தாங்களும் சிறிதுநேரம் இவ்விடம் என்னைப்போலக் காவலிற்றுனே இருக்கின்றீர்கள். ஒரு நாழிகைக்காலம் இங்கு இருக்கத்தானேவேண்டும்" என்று மதிமுகன் மிகவும் தக்கமேற்கொண்டவனுகக் கூறினன்.

"நீ அவ்வாறு செய்வையேல் மறுபடியும் உன்னைப் பார்க்க வரவேமாட்டேன்."

"ஐயா! அப்படியாயின் நாம் எதைக்குறித்துப் பேசலாம் அதைத்தான் சொல்லுங்கள்."

"நீ இன்ன காரணங்களைப்பற்றிச் சிறையிடப்பட்டாயென்று உனக்குத் தெரிந்திருப்பினும் என்னிடம் கூறலாகாது."

"உங்களுக்குத் தெரியாமலே அக்காரணங்களைச் சமத்காரமாய்க் கூறவேனுயின் தங்களுக்கு யான் சொல்லக்கூடாதென்றதைத்தான் கூறுகின்றேனென்று எப்படி நீங்கள் அறிவீர்கள்?"

"அவைகளையெல்லாம் சொல்லவேண்டாம். என்னுடன் எவ்விஷயங்களைப்பற்றிப் பேசவேண்டும் என்றுயே அவைகளைக் கூறுகின்றேன். வேதாந்த விஷயங்களைப்பற்றிப் பேசலாம். பின்னும் புத்திமதிகளை விளக்கும்படியான சிறு கதைகளைக் கேட்கவேண்டுமென்றாலும் கூறுவேன். கேட்கலாம். வேறு சாதாரண விஷயங்களைப்பற்றியும் பேசலாம்."

"சாதாரண விஷயங்களைப்பற்றிப் பேசலாமென்கிறீர்களே, அது மிகவும் எனக்குச் சந்தோஷத்தை விளைவிக்கின்றது. அப்படியா

யின் சத்தியகீர்த்தியைப்பற்றித் தங்களுக்கு என்ன தெரியுமோ அதைச் சொல்லுங்கள்.

"ஸர்வதாரி வருஷம் தைமீ ௰-ஆம் தேதிவரையும் அவனைப் பற்றித் தெரியும். இப்பொழுது ஒன்றரை வருஷமாகிறது எனக்கு ஏதும் தெரியாது."

"அவன் பட்டத்திற்கு வந்ததினமல்லவோ அத்தினம்."

"ஆம். அதன்பின் யான் இவ்விடம் வந்துவிட்டேன். அப்பொழுது யான் செய்த ஒரு பாவத்திற்காக என்மனம் பொறுமல் இவ்விடம் என் காலத்தைக் கழிப்பதாக எண்ணிவந்துவிட்டேன்."

"தாங்கள் பாபம் செய்தீர்கள்!!"

"ஆம். யானே காருண்ணியவள்ளலைக் காட்டிற்கு அனுப்பியவன். அவனல்லன். யானே அவனை யனுப்பினேன். அதுமுதல் அவ்விடம் எனக்கு இருப்பதற்குப்பிரியமில்லை."

"சிறிதுநேரம் சும்மாவிருந்தனர். பிறகு சடகோபர் என்ற முனிவரர் இவ்வாறு கூறுகின்றார்: "யான் இவ்விடத்தில் சிறையாக வைக்கப்பட்டிலேன். இரவு நடுஜாமத்தும் யான் வெளியே போகலாம். என் உடையைக் கண்டதும் ஒரு கேள்வியும் கேளாது வெளியே போகவேண்டுமாயினும், உள்ளே செல்லவேண்டுமாயினும் காவலாளிகள் விடுவார்கள். உன்னைப்போல 'யானும் சிறைப்பட்டவன் என்றேயே அதனாற்றான் இவைகளைக் கூறினேன்."

"அப்படித் தங்களைக் கூறலாமோ."

"நீ இவ்விடம் வந்ததும் யான் எவ்வறையினின்றும் வந்தேனென்று பார்த்தாயா?"

"ஆம் பார்த்தேன்."

"யான் வந்த அறை ஒரு மாடிப்படிக்கு அழைத்துச் செல்லும். அம்மாடிப்படியின் உச்சியை அடைந்ததும் ஒன்றற்கொன்றுஎதிராக

இரண்டு கதவுகள் உள்ளன. வலக்கைப்புறமாக இருக்கும் கதவைத் தொட்டதும் திறக்கும். அதுதான் என்னறை. அவ்வறையில் விநோதமான வேலைப்பாடுசெய்த ஒரு பெட்டி இருக்கின்றது. அப்பெட்டியில்தான் யான் பணம் முதலானவை வைத்துக்கொள்கிறது வழக்கம். ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் ஏழைகளுக்குப் பிச்சையிடுவது வழக்கம். சரிதான். என்னவெல்லாமோ கூறுகின்றேனே."

"சுவாமி தங்கள் இரக்கமுடைமை இவைகளை எல்லாம் சொல்லச்செய்தது—' என்று மதிமுகன் கூறியதும் சடகோபர் சிறிது முகம் வெளுத்தார். இச்சமயத்துக் காவலாளன் அறையைத் திறந்தான். இருவரும் திடுக்கிட்டு நின்றனர். உடனே காவலன் கூறுகின்றான் :—

"சுவாமி, யான் சீக்கிரம் வந்துவிட்டேனோ?"

"இல்லை. இல்லை. இதோ வருகின்றேன்" என்று சடகோபர் அறையினின்றும் சென்றார்.

மறுபடியும் கதவை மூடிக்கொண்டு காவலாளன் சென்றான்.

மதிமுகன் தனிமையாயிருந்தான். ஒருகால் அவன்தன் மனத்தின்கண் என்னவோ நம்பிக்கையெல்லாம் உண்டாயின. மற்றொருகால் அவன் மனத்தின்கண் ஒரு பக்கம் நம்பிக்கையும் ஒரு பக்கம் துன்பம் விளைவிக்கும் சந்தேகமும் உற்பவித்தன. 'சடகோபர் ஏனென்னுடன் அவ்வாறெல்லாம் வார்த்தையாடவேண்டும்?' என்ற வினா பன்முறை அவன் உளத்தில் நிகழ்ந்தது. "என்மீது இரக்கத்தினாலோ அவ்வாறெல்லாம் கூறினர். அன்றிக் காட்டிக் கொடுக்கலாமென்று நினைத்தனரோ? அவர்கூறியவற்றில் ஏதேனும் உள்ளுறை பொருந்தியுள்ளதோ?" என்று சொல்லிக்கொண்டே அவர் கூறியவைகளை அடிக்கடி மனத்தில் நினைத்துக்கொண்டு நல்ல எண்ணத்துடன்தான் அவர் கூறினர் என்ற தீர்மானத்திற்குக் கடைசியில் வந்தனன்.

சில நாழிகைகளானவுடன் சிறைக்காவலன் உணவு கொண்டு பரிமாறினன். நம்மதிமுகன் மிகவும் சிறிதுதான் அப்பொழுது

உண்டான். ஏனெனின் அவன் எண்ணங்கள் பிரிவுபட்டு நம்பிக்கைக்கும் சந்தேகத்திற்கும் மத்தியில் ஊசலாடிக்கொண்டிருந்தன?

சிறிதுநேரத்திற்கெல்லாம் "நாம் நன்றாகவே எல்லாவற்றையும் எண்ணலாம். எப்படி முடிந்தாலும் முடிகின்றது. முனிவர் சொல்லியவண்ணம் ஓடுவதற்குத் தகுந்த ஏற்பாடுகளைத்தும் செய்து வைப்போம். அவரை இவ்வறையிற் கட்டிப்போட்டுவிட்டு, வாயையும் துணியாலடைத்துவிட்டு அவர் தம் உடையை உடுத்திக்கொண்டு நான் இரவு நழுவிவிடலாம்.—சீ! முனிவராயினரே! அவரை இவ்வாறுவருத்தலாமோ. அதைவிடக்கொடும்பாதகம்என்ன இருக்கின்றது 'தன்னினும் அடியவர் மேலானவர்' என்று எத்தனை முறை ஸ்ரீ கிருஷ்ணபகவான் முறையிட்டு இருக்கின்றனர். நாம் அவ்வாறு செய்யலாகாதே! என்ன இப்படியெல்லாம் எண்ணுகின்றோமே? அவர் தாமே இவ்வகை எண்ணங்களை எல்லாம் நம்மிடத்து உதிக்குமாறு செய்தனர். என்மீது இரக்கமில்லாவிடின் ஏன் அவர் இவ்வாறு வார்த்தையாடவேண்டும்? நாம் எப்படியாவது தப்பித்துக்கொள்ளவேண்டியதுதான் என்று கடைசியாய்த் தீர்மானித்தான். உடனே படுக்கையின்மீது போட்டிருக்கும் துணியை நீளம் நீளமாகக் கிழித்து ஒரு கயிறாகத்திரித்தான். இவ்வேலையை முடித்ததும் இவ்வாறு யோசிக்கலாயினான்; "இம்முனிவர் தாம் ஏதோ சிறு பிழை முன் செய்ததற்காக மிகவும் வருந்துகின்றனர். அன்றி இச்சிறைச்சாலையின் ஒழுங்குகளை இவர் இம்மியளவும் தாண்டுகின்றாரில்லையே! நம்மைத் தப்பித்துக்கொள்ளுமாறு அவர் குறித்தனரே. அவ்வாறு செய்தல் அவர் மனசாக்ஷிக்கும் விரோதமாயிற்றே. அவ்வாறு செய்ய அவர் ஏன் உடன்படவேண்டும்? அவர் இறக்கமுடைமையே அவ்வாறு செய்திருக்கவேண்டும். அன்றியும் இறைவனன்றே இவ்வாறு இவரை நம்மிடத்து வருமாறு செய்தனர்." என்று யோசித்துக்கொண்டு கரம்கூப்பித் தலைகுனிந்து பின்வரும் பாடலை மிகவும் பக்தியோடு இசைகூட்டிப் பாடினான்.

"எல்லாமு னடிமையே யெல்லாமு னுடைமையே
யெல்லாமு னுடையசெயலே
யெங்கணும் வியாபிநீ யென்றுசொலுமியல்பென்
றிருக்காதி வேதமெல்லாஞ்
சொல்லான் முழக்கியது மிக்கவுபகாரமாச்
சொல்லிறந் தவருஞ்விண்டு
சொன்னவையு மிவையல்ல குருவான பேருந்
தொகுத்தநெறி தானுமிவையே
யல்லாமல்லவென நன்றுவறிந்தே
யறிந்தபடி நின்றசுகரு
ருகாதவண்ணமே யிவ்வண்ணமாயினே
னருவுமென தருளென்னவே
கல்லாதவறிஞனுக் குள்ளே யுணர்த்தினை
கதிக்குவகை யேதுபுகலாய்
கருதரிய சிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே.

பாடி முடிந்ததும் கண்ணுறங்கிவிட்டான். ஆனால் அவன் கனவு கண்டுகொண்டு இரண்டு மூன்று விசை திடீரென்று தூக்கத்தில் எழுந்தனன்.

---

## அத்தியாயம்—X.

"மலைவெனும் புயமுறு மதிமுகத்தினன்
உலைதவிர்ந்துற்றன னெளிருந்தியிலே."

தன்னைக் கஷ்ட ஸ்திதியினின்று நீக்குதற்கேற்ற காலத்தை யாவலுடன் எதிர்ப்பார்ப்பவர்க்குக் காலம் வளர்வதாகத் தோன்றுமன்றே! அன்றை மத்தியான முழுவதும் மதிமுகனுக்கு ஒருயுகமாக விருந்தது. ஆம். காரணமின்றிக் கொடிய பாவிகளால் சிறையிடப்பட்ட நந்தம் தலைமகன் தெய்வகதியாற் சிறையினின்று தப்பித்துக்

கொள்ளச் சமயம் வாய்க்குமாகில் அச்சமயத்தை எவ்வளவு ஆவலுடன் எதிர்ப்பார்ப்பான்! தான் சிறையினின்று நீங்குதற்கு முக்கியமான காரணரான சடகோபர் பகல் முழுதும் காணப்படவில்லை. மதிமுகனுக்கு ஒருவிதமான அதைரியமுண்டாயிற்று. "நான் தப்பித்துக்கொள்ளினும் எவ்விடம் செல்வது?" என்றும் சந்தேகம் அவன் மனத்திற் பன்முறை உதித்தது. என் செய்வான் பாவம்! காஞ்சிக்குச் சென்றானாயின் சுந்தரன் பகைமை கொண்டு இவனைத் தொலைப்பதற்கு அஞ்சான். மற்றும் மாணிக்கமோ இருவிசை தோல்வியடைந்தவன். அவன் தன் புயவலியால் கொல்ல எண்ணானேனும் தந்திரத்தால் கொல்ல எண்ணுவான். தூரமான பிரதேசத்திற்குச் செல்லலாம் எனின் கையிற பணம் கால்காசுமில்லை. மதிமுகன் உடனே யெண்ணுகின்றான்: "ஐயோ! எவ்வாறு காஞ்சியினின்று செல்ல முடியும்? என்னுடைய மனத்தைக்கவர்ந்த இன்பவல்லியைவிட்டு எவ்வாறு வாழ்வேன்? கண்டு சிறிது நேரமானதும் காதல்கொண்டேனே. அவளுடன் சிறிதுநேரமேனும் வார்த்தை சொல்ல முடியாமலன்றே போயிற்று. எவ்விதத்திலும் தௌர்ப்பாக்கியமுடையேன் யான். உடன்பிறந்த தமையன் என்னை விரும்பவில்லை. காரணமின்றிச் சிறையிலும் அடைக்கப்பட்டேன். மிக்க சுந்தரமுடைய மாதை யான் பாராமல் வேறு எங்குஞ் செல்ல முடியாது. "நாளைச் சாயங்காலம் உங்களுக்குச் சொல்லி அனுப்புகின்றேன்" என்றனளே. அவ்வாறுசொல்லி அனுப்பி யிருப்பாளோ? சொல்லியனுப்பியும் யான் வரவில்லை யென்று என்னை வெறுத்தனளோ? ஐயோ! பாவியேன்! வாழ்க்கையென்னும் பாதைமுழுவதுமன்றே முள் நிறைந்துளது! என் இன்னுயிர்த் தலைவியின் வதனாரவிந்தத்தை யொருகணமேனு மினிக் காணாத காஞ்சியைவிட்டகலேன். என் காதல்வல்லியினுமோ என்னுயிர் மேலானது? ஒருகாலுமில்லை. இனி இவ்வுயிராற் பயனடைய எது ஏதேனும் உளதாயின அவளாற்றான் என்று என்மனம் ஒரு பக்கம் சொல்லுகின்றது. என் உடன்பிறந்த தமையன் அவளுக்குச்செய்த கொடுமைக்குச் சிறிதுமென்னை வெறுக்கவில்லையே! அவள் தன் அருளுடைய உள்ளத்

திற்கு என்னசெய்யப்போகின்றேன்? மற்றும் அவள் வெகு புத்தி
சாலியெனக் காணப்படுகின்றனள். அவளுடன் ஆலோசித்த பிறகு
வேறு எங்கேனுஞ்செல்வேன். ஆம் எல்லாம் சரி. தப்பித்துக்
கொள்ளினும் காஞ்சியை அடையப் பணம் வேண்டுமே. பொரு
ளின்றி இவ்வுலகில் என்ன செய்யலாகும்? தப்பித்துக்கொள்ளின்
பின்றொடர்ந்து அநேகர் வருவார்களன்றே? ஆதலின் வெகு விசை
யாயல்லவோ செல்லவேண்டும். அதற்குக் குதிரை ஒன்று வேண்டு
மன்றே! ஐயோ! இவ்வுலகிற் பணமிலான் பிணமெனவே மதிக்கப்
படுவான்," இவ்விதமாக மதிமுகன் பலவகைப்பட்ட எண்ணங்க
ளெல்லாங்கொண்டு கடைசியில் "சடகோபர் தம் பணத்தையும்
எடுத்துத் தான் செல்லவேண்டும். அப்புறம் எல்லாவற்றையும்
பற்றி யோசித்துக்கொள்வேன்" என்று தீர்மானித்தான்.

அஸ்தமித்த இரண்டு நாழிகைக்கெல்லாம் காவலன் அறையி
விற்போந்து உணவு பரிமாறினன். மதிமுகன் வெகு சீக்கிரத்தி
லுண்டனன். உடனே சடகோபரும் போந்தனர். காவலன்
அவரை நோக்கி "எப்பொழுது வருவது" என்றான். "அதற்கு
சடகோபர் ஒரு நாழிகைக்குப் பின்வருக. இன்றையிரவு யான்
வெளியே செல்லவேண்டும். வாசற் காவலனிடத் ததனைக்கூறுவாய்"
என்றனர். சடகோபர் அறையில் வந்ததும் மதிமுகன் ஒருவாறு
சந்தோஷமும் வருத்தமுமடைந்தனன். தப்பித்துக்கொள்ளலா
மென்ற எண்ணத்தால் மகிழ்ச்சியும், குருமுனிவரைக் கொடூரமாக
நடத்தவேண்டுமே யென்றதனால் வருத்தமுமடைந்தான். மதி
முகன் நேரில் நிற்பதைச்சடகோபர் பார்த்ததுந் தன்மேல் உத்தரியத்
ததினால் தன் முகத்திலரும்பிய வியர்வையைத்துடைத்தனர். உட
னே மதிமுகன் எண்ணுகின்றான்; இவரேன் இவ்வாறு தம் முகத்
தைத் துடைத்துக்கொள்ளல்வேண்டும். இன்றையதினம் யான்
தப்பித்துச் செல்லவேண்டுமென்ற குறிப்பை யான் அறிந்தேனோ
என்னவோ என்ற சந்தேகத்தினாலோ?" என்று பலவாறு தன்ன
யத்தையே பற்றிய பலவும் நினைக்கலாயினன். மனசாக்ஷிக்கு

விரோதமாக நடக்கவேண்டியவர் வேறு யாரேனும் குறிப்பின்றிச் செய்யும் செயல்களிற் குறிப்பை யுணர்வாரன்றே! இஃதுலக வியற்கையேயாம். சடகோபர் மதிமுகனைப்பார்த்து "அப்பா! என்ன ஒருவாறாகத் தோன்றுகின்றாய்? உடம்பேதேனுஞ் செவ்வையாயில்லையோ?" என்றார். "சுவாமி தங்கள் கிருபாகடாக்ஷமிருக்கும்போது எனக்கேன் வருத்தம் வரவேண்டும்? தாங்களெனக்குச்செய்யும் நன்றியை என்றென்றும் மறவேன். உங்களை என்னுயிர் நிலைக்கும் வரைக்கும்நினைத்துக்கொண்டிருப்பேன் இதற்குப்பிரதியுபகாரந் தங்களுக்கு எப்பொழுது—" என்று மதிமுகன் மிக்க ஆவேசத்துடன் கூறியதும், "அப்பா! என்னே? ஏதும் பொருளின்றிப் பேசுகின்றனையே! இவ்வாறெல்லா மென்னிடத்துக் கூறுதலொழிக. நீ கூறுவதைப்பார்த்தால் ஏதோ உனக்கு என் கடமைக்கு மாறாக, ஒருபகாரஞ் செய்ததாகவன்றோ தோன்றுகின்றது. அப்படி யாதுஞ் செய்யவில்லையே" என்றார் முனிவரர்.

"சுவாமி! தங்கள் வேலையைச் செய்ததனாற்றான் இவ்வாறு கூறினேன். மற்றும்—"

"அப்பா! உன்முக மொருவாறிருத்தலின் மனத்தளர்ச்சியுற்றிருப்பதாகத் தோன்றுகின்றது. ஆதலின் திருவாய்மொழியை யெடு. சில பாசுரங்களைப் படிப்பாம்". என்றனர் சடகோபர். மதிமுகன் திருவாய்மொழியை யெடுத்துக்கொடுத்தலும் சடகோர்பர் அதனை வாங்கி இயற்பா முதற்றிருவந்தாதியில் இருபத்தேழாந் திருப்பாசுரமாகிய

"மலையாற் குடைகவித்து மாவாய்பிளந்து
சிலையான் மராமரமேழ் செற்றுக்—கொலையானைப்
போர்க்கோடொசித்தனவும் பூங்குருந்தச் சாய்த்தனவும்
கார்க்கோடு பற்றியான் கை."

என்பதை யோதுமுறையிற் கூறியபிறகு புத்தகததை மூடிவிட்டு அதன் தாற்பரியத்தை யுரைப்பக்கருதிச் சடகோபர் மதிமுகனைநோக்கி,

"அப்பா? பெரியோர் இதற்கு மகாற்புதமான வியாக்கியானங்கள் திருவாய் மலர்ந்திருக்கின்றார்கள். ஆனால் எனக்குத் தெரிந்த வரையும் இதன் பொருளைச் சொல்லுகின்றேன் கேள்" என்று கடன்மடைதிறந்தெனக் கூறுவாராயினர். "இந்த்ரன் ப்ரவர்த்திப்பித்த கல்வர்ஷத்தில் ரக்ஷ்யவர்க்க மழியாதபடி மலையாலே குடைபிடிப்பாரைப்போலே கீழது மேலதாக மறித்து ரக்ஷித்துத் தன்னை விழுங்குவதாகவந்த கேசியாகிற அச்வத்தினுடைய வாயைக் கிழித்து போட்டு க்ஷத்ரியத்வத்துக்கு ஏகாந்தமாக வெடுத்த திருவில்லாலே ஒராச்ரிதனை விஸ்வஸிப்பிக்கைக்காக"—, என்ற உடனே ஆட்டுக்குட்டியின்மீது பாயும் புலியெனு மதிமுகன் முதல் நாள் இரவே முறுக்கிவைத்த துணிக்கயிற்றால் இருகக்கட்டி வாயில் ஒரு துணியையும் அடைத்துவிட்டு முனிவரை நமஸ்கரித்து அவர் தம் உடையை தான்தரித்துக்கொண்டு காவலன் வரவை யாவலுடன் எதிர்பார்த்தனன். காவலனும் போந்தனன். கதவைத் திறந்ததும் மதிமுகன் வெளிவந்தனன். உடனே காவலன் மதிமுகனாகிய முனிவரைப்பார்த்து, "ஐயா! தாங்கள் வெளியே செல்லவேண்டுமென்றீர்களே அதற்குத் தகுந்த ஏற்பாடுகளைப் புறக்கோட்டைக் காவலாளனிடத்துச் செய்துவிட்டேன். தாங்கள் தடையின்றிப் போகலாம்" என்று கூறிக் கதவை நன்றாக தாழிட்டுச் சென்றனன்.

மதிமுகனும் சடகோபரும் ஏறக்குறைய ஒரே உயரத்தினராகலாலும், மெலிந்த உடலினராகலாலும், சிவந்த நிறத்தினராகலாலும் மதிமுகனைச் சடகோபர்தாமென்று காவலன் இரவில் நினைத்தான்போலும்.

மதிமுகன் முனிவர் நேற்றைவந்த வழியே சென்றான். அவர் தம் அறையை வெகு சீக்கிரத்தில் யாதொரு தடையுமின்றி யடைந்தனன். அவ்வறையிற் சிறிது மங்கலான விளக்கொன்று எரிந்து கொண்டிருந்தது. வேலைப்பாடுடைய பெட்டியைக் கண்டனன். திறவுகோ லப்பெட்டியின்மீதே வைத்திருந்தமையின் உடனே

திறந்தனன். அதனுள் ஒரு சஞ்சியில் பணமிருப்பதை யுணர்ந்து அதனை நன்றாகத் தன் உத்தரீயத்திற் கட்டிக்கொண்டு ஆண்டுள்ள வேறொரு ஆடையை நன்றாய் மேலே போர்த்துக்கொண்டு வெளியே புறப்படச் சன்னத்தனாயிருப்பக் கதவு மெதுவாகத் திறந்தது. மதிமுகன் மிகவும் திகிலடைந்தனன். ஒருவர் வரவினையும் நோக்காதவன்போல விளக்கை யவித்தனன். அவ்வறைக்குப் புறம்பே தோன்றும் விளக்கின் பிரகாசத்தாற் கதவண்டை நிற்பவள் ஒரு வயோதிகமாதென்று எளிதினறிந்தனன். உடனே அம்மாது கூறுகின்றாள்.

“சுவாமி! தங்கள் தனிமையைத் தடுக்கவந்ததற்காக மிகவும் வருந்தப்படுகின்றேன். அரைநாழிகைக் காலமாகத் தங்கள் வரவை எதிர்பார்க்கின்றேன். தாங்கள் சிறிது நேரத்திற்கு முன் வந்ததைப் பார்த்ததும் இவ்விடம் வந்தேன்.”

மதிமுகன் ஒன்றும் சொல்லவில்லை. என் செய்வான்? இவ்வயோதிகமாது எவளோ? அவளுடையவேலையென்னவோ? ஒன்றும் தெரியாதவனாகையால் அவ்விடம் இருந்த நாற்காலியின்மீது உட்கார்ந்தான். அவள் அவனைப்பார்த்து, ஐயா! தங்கள் வரவை அம்மை எதிர்பார்த்திருக்கின்றார்கள். காவலர் தலைவனான வீரமார்த்தாண்டன் இவ்விடம் இல்லை. நாளைக் காலைதான் வருவானாம். தாமதம் செய்யாது வருவீர்களாக” என்றாள்.

மதிமுகன் என்செய்வது? அவளுடன் போவதா அன்றி அவளையும் சடகோபரைச் செய்தவாறு செய்வதா? அவன் ஒரு வார்த்தையும் பேசலாகாது. அப்படிப் பேசுவானாயின் துன்பத்திற்கு ஆளாதல்வேண்டும். மதிமுகன் “நாம் இவளுடன் போகலாம், என்னதான் விஷயம் இருக்கின்றதோ பார்ப்போம்” என்று நினைத்து அவளுடன் செல்லலாயினான்.

அம்மாது மதிமுகனைக் காவலர் தலைவன் வசிக்கும் பாகத்திற்கு அழைத்துச் சென்றனள். உடனே மதிமுகன் சந்தேகப்பட்டான்.

"யான் தப்பித்துக்கொள்ள முயல்வதை அறிந்தனளோ என்னவோ தெரியவில்லையே! நேற்றைக்காவலர் தலைவன் வந்த வழியாயே அழைத்துச் செல்கின்றனளே—ஆம் காவலர் தலைவன் இவ்விடம்இல்லை. காலை வரையும் வாரான் என்றனளே. ஒருகால் ஏமாற்றி உன் அழைத்துச் செல்கின்றாளோ" என்றெல்லாம் நினைத்துக்கொண்டு பின்றொடர்ந்து சென்றான். உடனே முதியவள் பாதி திறந்த ஒரு கதவண்டை நின்றுகொண்டு இவனை உள்ளே செல்லுமாறு சைகைசெய்தனள். முனிவராகிய மதிமுகனும் உள்ளே சென்றான். சேரனும் திகைத்து நின்றான். நின்றதும் முனிவர் தம் குணத்தைப்பற்றி சந்தேகித்தான்.

## அத்தியாயம்—XI.

"ஒரு குற்றம் பலகுற்றத்தையுஞ் செய்விக்கும்;
ஒரு பொய்யை மறைக்கப் பலபொய் பேசுதல்வேண்டும்"

பஞ்சணை தைத்த நாற்காலியின்மீது ஒரு சுந்தரச்செல்வி மந்தகாசம் செய்துக்கொண்டு உட்கார்ந்திருந்தனள். அவளுக்கு வயது இருபது இருக்கலாம். அவள் அங்கங்களெல்லாம் உருண்டு திரண்டு பார்ப்பதற்கு இரமணியமாக விருந்தன. இச்சமயத்தில் அவளைக்கண்டார் எவரும் சிறிது மனக்கலக்கம் எய்துவார் என்பதற்குச் சந்தேகமேயில்லை. அழகினில் அதிக மேம்பாடு இலளேயாயினும் ஆடையாபரண பூஷிதையாய் விளங்கினாள். வெண்பட்டு இச்சமயத்து உடுத்திருந்தாள். காந்தள் நிறத்தையுடைய கரத்தைத் தன் கன்னத்தில் வைத்துக்கொண்டு நாற்காலியின் ஒரு புறம் சாய்ந்து தன் கால்களைச் சிறிது நீட்டி உட்கார்ந்திருக்கும் அழகினை உற்று நோக்கின் உலகிலுள்ள ஆண்மகோடிகளைத் தன் வசப்படுத்தப் போந்திருக்கும் மோகினிப்பதுமை என்னலாம். உயரமாக இருந்தனளேனும் பருமனான சரீரம் ஆதலால் பார்ப்பவர்க்கு அவ்வாறு விளங்கவில்லை.

அவள் வதனம் சிறிது நீண்டிருந்தது. தொங்கவிட்ட பல விளக்குகளின் கிரணங்கள் அவள் முகத்திலில் வீசலும் திவ்விய

மான காந்தியுடன் விளங்கினாள். அவள் கூந்தல் மிகவும் கருமையாய் அடர்ந்து தோன்றிற்று. நம்மதிமுகன் காணும் சமயத்து அஃது அலக்ஷியமாய் வாழைப்பூவினைப்போல முடிச்சு வேய்ந்து பிடரில் அசையுமாறு விடப்பட்டது. அதன்கண் நாலைந்து ரோஜாமலர்கள் சொருகப்பட்டுமிருந்தன. பளிங்கின் வெண்மையையும் வழுவழுப்பையும் பெற்ற நெற்றியின் சிறப்பினை எடுத்துக் கூறுவார் எவரே! புருவங்களின் கீழ்ப்புறம் மெல்லென உயர்ந்து புருவத்தின் கறு நிறத்தினின்றும் எடுத்துக்காட்டிற்று. செவ்வரிபடர்ந்த விழிவேல்களின் சிறப்பு சொல்லத் தகுந்ததன்று. விழிகள் மிகவும் விசாலமிலவே யாயினும் பாம்புகள் தம்பார்வையால் கண்டவரை மயக்கும் சக்தியை அவைகள் அடைந்திருந்தன. மயிர்க்குஞ்சங்கள் காதுகளின் அருகிலுற்றிருத்தல் அவள் வதனத்தின் வசீகரிக்கும் தன்மையை மேம்படுத்தியது.

நறைதுளித்துப் பிலிற்றிவெளி வீழப்போழ்
தெதிர்நோக்கு நல்லி ராவி
னிறைவினலர்ந் திலகுமெழிற் குமுதமல
ரில்லுருவ நிகர்க்கு மேனுங்
குறைவறுதன் சிவப்புநிறக் கொவ்வையினை
யொண்பவளக் கூறு தன்னைக்
கறையுளவாக் கருதிடச்செய் திற்குமவ
ளிதழின்சீர்க் காட்சி யென்னே !

அவளுடையாபரணமின்றி தரித்திருக்கும் தன்மையை உற்று நோக்கின் தன் அழகில் கர்வமுற்றவள் என்று தடையின்றி உணரலாம். தான் அழகி யென்று உணர்ந்தவளுக்கு உரிமையான சில பாவனைகளும் இவளிடத்திற்றோன்றும். மிகவும் அழகுற்ற முகத்தை யாம் கொண்டிருக்கின்றோம் என்ற கர்வத்துடன் சிறிது வளைந்து விளங்கும் கண்டத்தின் உருண்ட தன்மையை எம்மால் வர்ணிக்க முடியாது. அன்றி அவள் புன்னகை புரியும் சமயத்து வெளித்தோன்றும் முல்லை முகையெனும் பல்வரிசையின் சிறப்பினையேனும் எடுத்துச்சொல்ல முடியுமோ ?

இவள் முகத்தைப் பார்த்த அளவில் கர்வமும் பேராசையும் உற்றவளென்று உணரலாம்; பார்த்தவருக்குப் பயத்தை விளைக்கும் வீரமார்த்தாண்டனை மணஞ்செய்து கொள்ளுமாறு நேரிட்டது. இவளழகையே ஸ்திரீதனமாகப் பெற்றவள்; தாழ்குடிப்பிறப்பினள்; கற்பு என்பதைக் கவனியாதவள்; சடகோபரைக் கண்டநாள் முதல் காதல்கொண்டு அவரைத் தன் வலையில் சிக்குமாறு சாகசம் செய்துவந்தாள்; வீரமார்த்தாண்டன் அவயங்காக்கும் கோழி யென்ன அல்லும் பகலும் அவளைவிட்டு அகலாதிருந்தனன். வீரமார்த்தாண்டன் சத்திய கீர்த்தியால் அழைக்கப்பட்டு அன்று மத்தியானமே சென்றனன். இரவு வரமுடியாதென்று சொல்லிப் போன உறுதிகொண்டு "இன்றை இரவு நம்மெண்ணத்தை முடிப்பதற்கு என்ன தடையிருக்கிறது" என்று சடகோபரிடம் தன் வேலைக்காரியாகிய சுந்தரி யென்பவளை அனுப்பினள். அவ் வேலைக்காரி இத்தனை எண்ணத்துடன்றான் அழைக்கின்றாளென்று உணர்ந்தனள்.

விநோதமாக அலங்கரிக்கப்பட்ட ஓர் அறையின்கண் தேவ கன்னி யென்ன ஒருமாது இந்திரவிலாசத்துடன் விளங்குவதைக் கண்டதும் நந்தலைவன் சிறிது திகைத்தனன். மறுநாழிகையில் மனவுறுதியுற்றுப் பின்வருமாறு தனக்குள் சிந்திக்கலாயினன்.

"அந்தோ! இஃதென்னை? யான்றப்பிச் செல்லலாமென்று எண்ணிச் சடகோபரைக் கட்டிப்போட்டுவிட்டனன். இப்பொழுதோ பெரிய ஒரு தடை யுண்டாயிற்று. யாதுகாரணம்பற்றி இப்பெண் தனிமையாயிருக்குஞ் சமயத்தில் அழைத்தல் வேண்டும்? என்ன?—அக்கிழவியும் வீரமார்த்தாண்டன் இன்றிரவு இங்கிரான் என்றனளே. நம் சடகோபருக்கும் இந்நங்கைக்கும் ஏதேனும் காதல் விஷயமிருக்குமோ? அப்படியிருந்தாலு மிருக்கலாம்.—அவ்வளவு வைதிக எண்ணமுள்ளவர் இத்தகைப் பஞ்சமா பாதகங்களுள் ஒன்றைச் செய்வாரோ?—ஏன்? நினைத்தாலென்னை? எக்காலத்தும் அதி வைதிகரென்று வேஷம் போடுபவர் எவரும்

நிய நடத்தை யுடையவராகக் காண்கின்றோமல்லவா? ருஷிகளுட் ஸிரேஷ்டர் விஸ்வாமித்திரன் எத்தகையன்? மேலும் நம்மைச் சிறையினின்றும் நீக்கக் குறித்தனரே. இது சரியாமோ?—ஆம். ஏதோ முன் செய்த குற்றத்தின் பொருட்டு அருள் புரிகின்றன ரல்லரா? அப்படித்தானே அவர் கூறினர். எவ்வாறேனு மறியலா' மென்று அச்சுந்தரமாதின் வடிவினைத் தன் கண்களால் உற்று நோக்கினன்.

குணவதி மதிமுகன் வந்ததைப் பார்த்தவளேனும் பாராதவளைப்போல சிறிது நேரம் உட்கார்ந்திருந்தாள். இவ்வாறு இவள் செய்தது தன் அழகில் மயங்கிய அவனை முதலிற் பேசுவிக்குமாறு எண்ணியே! மதிமுகன் சிறிது நேரம் பேசாதிருந்ததனால் திடுக்கிட்டவளென்ன வெழுந்து மதிமுகனுடைய சடகோபனைப்பார்த்து,

"சுவாமி! தங்கள் வரவை இவ்வளவு சீக்கிரத்தில் எதிர்பாராதவளாதலால் யென்னவோ யோசித்துக்கொண்டிருந்தேன். தங்களுக்குத்தகுந்த மரியாதை செய்யாததைப்பற்றி என்னை மன்னிப்பீர்களாக" என்றாள்.

மதிமுகன் ஆவேசக்குரலுடன்

"அம்மா! என்னை எதன்பொருட்டு அழைப்பித்தீர்கள் அறிய விரும்புகின்றேன். யான் செல்லவேண்டும்? உங்கள் விருப்பத்தை உடனே கூறுவீர்கள்" என்றான்.

"ஐயா! தங்கள் மீதுள்ள விருப்பத்தினால் இவ்விடம் அழைப்பித்தேன்" என்றாள் குணவதி.

"என்மீதா?"

"ஆம் உங்கள் மீதே. ஏன் அவ்வளவு தூரத்திலிருக்கின்றீர்கள். அடியாள்மீது கருணைகூர்ந்து இவ்விடம் உட்காரலாகாதோ. என் வேலைக்காரி சுந்தரி என் புருஷன் இன்றை இரவு இவ்விடம் வாரான் என்று கூறவில்லையா? நாம் இருவரும் இவ்விடம் தானே அவன்வரும் வரையிலிருக்கவேண்டும்—அவ்வாறு நிற்பதனால் பய

னென்ன ? வாருங்கள்; இவ்விடம் உட்காருங்கள்" என்று அவன் கரங்களைப்பற்றி அழைத்தனள்.

"அம்மா! யான் இன்னனென்று தங்களுக்குத் தெரியுமோ ?" என்றான் மதிமுகன்.

"என்ன ? அவ்வாறு வினவுகின்றீர்கள்! தங்களை யாரென்று அறியாமலோ காதல்கொண்டிருக்கின்றேனே. தாங்கள் சடகோப ரென்ற சுந்தர புருஷர்" என்று மெல்லெனச் சிரித்தாள்.

"அம்மா! யான் சடகோபரல்லேன்." என்று கூறியதும் அவன் முகத்தை உற்றுப்பார்த்தால் சடகோபரல்ல ரென்று அறிந்து "ஐயோ!" என்று கூவினாள்.

"அம்மா! கத்தவேண்டாம். இரைந்தால் உங்களுக்குத்தான் வருத்தமுண்டாகும்" என்று மதிமுகன் கூறினான்.

"ஐயா நீர் யாவர் ? சடகோபரின் இருப்பிடம் எவ்வாறு அறிந் தீர்கள்" என்று வினயமாய்க் குனவதி வினவினாள்.

"யான் சடகோபர் தம் நண்பன்" என்றான் மதிமுகன்.

"ஓ தெய்வமே! தெய்வமே! ஆ! கெட்டேன்! கெட்டேன் என் கௌரவம் கெட்டது! நாணமிழந்தேன்! உலகோர் பழிக்கு ஆளாயினேன்! என்ன கொடுங்காமம்! என் செய்வேன் ? என் செய்வேன் ? என் செய்வேன் ?" என்று அலறினாள்.

"அம்மா! வருந்தவேண்டாம். தைரிய மிழக்கவேண்டாம். தம் இரகசியம் என் மனத்தினின்றும் என்றென்றும்வெளியாகாது. ஏழை மாதர்களின் இன்பத்தைக் கெடுப்பவனல்லேன் யான்" என் றான் மதிமுகன்.

"ஐயா ? உங்கள் நண்பருக்கேனும் என் தன்மையை உரைப் பது ஒழிவீர்" என்று கையைப் பிசைந்துகொண்டாள். மனிதர் ஒரு விஷயத்தேனும் தப்பிதம் செய்பவரே. தப்பிதத்தை வெளியி டலோ மேலானகாரியம் ? நிறையை மறைப்பதன்றி அருளின் பயன்தான் என்னே ?" என்றான் மதிமுகன்.

"எவ்விதத்தும் யான் தௌர்ப்பாக்கியமுடையேன். எப்படியும் என் மானம் கெட்டுவிடும்."

"அம்மா! உங்கள் மானத்தை என் உயிரிழந்தாலும் வெளியிடேன்" என்று உறுதி கூறினன்.

"உங்கள் வார்த்தையை நம்பமுடியுமோ! அவரிடமும் சொல்லாதிருப்பீர்களாயின் என்னினும் பாக்கியமுடையவள் எவருமில்லை" என்ருள் குணவதி.

"அம்மா! நம்பிக்கையினுல்தான் இவ்வுலகத்தில் எவ்விதச் செயலும் நடைபெறுகின்றது" என்ருன் மதிமுகன்.

"ஆயின் உங்களை நம்பத்தானே வேண்டும்?"—.

"ஆம், நம்பவேவேண்டும். நம்பலென்பதுவே நல்லுயிர்க்குற்ற துணை" என்ருன் மதிமுகன்.

"தாம் இவ்விடம் எப்படி வந்தீர்கள்? என் புருஷன் உத்திரவின்றி எவரும் உள்ளே பிரவேசிக்கலாகாதே"

"இன்றை மத்தியானம்தான் வந்தேன்" என்ருன்.

"ஆயின் என் புருஷனைக் காணவில்லை.

"இல்லை. அம்மா! உன் புருஷரை அறியேன்!"

"ஆனல் திடீரென நீர் வந்திருத்தல்வேண்டும்" என்று குணவதி முடிக்குமுன் கதவு திறக்கப்பட்டது. இருவருந் திடுக்கிட்டுக் கதவைப் பார்த்தனர். உடனே சுந்தரி போந்து உரத்த குரலுடனே,

"அம்மா! யாம் கெட்டேம். கெட்டேம். அடே! கொலைப் பாதக! முனிவரையுமப்படிச் செய்வாரோ? என்ன செய்தாயடா? என்னதைரியமடா?" என்று கூவினள்.

"ஓ! தெய்வமே! அம்ம! என்ன விஷயம்?" என்று மிகவும் அச்சத்துடன் கேட்டனள்.

"அம்மா! இவன் சிறையினின்று தப்பியோடி வந்தவன். சடகோபரைக் கயிற்றாற்கட்டி வாயைத்துணிகொண்டடைத்து அவர் தன் அறையையும் கொள்ளையிட்டு வந்தனன்" என்றாள் சுந்தரி.

"ஏ! துஷ்டா! பாபா!!" என்றாள் குணவதி.

"மிகவும் கூவவேண்டாம். நீவிர் இருவிரும் என்னிடத்திற் சிக்கியவர். நீங்கள் பேசாமல் இருக்கவேண்டும் அல்லாக்கால்"— என்று உறுதியாய்க் குணவதியின் பேதைமையால் வெளிப்போக நினைத்த மதிமுகன் கூறலுற்றான்.

உடனே மதிமுகன் கூறிய சொற்கள் அவர்கள் நிலைமையைத் தெளிவித்தது. அவன் கதவைப் பொருக்கெனத் தாழிட்டு அவ்வறையிற் புறிதுநேர முலாவினன். பின்னர்,

"அம்மா! என்னை வெளியேற்றுவிக்கவேண்டும், அஃதுங்கள் கடமை" என்றான் மதிமுகன்.

"அது முடியாத காரியம்" என்று பயத்துடன் கூறினள்.

"முடியாத காரியம் எதுவுமில்லை. மனமிருந்தால் எதுவுமுடியும். வேண்டுமென்று நாற்றால் வெண்ணெய்போல் நாற்கலாம். உன் காமத்தை தணிக்கவேண்டியபோது முடிந்தது இப்பொழுது முடியாதா?" என்றான் மதிமுகன்.

"பின் யான் என்னசெய்யவேண்டும்?" என்று குணவதி நடுக்கத்துடன் கேட்டாள். ஏனெனின் தன் சுந்தரியும் இப்பொழுது சடகோபரை யழைப்பித்ததன் காரணமறிந்ததனால்.

"ஐயா! மகாப்பிரபு! ஸ்திரியைக் கெடுத்தல் தகுதி யன்று" என்று கூறலுற்றாள் சுந்தரி.

"அப்படியெல்லாம் கூறுவதில் யாதொரு பயனுமில்லை. உனக்கு மானக்கேடு வரவேண்டாமெனின் என்னை இச்சமயத்துக் காப்பாற்றுவாய்."

"அடே! இதை யொரு கருவியாகவா உபயோகிக்கின்றாய்?" யாங்களிருவேமும் பொய்புகல்வதாகக் கூறினோமாயின் என் செய்வாய்?" என்று குணவதி கூறினாள்.

"யான் இங்கு வந்த தெப்படியெனின்?" என்றான் மதிமுகன்.

"என் தவறி வந்தனே என்கின்றேம்" என்றாள் சுந்தரி.

"என்ன ஆச்சரியம்! விந்தையாயுள்ளது! வேண்டுமென்றால் என் வழியை மிகவும் தெளிவாகக் கூறுவேன். அப்படி யான் கூறுவது உங்கள் பொய்ம்மொழியைப் புலப்படுத்தும்" என்றான் மதிமுகன்.

"ஆயின் என்ன செய்கிறது?" என்றாள் குணவதி.

"என்னை சீக்கிரம் முதலில் ஒளித்துவைத்துப் பிறகு வெளிப் போகத்தகுந்த உபாயம் செய்வாய்" என்றான் மதிமுகன். இச்சமயத்தில் வெளியே இரண்டு காலடியோசை கேட்டது. உடனே குணவதி தன் கட்டிலிருக்கும் அறையில் மறைத்துவைத்துக் கதவை மெதுவாகத் திறந்தனள்.

காவலாளிகளிருவர் வருமுன்னர்ச் சுந்தரி ஓடிவருபவள்போல் பாவனை செய்து "அம்மா! என்ன துன்பம் நேரிட்டது! அதுவும் அப்பப்பா! அவர்களில்லாத சமயத்தில், என்ன செய்வோம்?" என்றாள்.

குணவதி "ஐயோ! என்ன நடந்தது?" என்று பெருங்கூச்சலுடன் கூறினாள். இப்பொழுது காவலரிருவரும் போந்து வணங்கி,

"அம்மா நேற்றையதினம் சத்தியகீர்த்தியா லனுப்பப்பட்ட குற்றவாளி வெளியேறினான். அதுவும் முனிவரைக் கட்டிப் போட்டுவிட்டு" என்று ஒருவன் பகர்ந்தான்.

"அப்படியும் செய்வானே" என்று குணவதி கூறினாள்.

"இன்னும் என்ன விசேஷமென்றால் அப்பயலைக் காணவில்லை. அவன் தப்பித்துக்கொண்டு ஒரு நாழிகைப் பொழுதுதான் இருக்கும். வெளியே போகவில்லை."

"என்ன? தப்பிச்செல்ல ஒரு நாழிகைப்பொழுதுபோதாதா? இன்றைக்கு எக்காவலாளியின் முறை.

"அம்மா! காட்டான் முனியன் இப்பொழுது காவல். அவன் தப்பித்துச் செல்லும்போது நாராயணன் காத்திருந்தான்.

"ஆயின் வேலையை மாற்றும்போதுதான் அவன் வெளியேறியிருக்கவேண்டும். அதற்குச் சந்தேகமில்லை" என்றாள் குணவதி.

"ஏது? அப்படி நடந்திராது. ஆயினும் எவரும் தேடுவது தான் சரி" என்றான் காவலரில் மற்றையவன்.

"முதலில் சடகோபர் தம் அறையைப்பார்த்துவா?" என்றாள் குணவதி.

"அப்பொழுதே பார்த்தாய்விட்டது. அவர் அறைவழியாகவே வந்தான் என்று நாராயணன் சொன்னான். சடகோபரும் ஒரு பொருளும் போகவில்லையென்கின்றார்."

"ஆனால் இக்கோட்டைக்குள்ளிருப்பானாயின் தேடிப்பிடிப்போம். மற்று உன்னிடத்து வாளிருக்கிறதா?" என்றாள் குணவதி.

"இதோ இருக்கின்றது இரண்டுவாள்" என்று காட்டி அறைகளைச் சோதிக்கத் தலைப்பட்டார். தேடியுங் காணவில்லை. இன்னும் ஓர் அறைதான் பாராதிருப்பது. அதைக்காவலாளிகள் பார்க்க மரியாதை பாராட்டினார்கள். ஏனெனில் அது படுக்கையறை. உடனே காவலருள் ஒருவன் "அம்மா? இவ்வாளைக் கையிலேந்திக்கொண்டு அப்படுக்கை அறையும் பாருங்கள்" என்றான்.

"ஏ! சுந்தரி! நீயும் பின்வா. நாம் தேடிப்பார்க்கலாம். நீங்களும் ஜாக்கிரதையாய் வெளியே யிருங்கள்" என்று குணவதி சுந்தரியுடன் உள்ளே சென்று தேடுவதுபோலப் பாசாங்கு செய்தாள். ஒரு பெரிய உடுப்புப்பேழையைத் திறந்து சைகையால் ஓர் உடுப்பைத் தரித்துக்கொள்ளும்படி மதிமுகனை கட்டளையிட்டாள்.

அவன் வீரமார்த்தாண்டன் வேலைக்கு அறிகுறியாயுள்ள ஒரு நல்ல உடையை உடுத்துநின்றான். குணவதி "காணவில்லை தப்பித்துக்கொண்டுதான் போயிருக்கவேண்டும்" என்று கூறிக்கொண்டே சுந்தரியுடன் வெளிவந்தாள்.

"என்ன ஆச்சரியமாக விருக்கின்றது? என் உயிர்நாளிலிப்படிப்பட்ட செய்தி கேள்விப்படவுமில்லை" என்றான் காவலாளி.

"எல்லாம் சரி. சில காவலாளரைக் குதிரையின்மீது அவன் பின்போம்படி கட்டளையிட்டாயிற்றா?" என்றாள் குணவதி.

"இல்லை" என்றான்.

"அது முக்கியமான காரியம். போய்ச் செய்யுங்கள்" என்றாள்.

காவலாளிகள் இருவரும் போனதும் குணவதி ஒரு நாற்காலியின்மீது மயக்கமாகச் சாய்ந்தாள். மற்றுச் சுந்தரி தலைவியின் வதனம் வாடியிருப்பதை நோக்கி "அம்மா! பின் என்ன செய்கிறது ஒரு விநாடியும் விணுக்கலாகாது" என்றாள்.

"எனக்கு ஒன்றும் செய்யத் தோன்றவில்லை. இப்பொழுது அவன் ஜாக்கிரதையாய்த்தா னிருக்கின்றான்" என்று குணவதி மெதுவாகக் கூறினன்.

"ஐயா அவர்களுக்குமன்றோ ஆள் அனுப்பியிருக்கிறார்கள். வந்துவிடப்போகின்றார்களே" என்றாள் சுந்தரி.

"அம்மா! ஒரு யுக்திதோன்றுகின்றது. அதுதான் வழி. நம்ம இருளப்பனைக் குதிரை யொன்று ஆயத்தஞ் செய்யுமாறு யான் சொன்னதாகச் சொல். நீ அவ்விடமே இப்பாதகன் வருமளவும் இரு" என்று குணவதி கட்டளை இட்டாள்.

சுந்தரி சென்றாள். குணவதி படுக்கையறையை யடைந்து மதிமுகன் சன்னத்தமாக விருப்பதை யுணர்ந்து நாலைந்து துப்பட்டிகளை யொன்றன்பின் ஒன்றாக்க் கட்டிக் கட்டிற்காலில் ஒரு நுனியைக்கட்டிச் சாளரவழியாய் மெதுவாக மதிமுகனை இறங்குமாறு கட்டளையிட்டனள். அன்றியும் ஒரு குதிரை சன்னத்தமாகக் கீழிருப்பதாயுங் கூறினாள். மதிமுகனும் வெகு சுலபமாய் கீழே இறங்கினான்.

மதிமுகனுக்கு வீரமார்த்தாண்டன் உடை மிகவுந் தளர்த்தியா யிருந்தது. அன்றிரவில் வீரமார்த்தாண்டனன்றான் என்று அரத்தி னுள்ளவர்கள் அறிவார்கள். குணவதி படுக்கையறையை யிருந்த வாறு விட்டுக் கீழிறங்கி ஆண்டிருந்த சிலரைக் "குற்றவாளி யகப் பட்டனனோ" என்று உசாவுவாளாயினள். ஏனெனின் தானுமெங் கெங்கோ அவனைத் தேடுவதாக அவர்களறியட்டுமென்ற எண் ணத்தால். குணவதி திரும்பியதும் சடகோபர் எதிர்ப்பட்டார். அவர்தம் முகம் சிறிது வேறுபாடடைந்துளதென்று அறியலாம்.

குணவதி அவரைப்பார்த்ததும்;

"ஐயா! தாங்கள் அக்கொலைப்பாதகப் பையலால் விசேஷ வேறுபடாததனால் மிகவும் மகிழ்ச்சியடைகின்றேன். அவன் அகப் பட்டானன்றோ தெரியவராம்" என்றாள்.

"அம்மா! உன் அருளுடை யுள்ளத்தாக்காக வன்றே யான் சௌக்கியமாக விருக்கின்றேன். மற்றுத் தப்பியோடியவனைப் பிடித்து விட்டார்களா? என்ன? தெரியவிரும்புகின்றேன்" என் றார் குருமுனிவர்.

"ஐயா! எனக்குத் தெரியாது. என் அறையி லிதுகாறு மிருந் தேன்" என்றாள் குணவதி.

"இத்தச்சமயத்தில் அறையின் கதவு மெதுவாகத்திறக்கப்பட் டது. வீரமார்த்தாண்டனே வந்தனன். காவலாளிகள் பாதிதூரஞ் சென்றும் வீரமார்த்தாண்டன் வருவதைப்பார்த்து அவனுடன் நடந்ததை முறையிட்டார்கள். அவன் திரும்பி வருவதன் கார ணத்தை நேயர்கள் அறிய விரும்புவார்கள்.

தன் மனைவியைவிட்டுப் பிரியவேண்டுமே என்ற வருத்தத்து டன் சத்தியகீர்த்தி யிடத்துச் சென்றவன் வேலை முடிந்ததும் நள் ளிரவாகவுந் திரும்பிவந்தனன். குணவதி தன் புருஷனைக் கண்ட தும், "பிராணநாதா! என்ன விஷயம்! அறிந்தீர்களா?" என்று கேட்டனள்.

"இன்னுமப்பயல் இவ்விடந்தானிருப்பான். ஒருவரையும் வெளிச்செல்ல விடக்கூடாதென்று வாயிற் காவலாளியிடம் கட்டளை யிட்டிருக்கின்றேன். அவனை எப்படியானாலும் பிடிக்கவேண்டும்" என்றான் வீரமார்த்தாண்டன்.

குணவதி தன் முகக்குறியால் தன் பிழையை வெளியிட்டனள். வீரமார்த்தாண்டனுணரப்போகின்றானென்று மெல்லென இருமினாள். மற்றும் தன் தலைவன் சிறிது நேரத்திற்கு முன்னரே சிறைச்சாலைவாயிலை யடைந்திருத்தல் வேண்டுமென்று மறிந்தாள். எவ்வாறெனின் வாயிற்காப்போனிடத்து எவரையும் வெளிவிடவேண்டாமென்று கட்டளையிட்டானாதலினால். வீரமார்த்தாண்டன் சடகோபருக்கு நேர்ந்த துன்பத்தைப் பற்றி மிகவும் வருத்தப்பட்டான்.

அவ்வருத்தம் மதிமுகன்மீது அடங்காக் கோபத்தை யுண்டுபண்ணிற்று. வீரமார்த்தாண்டன் "எல்லாந் தெய்வசங்கல்பம்" என்ற சடகோபரிடத்துச் சந்தேகப்படவிடமில்லை. ஏனெனின் மூன்று வருஷங்களாக நன்றாய் நடந்து மிகவும் நம்பிக்கையை யுண்டுபண்ணிவிட்டார்.

இஃதிங்ஙனமாக நம்மதிமுகனைப் பின்றொடர்ந்து செல்வாம். குணவதி கூறியபடி முற்றத்தில் வெகு உன்னதமாக குதிரையொன்று புனைந்துநின்றது. அவ்விடம் முதியவளான சுந்தரியும் நின்றனள். அவள் மதிமுகனென்ற பெயரைத் தன்காதில் இரகசியமாய்க் கேட்டதும் "சீக்கிரமக்குதிரையின்மீது ஏறிச்செல்க" என்றனள். தோன்றிமறையும் மின்னலென அக்குதிரைமீதேறி வாயிலின் சிறிது தூரத்தில் நின்றனன். காவலர் தலைவன் கட்டளைபெற்ற சில குதிரைவீரர் காவலாளியிடத்து ஏதோ குறிச்சொற் கூறிவிட்டு ஒருவர்பின் ஒருவராகச் சென்றனர். மதிமுகன் குதிரை வீரமார்த்தாண்டன்றன் அருமைக்குதிரையாகலானும், அக்காவலர் தலைவன் உடையையே அச்சமயத்து நம்மதிமுகன் தரித்திருந்தானாகலானும், முன்னர்ப்போகுங் குதிரையைக்கண்டு நம்மதிமுகனேறியபரி

ஒரே தாண்டாக வெளிச்சென்றது. ஆண்டுள்ளாரெவரும் தலைவன்முன் அவ்வளவு வேகமாய்ச் செல்கின்றான் என்று தங்கள் தங்கள் குதிரையைச் செலுத்திக்கொண்டு பின்றொடருமாறு சென்றனர். மதிமுகனேறிய பரிமா உயர்ந்ததாதலால் மற்றைய காவலரைக் கண்ணுக்கெட்டாக தூரத்திற் பின்றங்கிவருமாறு விரைவாய்ச் சென்றது. மதிமுகன் காஞ்சியை நோக்கித் தன் குதிரையைச் செலுத்தினான்.

மதிமுகன் போய்க்கொண்டிருக்கட்டும். நாம் சிறைச்சாலையை நோக்கித் திரும்பி வரலாம். நாம் குணவதி, வீரமார்த்தாண்டன், சடகோபர் இவர்களைப் பேசிக்கொண்டிருக்கும் சமயத்துவிட்டுவந்தனமன்றே.

காலடியரவங் கேட்டதுங்குணவதி மதிமுகன்திரும்பவும்பிடிக்கப்பட்டானென்று யாவரேனுங்கூற வருகின்றார்களோவென்ற அச்சந்தோடு அப்புறந்திரும்பிப்பார்ப்பாள். தன் இருகரங்களால் தன் முகத்தைத் துடைத்துக்கொள்வாள். உடனே மதிமுகன் தன் எதிரே நின்றுகொண்டு வீரமார்த்தாண்டனிடந் தன் குணத்தை விளக்குகின்றான் என்று நினைப்பாள். உடல்சிலிர்ப்பாள். மனமகிழ்வாள். அந்தோ! அற்பசுகத்தை இச்சித்து இத்தகைக் கொடுந்துயர மனுபவிப்பார்களா? பரபுருடனை யிச்சிப்பதன் தீங்கிவ்வளவு மட்டுமோ? நங்கதையின்கட் குணவதியின் சரிதையை யுற்று நோக்குவீர்; மனந்தெளிவீர்: குணங்கொள்வீர்; களைமுறுவீர்; நங்கதையை யன்புடன் படிக்கும் நண்பர்காள்!

இவ்வாறு காலடிச் சத்தங் கேட்டதுபற்றிக் குணவதி எண்ணியிருக்கும் சமயத்து சுந்தரிவந்தனள். உடனே வீரமார்த்தாண்டன் அவளை நோக்கி,

"என்ன விசேஷம்?" என்று வினவினன்.

"நல்லசமாசார மேதுமில்லை. இன்னும் அப்பயலை உள்ளே காணவில்லை. வெளியினின்றுங் கொணரப்படவில்லை மிகவும் விந்தையாயுளது" என்றாள் சுந்தரி.

"என்ன ? வெளியினின்று ? நன்றாயிருக்கின்றது. இன்னும் வெளிப்போகவில்லையென்று யான் சந்தேகமின்றிக் கூறுகின்றேன். பிராண சகி! நன்றாக நம் அறைகளைப்பார்த்தாயா ?" என்றான் வீரமார்த்தாண்டன்.

"என் தலைவி வாள்கொண்டு நன்றாகத் தேடிப்பார்த்தார்கள். நான் கூடச்சென்று பார்த்தேன்" என்றாள் சுந்தரி.

என் காதற்கிளியே உன்னை யான் அடைந்ததற்கு மிகவும் புண்ணியஞ் செய்திருத்தல் வேண்டும். உன்னைப்பெற்றனேனாகலான் என்னினும் பாக்கியவந்தனெவனோ ?" என்று வீரமார்த்தாண்டன் அன்புடன் அவளைப் பார்த்தனன்.

"காவலாளிகளும் என்னுடன் தேடினார்கள். படுக்கையறையின் கதவண்டை யவர்கள் யான் தேடும்போது ஏந்திய வாளுடன் நின்றிருந்தார்கள்" என்றாள் குணவதி.

"படுக்கை யறையை நன்றாகப்பார்த்தாயா ?" என்று வீரமார்த்தாண்டன் வினவினான்.

"எங்கும் பார்த்தேன்" என்றாள் குணவதி.

"கட்டிலினடிப்புறம் பார்த்தாயா?" என்றான்காவலர்தலைவன்.

குணவதி பார்க்க மறந்தவள் போன்று சாகசஞ்செய்தனள்.

"ஐயோ! பாவி! மறந்தேனே! அவ்விடம் இருப்பான் என்று யான் எண்ணவில்லையே!" என்றாள்.

"ஒளிவதற்கு அதுதானே தகுந்த இடம். இன்னுமங்கேதான் இருப்பான்" என்று உடைவாளை ஏந்திக்கொண்டு பள்ளியறையை நோக்கிப் பொறுக்கெனச் சென்றனள். உள்ளே சென்றதும் "ஆகா" என்று கூவினான். படுக்கை முழுவதும் கலைந்து தாறுமாறாகவிருந்தது. சாளரத்தண்டை சென்றதும் சடகோபர் தம் வேஷ்டியிருந்தது. அதைக் கண்டதும் வீரமார்த்தாண்டன் அடங்காக் கோபங்கொண்டான். மறுபக்கம் திரும்பினான். தன் உத்தியோக உடைகளிலொன்றைக் காணவில்லை. யாவற்றையும்

உணர்ந்தான். அவ்வுடையைத் தரித்துக்கொண்டு தான் சென்றான் என்றறிந்தான். மறுபடியும் சாளரத்தண்டை சென்று உற்று நோக்கினான். துணியினாலாய கயிறு கட்டிற்காலினின்றும் சாளர வாயிலாகத் தொங்குவதாகப்பார்த்தான். மனமழிந்தான். மோசம் வந்ததென்று நினைப்பான். சத்தியகீர்த்தி தன்னை வரவழைத்து இவளைச் செவ்வையாய்க் காக்கும்படி கட்டளையிட்டனனே. இப்பொழுது என் சொல்வானோ என்பான். அவன் ஓடிச்செல்வதற்குக் குணவதி காரணமாக விருந்தனளென்று நம்தலைவன் எண்ணவேயில்லை. ஆயினும் வீரமார்த்தாண்டன் குணவதியை வைதது இவ்வளவு என்று சொல்லி முடியாது. அவளது மதியின்மையை இடித்து இடித்துப் பன்முறை சொல்லினான்.

“என்ன மூடத்தனமாக யானுந் தேடினேனென்று ஒப்புக்கு நோக்கினையடி? இப்பொழுதன்றோ தெரிகிறது. யான் ஏதேனுஞ் சொல்லப்போகின்றேன் என்றல்லவோ தேடிப்பார்த்தாய்? இல்லாவிட்டால் முக்கியமான அவ்விடத்தைத் தேட மறந்திருப்பாயோ? என் பெண்டாட்டியாகவிருத்தற்கு நீ தக்கவளல்லை. இது மிகவும் உண்மையே! என் எஜமானனிடத்து யான் என்ன சொல்லப்போகின்றேன்? உன்னுஞ்சோற்றில் மண்ணைப்போட்டு விட்டனையே! ஏ! சண்டாளி! பாவி!” என்று பலவாறு பிரலாபித்துக் குணவதியைக் கண்டித்தனன்.

---

## அத்தியாயம்—XII.

“மன்னவன் வெருளியை மாற்ற வெண்ணியே
பன்னரும் பழிமொழி பரித்து ரைப்பபோற்
றன்னருங் கொடுமனச் சுந்த ரன்சொனான்.”

நம் கமலினியை யரண்மனை வாயிலின் விட்டுவந்து வெகுநேரமாயிற்று. இதுகாறும் மதிமுகனைப்பற்றி யுரைத்தோம். இனி நங் கதாநாயகியின் செய்திகளைக் கூறுவாம்.

மதிமுகன் கமலினியுடன் காலையில் அரண்மனையையணுகலும் சந்திய கீர்த்தி மேன்மாடத்திலின்று பார்த்தனன். கமலினியைக் கவர்ந்தவன் மதிமுகனே என்றையுற்றுத் தன் பள்ளியறைக் காவலரிடத்து மதிமுகனைச் சிறையிடுமாறு ஆணை தந்தனன். அவ்வணமே மதிமுகன் நான்கு காவலரால் அரண்மனையிலேயே சிறையிடப் பட்டான்.

கமலினி யுட்சென்றதும் விசையை எதிர்ப்பட்டனள். எவ் வாறு மிதிலாநாடியார் ஸ்ரீதாசரதியை மேன்மாடத்தினின்றுங் கொண்டு பார்த்தவளவிலேயே காதல்கொண்டனளோ அவ்வாறு மல்லயுத்தத்தன்றே காதல்கொண்ட கமலினி பெருந்துயரினின்றும் அம்மதிமுகனாலேயே மீட்கப்பெற்றுக் "கரும்பாம்பு விழுங்கியுமிழ் கான்மதியின் விளங்குதலைக்" கண்ட விசையையு மாச்சரிய முற்றனள். மற்றுங் கமலினி மனிதருக்கு நேருந்துன்பங்களனைத் தும் பின்னர் நன்மையையே விளைப்பனவென்று வருத்தஞ் சிறிது மின்றி விளங்கினள்.

என்னையோ கமலினி விசையையினைக்கண்டதும் மறுபடியும் காணப்பெற்றேமென்ற வானந்தத்தினாலோ, தான் காதலுற்றவன் றன் கைத்திறத்தை பிருவிசைகண்டதன்றி யவன் பரிசவின்பத் தையுமடைந்ததனாலுண்டான மெய்பாட்டின் மேன்மையினாலோ, மற்றெதனாலோ, கண்ணீர் சொரியவிட்டு ஆவலுடன் தன் தமக்கையைத் தழுவி நின்றாள்.

பின்னர் இருவரும் ஒருவருடன் ஒருவர் பேசாமல் ஓர் அறை யை அடைந்தனர். அவ்விடம் இருந்த நாற்காலிகளின்மீது உட் கார்ந்தனர். கமலினி விசையையிடம் சாங்கோபாங்கமாய்த்தான் ஏகாம்பரேசுவரர் சன்னதியினின்று வெளி ஏறியதும் சுந்தரப் பிரபுவாற் சிறைகொள்ளப்பட்டதையும் அவன் காதல் உரைத் ததையும் மறுநாட்காலை தான் மதிமுகனை யுத்தியானத்திற் கண்டழைத்ததையும் அவனால் மீட்கப்பட்டதையும் கூறினாள்.

விசையை யவட்குநேர்ந்த கொடுமையைக்குறித்து இரங்கினாள். அன்றியும் கமலினி மதிமுகன்பாற் காதல்கொண்டுளளென்பதை யும் அறிந்தனன்.

இது நிற்க. சத்தியகீர்த்தி விசையையாற் கமலினிக்கு நேரிட்ட வதைதைய முணர்ந்தனன். தான் மதிமுகனைச் சிறையிட்டது தவறென்றறிந்து அவனை விடுவிக்குமாறு கட்டளையிடச்சன்னத்தனா யிருந்தனன். அக்கணஞ் சத்தியகீர்த்தி தன் சேவகனாற் சுந்தரர் என்ற பிரபு தன்னைப் பார்க்கக் காத்துக்கொண்டிருக்கின்றாரெனத் தெரிந்து பின் வருமாறு யோசியா நின்றான்.

"யாது காரணம் பற்றி யவனிங்குவரல்வேண்டும்? அவன் தன் பிழையை யறிவேனென்று அறிந்தானில்லையோ? பின்னர்த் தான் புரிந்த தீச்செயலை மறைக்கவெண்ணி ஏதேனும் பொய்க் கதைகொண்டு வருகின்றாரோ? அன்றி பொறுத்தருளும்படி கேட்டுக்கொள்ளவெண்ணிவருகின்றானோ? எப்படியும் புலியின் வாயில் தன் கரக்கலைத் திணிக்க எவனும் எண்ணான். தப்பித்துக் கொள்ளத் தந்திரமேதேனும் செய்துகொண்டுதான் வந்திருப்பான். அவன் தந்தை என் பகைஞன். இவன் தம்பியாகிய மதிமுகனோ மல்லயுத்தத்தில வெற்றியுற்றவன். இவன் வீரன் போலவேதோன்று கின்றான். இல்லையேல் அரண்மனையுள் எவரையு மெடுத்துச் செல்லத்துணியான். இத்தகையோரைக் களைதல் வேண்டும். என்ன விஷயங்கொண்டுவந்தனனென்று தெரிந்துகொண்டு பிறகு எல்லா வற்றையும் யோசித்துக்கொள்ளலாம்" என்று அவனை வருமாறு சேவகனிடம் கட்டளையிட்டனன்.

சுந்தரன் போந்தனன். அவன் அரசனை வணங்கி "மஹா ராஜா! யான் செய்த பிழையை மன்னிக்கவேண்டும். இதுகாறும் யான இத்தகைய கொடுந்தயர் எவர்க்கு மியற்றியவனல்லேன்" என்றான்.

"இதுகாறும் பிழையியற்றாத காரணத்தால் இப்பொழுதியற் றிய தீங்கினை மன்னித்தலொண்ணுமோ? நீ அவ்வாறு செய்த தன் காரணத்தைக் கூறுவாய்?" என்றனரசன்.

"மகாராஜா! தங்கள் கருணைப்பிரவாகத்தில் மூழ்கிக் கிருதார்த்த னாகலாமென்றுன்னியிருக்கிறேன். யானிப்பிழையியற்றியதன் காரணத்தை யறிவீர்களாயின் என்மீது மனத்தளர்ச்சி யுறமாட்டீர்களென்று நம்புகின்றேன்" என்றான் சுந்தரன்.

"என்ன எண்ணத்தோடுதானிச்செயலை செய்தனை? அதனைக்கூறுவாய்!" என்றான் சத்தியகீர்த்தி.

"தங்களைத் தீங்கினின்று நீக்குவிக்க யானிப்பாதகச் செயலைச் செய்தேன். கொடுமனச்சூழ்ச்சியா லித்தீச்செயலைப் புரிந்தேனாயின் தங்கள் முன் யானின்றைக்கு வரவேண்டியதில்லை" என்றான் சுந்தரன்.

"உன் சூழ்ச்சி எமக்குத் தெரிந்தபின்னர் நங்கோபத்தைத் தணிக்க வெண்ணங்கொண்டுவந்திருத்தலுங்கூடும்" என்றானரசன்.

"அப்படித்தானெண்ணவேண்டும். என் காரணத்தைக்கேளுங்கள். பின்னர்த் தாங்கள் என்ன தண்டனை விதிக்கின்றீர்களோ அதனைத்தடையின்றி யடைகின்றேன்" என்றான் சுந்தரன்.

"அவ்வெண்ணத்தைக் கூறுதி? எம்மைத் தீங்கினின்று தப்புவிக்கவெண்ணி யிச்செயலைச் செய்தனை யென்று கூறினையே? அஃதென்னை?" என்றானரசன்.

"சோழகுலச்சூடாமணி! யான் கமலினித்தேவியைச் சிறைகொண்டது அவர்களை யடையும் பொருட்டன்று. மற்றுத் தங்கள் பொருட்டே யான் அவ்வாறு செய்தேன். யான் கூறுவதிலேதும் பொய்யின்று. உண்மையையுள்ளவாறு கூறுகின்றேன். யான் செய்தது பிழையேயாயின் என்னைச் சிரசாக்கினை செய்யுங்கள். யான் கூறுவது மிகவும் இரகசியமான விஷயம். மற்றும் யான் கூறப்போகிறவிஷயம் அநேக தினங்களாகத் தங்களுக்குத் தெரியாதது ஒரு வருஷ காலமாய்த் தங்களை யிராச்சியத்தினின்றும் நீக்க ஒரு சிறு கலகச்சபை சேர்ந்திருந்தது. அச்சபையோரின் எண்ணங்களை நேற்றுமாலைதான் தெரிந்துகொண்டேன். அச்

சபையின் நிலைவலின்மையென்று கூறுகின்றேன். அவனைத் தங்களுக்குத் தெரியும். அவன் றான் என் தம்பி. அவன் பெயர் மதிமுகன். என் உடன் பிறந்த தம்பி என்றுகூடப்பாராமல் தங்கள் நன்மையை நாடியுழைக்கின்றேனென்று தாங்களுணர்வீர்கள். அவன் தங்கள்முன் மல்ல யுத்தஞ்செய்தது அச்சபையோரின் வேண்டுகோளின்றன்று. அவன் வென்றால் தாங்கள் அவனை அன்புடன் பாராட்டுவீர்களென்று எண்ணியே! பரிவுடையோர் செயும் துன்பங்களனைத்தும் கவனிக்கப்படாமற்போதல் உலகியலென்று நினைத்து அவன் அவ்வாறு செய்யத் துணிந்தனன். அவன் எண்ணியவண்ணம் தாங்கள் பாராட்டவில்லை. அச்சபையோர் அனைவரும் மனத்தளர்ச்சி யுற்றனரன்றியுந் தங்களைச் சீக்கிரமிவ் விராச்சியத்தினின்றும் நீக்க வெண்ணினர். மற்றும் கமலினித் தேவியை நேற்றிரவிலேயே கவர்ந்து சென்று மதிமுகன் கடிமணம் புணர்ந்து அரசுரிமை யடைந்து பெற்றுத் தங்களை யிரகசியமாகக் கொலைசெய்யலாமென்றிருந்தனன். இவ்விஷயங்களை யறிந்த யான் தங்களிடத்துக் கூறச்சமயமில்லை. அதனாற் கமலினித் தேவியை யவர்கள் கவருமுன் யானே கவர்ந்து சென்றேன்.

"அவளிடத்துக் காதலுரைத்ததன் காரணத்தைத் தாங்களறிய விரும்புவீர்கள். இன்ன காரணத்தாற் கவரப்பட்டனளென்று தெரியாதிருக்கும் வண்ணமே அவ்வாறு செய்தேன். மற்றுமவர்கள் எடுத்துச் சென்றாராயின் நிமை தேவிக்கு நேரிடுவதன்றித் தங்களுக்கும் நேரிமென்றெண்ணி யான் எடுத்துச்சென்றேன். வேறு எண்ணத்துடன் யான் எடுத்துச் சென்றேனாயின் அவர்களையேன் நிர்ப்பந்தித்தல்கூடாது?" என்று சுந்தரன் படைத்துக்கூறினன்.

"நீ கூறுவனவனைத்தும் உண்மையேயாயின் மதிமுகனை என் இன்னுயிர்க்காதலி அரண்மனையில் விட்டுவிட்டுச் செல்லவேண்டும்?" என்றனரசன்.

"ஒருகால் விஷயத்தைத் தாங்களறிந்தீர்களென்று எண்ணித் தன்மீது பிழை ஏதுமில்லையென்று தோற்றுவிக்கும்பொருட்டு அவ்வாறு செய்திருப்பான்" என்முன் சுந்தரன்.

"அப்படிச் செய்திருத்தலுங்கூடும். இவ்விஷயங்களுனக்கெப்படித் தெரியும்? அதனைக்கூறுதியே யுன்மொழிகளில் நம்பிக்கை பிறக்கும்" என்முன் அரசன்.

"எவ்வாறு அறிந்தேனு ,அதனைக்கூறுதலவ்வளவு உசிரமன்று. தாங்கள் முக்கியமாய்க் கேட்பதனைக் கூறுகின்றேன். நேற்றைச் சாயந்தரம் என் தம்பியே என்னுடன் கூறினன் அவன் எண்ணத்தைத் தெரிவித்தது என்னையெவ்வின் என்னை மவர்கள் பக்கம் சேரும்படி வேண்டியே. இதுவேயுண்மை" என்றனன் சுந்தரன்.

"அதற்கு நீ என்ன கூறினாய்?" என்முன் அரசன்.

"இத்தகைய விஷயங்களில் யோசித்துத் தலையிடல் வேண்டும். பிறகு ஆழம் பாராது பாழ்ங்கிணறறிலிறங்கிய தன்மையாம் என்று கூறினேன்" என்முன் சுந்தரன்.

"ஆயின் அச்சபையோரில் மற்றவர் பெயரும் உனக்குத் தெரியுமோ?" என்முன் சத்தியகீர்த்தி.

"அறியேன். சீக்கிரத்தில் அறியக்கூடும். அவ்வாறு அறிந்தவுடன் தங்களிடத்துத் தெரிவிக்கிறேன்" என்முன் சுந்தரன்.

"அவனைக்கேட்டு அறியலாமே? ஏன் அவ்வாறு செய்யவில்லை" என்முன் அரசன்.

"சந்தேகம் பிறக்கப்போகின்றதே என்றுதான் சும்மாவிருந்தேன்."

"சரி. யான் மதிமுகன்முன் கமலினிக்குத் தீங்கியற்றியவன் என்று அவனைச் சிறையிட்டிருக்கின்றேன்" என்முன் அரசன்.

"தாங்கள் செய்தநிற் பிழையேதுமில்லை. பிழை யியற்றுதவனேனும் பிழையிபற்றக்கூடியவன்" என்றான் சுந்தரன்.

"ஆயின் அவன் தன் எண்ணத்தை யாராயின் கொலையாளியாலிறக்கத்தக்கவன் என்று தோன்றுகின்றவன்" என்றான் சத்தியகீர்த்தி.

"அவசரப்பட்டொருகாரியத்தையுஞ் செய்யலாகாது. போதுமான அத்தாட்சி யகப்பட்டபிறகு கொலைசெய்யின் யாவும் சரியாய் முடியும்" என்றான் சுந்தரன்.

"ஆயின் உன் இஷ்டப்படியே சேவரச்சிறையி லடைத்துவிடுகின்றேன். அவ்விடம் நம் வீரமார்த்தாண்டன் சிறையாளியை வெகு ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்வான்" என்றான் அரசன்.

சுந்தரன் விடைபெற்றுச் சென்றான். அரசன் அவன் கூறிய வினத்தையும் மறுபடியும் நினைப்பூட்டி உண்மைதான் என்ற தீர்மானத்திற்குக் கடைசியில் வந்தனன்.

---

## அத்தியாயம்—XIII.

"செய்தொழில் பயனு னுரைப்பரே யன்றித்
தெளிந்த ருரையினு னுரையார்."

சுந்தரன் சொல்லியவெல்லாம் உண்மையே யென்றெண்ணித் தன் புத்திரியிடத்துச் சென்று அவளிடம் கமலினி எவ்வாறு எடுத்துச் செல்லப்பட்டாளென்பதையும், அவன் காதல் கூறியவிதத்தையும், எவ்வாறு அரண்மனையை அடைந்தனளென்பதையும் அறிய எண்ணங்கொண்டு சத்தியகீர்த்தி அன்றையதினமே சாயந்திரம் அந்தப்புரத்துச் சென்றனன். அவ்விடம் விசையை மாத்திரம் தனியே என்னவோ ஆலோசித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தனள்; தந்தை அறையினுள் வந்ததையும் அறியவில்லை. சத்தியகீர்த்தி புத்திரி என்னவோ எண்ணமிட்டுக்கொண்டிருக்கின்றாள்

என்பதை அறிந்து அருகிலுள்ள ஓர் ஆசனத்தில் அமர்ந்தனன். சிறிதுநேரமாயும் தான் வந்ததைக் கவனியாததுபற்றி அரசன் விசையைநோக்கிக்,

"கண்மணி! விசையே! என்ன யோசித்துக்கொண்டிருக்கின்றாய்? யான் இவ்விடம் வந்து சிறிது நேரமாயும் கவனியாததன் காரணம் என்னவோ? கூறுவாய் உனக்கேதாவது துன்பம் நேரிட்டதோ?"

தந்தையே! நம் கமலினிக்கு நேற்று நேர்ந்த துன்பத்தைக் குறித்து யோசித்துக்கொண்டிருந்தேன். வேறென்ன யோசிக்கக் கிடக்கின்றது? தாங்கள் வந்ததைக் கவனியாமலிருந்ததற்காக என்னை மன்னிக்குமாறு கேட்டுக்கொள்ளுகின்றேன்."

"கமலினியைக் கவர்ந்தவனெவன்?"

"சுந்தரன் என்ற பிரபுவாம்."

"அவன் எவன்?"

"சத்தியவீரன் புத்திரனும், மல்லயுத்தஞ்செய்த மதிமுகன் தமயனும்."

"அவன் பெயர் முதலியன இவளுக்கு எவ்வாறு தெரிந்தன?"

"அவன்றானே கூறினனாம்."

"மற்று மென்ன சொன்னான்?"

"தன்னை மணக்கும்படி கட்டாயப்படுத்தினனாம்."

"அதற்கென்ன நம் கமலினி கூறினள்."

"அவனை நிராகரித்தாளாம்."

"பின்னர் எவ்வாறு மறுநாள் காலை தப்பிவந்தாள்?"

"மறுநாட்காலை அவ்வீட்டின் பின்புறமுள்ள சோலையில் மதிமுகன் சென்றனனாம். தான் சிறைப்பட்டதை அவனிடத்துக் கூறலாமென்றெண்ணி அவனை அழைத்தனளாம். அவன் உடனே வந்து தன் அறையினருகே காத்துநின்ற வீரனைப் போரில்

விழ்த்தித் தன்னையும் அழைத்துக்கொண்டு முற்றத்துற்றனனாம். அப்பொழுது சுந்தரன் வந்தான். மூர்ச்சையடைந்தவளாதலால் என்னநடந்ததோ இவளுக்குத் தெரியாதாம். இவளைக் குதிரை மீதேற்றிக்கொண்டு இவ்விடம் மதிமுகனை கொணர்ந்து விட்டுச் சென்றனனாம்."

"சரிதான். மதிமுகன்றான் இவளைக்கவர எத்தனித்தனனாம். சுந்தரன் தடுத்து இவ்விடம் விட்டுச் செல்லுமாறு கட்டளை யிட்டனனாம்.—அவன் அவ்வாறு செய்தனன்? சுந்தரன் நம்மிடத்து அத்தியந்தம் அன்புற்றவன்" என்றான் அரசன்.

"நீங்கள் கூறுவது மிகவும் நேர்த்தியாக விருக்கின்றது. துஷ்டன் சுந்தரன் கவர்ந்து சென்றான். மதிமுகன் இவ்விடம் கொணர்ந்து சேர்த்தான். மற்றும் காதல் கூறினவன் சுந்தரனே யன்றோ?"

"அவையெல்லாம் என்னவோ? சுந்தரன் அவ்வாறு செய்யான். அவன் செய்ததில் ஏதேனுங் காரணமிருக்கும். மதிமுகன் இவ்விடம் கொணர்ந்தது சுந்தரன் கட்டளையால் என்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை."

"எப்பொழுதுந் தங்களுக்கு நன்மை செய்பவர்களெல்லாம் துஷ்டர்கள். தீமை புரிபவரெல்லாம் நல்லவர்கள்."

"இராஜாங்க விஷயங்களைப்பற்றி உனக்கென்ன தெரியும்?" என்றான் அரசன்.

"நான் சொல்லுவதிற் குற்றம் பாராட்டாமலிருப்பீர்களாயின் சொல்லுகின்றேன்."

"என்ன? சொல். யான் ஒன்றும் நினைக்கவில்லை."

"இராஜாங்க விஷயத்தில் தங்களுக்கு நன்மையுண்டாகும் வண்ணம் நடக்கின்றீர்களில்லை."

"எப்படி!?" எனறான் அரசன்.

"தங்கள் இராச்சிய பாரத்தில் சகலரும் திருப்தியடைந்தா ராயின் என் சில பிரபுக்கள் காட்டுக்குச் செல்லவேண்டும்."

"எத்தகை இராச்சியத்திலும் சில துஷ்டரிருத்தல் வழக்கந் தானே. அவர்களைத்தான் நான் களைதல்வேண்டும்."

"தங்கள் களைய ஆரம்பித்தீர்களாயின் சனங்களுக்குக் காரணத்தைத் தெரிவிக்காமலேயே செய்யவேண்டும். அவ்வாறு செய்தீர்களாயின் இன்னும் பலரும் பகையாளிகளாகத் தலைப் படுவார்கள்."

"பின் நீ என்ன செய்யச் சொல்லுகின்றாய்?"

"எவரிடத்தும் நட்புப்பாராட்டவேண்டும். காட்டிலிருக்குங் காருண்யவள்ளலையும் நாட்டிற்கு அழைத்துவந்து அவர்க்குச்செய்த தீங்குகள் அனைத்தையும் மன்னிக்கும்படி வேண்டிக்கொள்ள வேண்டும்.—"

"ஏ! துஷ்டே! என்ன கூறினாய்? எனக்குப் புத்திகூற வந்துவிட்டனையோ? எல்லாவிதத் துன்பமும் அக்கமலினியாற் றான் வருகின்றன. ஆதலின் அவளை இவ்விடம் இனி யிருக்கச்செய் யலாகாது."

"அவளால் தங்களுக்கு என்ன துன்பம் நேரிட்டது?"

"இனித்துன்பம் நேரிடுமென்பதற்குச் சந்தேகமேயில்லை."

"என்ன காரணத்தால் தங்களுக்கு அப்படித் தோன்று கின்றது?"

"அதைப்பற்றி என்ன? அவளைச்சீக்கிரத்தில் சிறையிட வேண்டும். இனிக் கமலினி இங்கு இருக்கின்றாளென்று எவரும் அறியக்கூடாது. தந்தையிடத்துச் சென்றாளென்று சொல்லுவாய். நாளைக் காலையிற் சீவரச்சிறைக்கு அனுப்புகின்றேன்,—ஓகோ! அவ்விடம் அனுப்பேன். அரண்மனைக் கடுத்த அறையிலேயே சிறைசெய்வேன்."

கண்ணீர் பெருக்கிக்கொண்டு ஒருபக்கம் நின்றுகொண்டிருந்த விசையை கூறுகின்றாள்.

"தந்தையே! நாங்கள் இருவரும் ஒரே படுக்கையிற்றூங்கியும், சமபந்தியிலுண்டும் உடலிரண்டும் உயிரொன்றுமாய்வாழ்கின்றோமல்லவா? எங்களைப் பிரிக்கக்கூடாது. அவளைச் சிறையிலடைப்பீர்களாயின் என்னையும் அச்சிறையிலேயே அடையுங்கள்."

"அவளைச் சிறையிலடைக்கவேதான் வேண்டும். அதனால் உனக்கென்ன?"

"என்னருமைக் கமலினி சிறையிலிருக்கும்போது நான் எவ்வாறு சௌக்கியமாய் இவ்விடம் இருப்பேன்?"

சத்தியகீர்த்தி அவள் கூறுவதைக் கவனியாதவனாய்த் தன் இருப்பிடம் சேர்ந்தனன்.

விசையை துன்பமென்னும் யாற்றினால் இழுக்கப்பட்டவளாய் மனமொருவழியுமில்லாது பலவாறு கமலினிக்கு நேரிடுந் துன்பங்களைப்பற்றி எண்ணியிருந்தனள். இவ்விஷயங்களொன்று மறியாத கனகமாலை வந்தனள். விசையை கண்ணீர் பெருக்கிக்கொண்டு நிற்றலைக்கண்டு "அம்மா! ஏன் அழுகின்றீர்கள்?" என்றாள்.

"ஒன்றுமில்லை. இப்பொழுதுதான் கரும்பாம்பினால் உமிழப்பெற்ற மணிபோன்ற நம் கமலினிக்குத் திரும்பவுங் கொடுங்கேடு உறப்போகின்றது. அதைக்குறித்து யான் ஆலோசித்துக்கொண்டிருக்கின்றேன்."

"என்ன அப்படி நேரிடப்போகின்றது. நம்மால் தடுக்கமுடியுமோ?"

"இருகரை புரண்டு மிக வேகமாகவரும் கான்யாற்றின் ஓட்டத்தினைத் தடுக்கமுடியுமோ? நம் கமலினியைத் தீவினையென்னுஞ் சேனை நாற்புறமும் வளைந்துகொண்டிருக்கின்றது. ஏதேனு மோரற்புதமாயையால்தான் அச்சேனையைத் தொலைக்க வேண்டும்."

"ஏ! விசையே! நீ கூறுவதில் ஒன்றுந் தெரியவில்லை. வெளிப்படையாய்க் கூறுவாய்."

"என் தந்தை யவள்மீது ஏதோ கோபங்கொண்டு நாளைக்காலை சிறையிடப் போகின்றனராம்."

"எதன் பொருட்டு?"

"அவளிவ்விடமிருந்தனளாயின் தீங்கு விளையுமாம்."

"ஆயின் இன்றையிரவே ஏன் அவளை அரண்மனையைவிட்டுச் செல்லுமாறு செய்தலாகாது?"

"காவலாளிகளுக்குத் தெரியாமற் செய்யமுடியுமோ?"

"அதற்கென்ன? நம் ஏகாம்பரந்தான் இன்றுவாயில் காத்துக் கொண்டிருக்கிறான். மற்றும் என்னுடன் மாறுவேஷம் தரித்துக் கொண்டுவந்தால் என்னுடன்வந்த தோழி என்றழைத்துச் செல்கின்றேன். காவலாளியும் வீணான பலகேள்விகள் கேட்கமாட்டான்."

"ஆயின் அப்படியே செய்யலாம். கமலினியை இவ்விடம் வரச்செய்."

"இரவு நாலைந்து நாழிகைக்குமேல்தான் வெளிச்செல்ல வேண்டும்."

"அப்படியே! போய் அவளைச் சீக்கிரம் அழைத்துவா?" என்றாள் விசையை.

கனகமாலை யொரு கணப்பொழுதிற்சென்று அவளை விசையை யிருக்குமிடத்தினிலுய்த்தனள்.

"அக்கா! ஏன் என்னை வெகு சீக்கிரத்தில் அழைத்துவரச் சொன்னாய்?"

"அம்மா! என்னருங் கமலினி! ஒரு காட்டாறு பெருக்கெடுத்து உன் பாதத்தண்டையோடிவருகின்றது. அதனின்றும் தப்பித்துக்கொள்வையேல் உடனே ஓடவேண்டியது."

"நீ சொல்வது ஒன்றுந்தெரியவில்லையே" என்றாள் கமலினி.

"அம்மா! அரசன் உன்மீது ஏதோ கோபங்கொண்டு சிறையிலடைக்கப்போகின்றானாம்" என்றாள் கனகமாலை.

"உன்னால் ஏதோ நமக்குத் தீங்குவிளையுமாம். ஆதலின் நாளைக்காலையே சிறையிடவேண்டுமாம்" என்றாள் விசையை.

"யான் செய்த பிழைக்காக என்னைச் சிறையிடுவாராயின் அச்சிறையுள் மிகவும் மகிழ்ச்சியுடன் செல்கின்றேன்."

"அன்றேல் வெளியேறச் சன்னத்தையாயிருப்பதற்கு ஏதொருதடையுமில்லையே" என்றாள் விசையை.

"என்ன கூறுகின்றாய்?"

"இன்றை யிரவு நாலைந்து நாழிகைக்கெல்லாம் தந்திரமாய் என்னுடன் வெளிவரக்கடவாய்" என்று கனகமாலை கூறினாள்.

"அரண்மனையினின்று எங்குச் செல்வது?" என்று கமலினி கூறினாள்.

"ஏன் உன் தந்தையிடஞ் செல்லலாகாது?" என்று விசையை கூறினாள்.

"என் தந்தையிடம் எவ்வாறு யான் தனியே செல்வேன். அவரிருக்குங் காட்டிற்கு வழிதெரியாது. கள்ளர்கள் பொருந்தியிருக்குங் காட்டில் தனியே யான் எவ்வாறு செல்வேன்? விதிவினால் நேரிடுஞ்சிறையினின்றுந் தப்பமுடியாது. யான் இவ்விடமேயிருக்கின்றேன். ஸ்ரீவாதன் திரு உள்ளத்தின் வண்ணமெல்லாம் நடக்கின்றன" என்று கமலினி கூறினாள்.

"எல்லாம் இறைவனருள் என்று சும்மா விருக்கக்கூடாது. நம்மாற்கூடியவரையும் வருத்தத்தைத் தடுக்க முயலவேண்டும் பிறகு தெய்வத்தினருளை நினைத்தல்வேண்டும்" என்று கனகமாலை கூறினாள்.

"அம்மா! கமலினி! அவர் கூறுவது மிகவும் உண்மையே. நம்முடைய ஏகாம்பரத்தைத் துணைக்கொண்டு ஏன்செல்லலாகாது? நம்மிடத்து அத்தியந்தம் அன்புற்றவன். என் தந்தையிடத்துச் சிறிது வெறுப்புற்றவன்" என்று விசையை குறிப்பித்தாள்.

"யான்கூறுவதற்கு இரண்டு கூறுன். அவன் என்ன கூறுகின்றான் கேட்கின்றேன்?" என்று அவசரமாய் கமலினி கூறி எழுந்தாள்.

உடனே கனகமாலையோடு கமலினி ஏகாம்பரமிருக்கு மிடத்தை இரகசியமாய் அடைந்தனள். ஏகாம்பரம் கமலினியைக் கண்டதும் சிறிது வணக்கத்துடன் "அம்ம! என்ன தங்களுக்கு ஏதேனும் துன்பம் நேரிட்டதோ கூறுங்கள" என்று கேட்டனன்.

"அப்பா! யான் சிறுகுழந்தையா யிருந்தது முதல் உன்னைத் தெரியும். மற்று என் தந்தையிடமிருந்த வேலையாட்களில் நீயொருவன்றான் இப்பொழுதிருக்கின்றாய்" என்றாள் கமலினி.

"அம்மா! தாங்கள் குழந்தையாயிருந்த சமயத்தில் யான் எடுத்துவைத்து எத்தனையோமுறை விளையாட்டுக் காட்டியிருக்கிறேன்" என்று ஏகாம்பரம் கூறினான்.

"ஆதலினாற்றான் எனக்கு உபகாரம செய்வாய் என்று நினைத்து—" என்றாள் கமலினி.

"அம்மா! தாங்களிவ்விடம் இருப்பதனாலல்லவா யானுமிங் கிருக்கின்றேன். அல்லாக்கால் என் அன்புள்ள எசமானராகிய காருண்யவள்ளலிடம் சென்றிருப்பேன். தாங்கள் சொல்வது எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. என்ன துன்பம் நேரிட்டது? சீக்கிரம் சொல்லுஙகள். தஙகளுக்கு அபசாரம் செய்தவனை இநதக் கணமே இயமனுலக மனுப்புகின்றேன்" என்றான் அவ்வேலையாள்.

"யான் உன்னைக் கேட்கப்போகின்ற விஷயத்தைத் தடையின்றிச் செய்கின்றேன் என்று உறுதிமொழி கூறுவாய்" என்று கமலினி கேட்டாளள்.

"அம்மா! தாங்கள் கூறுவதையான் தடையின்றிச் செய்கின்றேன். ஆயின் என் மனசாட்சிக்கு———அத்தகைய விஷயந் தாங்கள் சொல்லமாட்டீர்கள்" என்றான் ஏகாம்பரம்.

"ஆனால் நான் சொல்வதைச் செய்யமாட்டாய்?" என்று கமலினி கனகமாலையின் முகத்தை நோக்கினாள்.

"அப்படித் தாங்கள் கூறலாகாது. என்ன செய்யச்சொன்னாலும் செய்யச் சன்னத்தனாக விருக்கின்றேன்" என்று கூறினான்.

உடனே இருவர் முகமுஞ் சந்தோஷக்களையுற்றன.

"அப்பா இப்பொழுதன்றோ நீ எங்கள் நட்பினனாயினாய். யான் என் தந்தையிடம்போக நிச்சயித்திருக்கின்றேன். எனக்குத் துணையாக நீ வரவேண்டும். என்ன சொல்லுகின்றாய்?"

"அம்மா! அரசர் என்ன சொல்லுவாரோ? அவருக்குத் தெரியாமற் செல்லலாமோ?"

"அதைப்பற்றி யொன்றுமில்லை. உன்னைத் தந்தையிடம் எனக்கு உபகாரி என்று கூறுகின்றேன்—"

"என் வேலையைப்பற்றி நான் பயப்படவில்லை. தங்களுக்கு அரசர் கோபத்தால் ஏதேனும் நேரிடுமோ என்று சந்தேகப்படுகின்றேன்.

"அரசன்கோபிப்பதற்குக்காரணம் ஒன்றுமில்லை. நாளைக்காலைவரும் இவ்விடமேயிருப்பேனாயின் என்னைச் சிறையிலிடுவார்கள். ஆதலால் இன்றையிரவே செல்லவேண்டும்" என்றாள் கமலினி.

"ஆனால் நான் உங்களுடன் துணையாக வருகின்றேன்" என்றான் ஏகாம்பரம்.

"போருடை யுடுத்துக்கொண்டு இரண்டு நாழிகைக்கெல்லாம் சன்னத்தனாயிருக்கக்கடவாய்" என்றாள் கனகமாலை.

"அம்மா! அப்படியே" என்று அவன் கூறினான்.

கமலினி கனகமாலை இருவரும் அரண்மனையை யடைந்தனர். விரைவாய் கமலினி போதற்குவேண்டியவற்றை ஆயத்தப்படுத்தி

வைத்திருந்தனள். கமலினியைக் கண்டதும் ஏகாம்பரம் என்ன சொன்னனென்று கேட்டாள். யாவற்றையும் ஆங்கியோடர்ந்தமாய் அவள் கூறினள்.

இரவு சுமார் ஏழரை நாழிகையிருக்கும். அரண்மனையிலுஞ் சுற்றிலும் பெரிதும் அரவம் அடங்கிற்று. பாதைகளிலும் சனங்கள் நடக்கவில்லை. அரண்மனைக்கருகிற் போருடைதரித்து ஏந்தியவாளுடன் உலாவிநின்றான் ஒருவீரன். அப்போதைக் கப்போது அரண்மனைவாயிலை யுற்று நோக்குவான்; திகைத்து நிற்பான். "ஏனை இன்னுங் காணவில்லையே! ஒருகாற் போகவேண்டாமென்று நின்று விட்டனரோ? ஒன்றும் தெரியவில்லையே" என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டு உலாவுவான். இன்னன் செயலை யுற்றுநோக்கின் அரண்மனையினின்று எவரையோ எதிர்பார்க்கின் றனன்போலும்.

இவனிங்ஙன முலாவிநிற்ப அரண்மனையி னுட்புறத்துற்று நோக்குவாம். கமலினியுங் கனகமாலையும் விசைனயுடன் போய் வருவதாகச் சொல்லிக்கொள்ளச் சென்றனர். விசையை துக்க மேலிட்டவளாய் இருந்தனள். அவளைக்கண்டதுங் கமலினி,

"ஏ! விசையே! எனக்காக நீ ஏன் துன்பப்படுகின்றாய்? உன்னினும் எனக்கன்றோ விசன மதிகமாக விருக்கவேண்டும். யான் மிகவும் சந்தோஷமுறுகின்றேன். என் பிரிவு சில நாளைக் குத்தான் ஒருவாறிருக்கும்."

"ஏ! கமலே! இவ்விதக்கொடுஞ்சொற் கூறுகின்றனையே! வேல் நுழைந்தவிடத்துக் கோலையிட்டுக் கிளறுதல்போல என் மனவருத்தத்தை யதிகரிக்கச் செய்கின்றாய் நீ மகிழ்ச்சி யெய்த வேண்டுவதுதான். ஏனெனின் உன் தந்தையைக் காணப்போகின் றாய். உன் மீதுற்ற அன்பு உன்னை விட்டுப்பிரிய மனமொருப் படவில்லை என தந்தை உன்னை வருத்தவினால் என்மீதும் வெறுப்புறவேண்டுவதுதான், என்னைப் பாமபின் குட்டி யென்று

தானே நினைப்பாய். இவ்வரசன் மகளாகப் பிறந்ததனினும் ஓர் இடைப்பெண்ணாகவேனும் பிறந்திருக்கலாம்" என்றாள் விசையை.

"உன் தந்தை என்னை வேண்டுமென்று துறந்துகின்றனரோ? என் தீவினையன்றோ இவ்விதம் சிறைப்படுத்துமாறு உன் தந்தையைத் தூண்டுகின்றது. அவரை நோவதிற் பயனொன்றுமில்லை. என்னை யானே நோவவேண்டும்" என்றாள் கமலினி.

"அம்மா! நேரமாகின்றது ஏகாம்பரம் காத்துக்கொண்டிருப்பான்" என்று கனகமாலை நினைப்பூட்டினாள்.

"அக்கா! யான் போய்வருகின்றேன். இவைகளைப்பற்றி நாம் என் நினைக்கவேண்டும்? என்றும் உன் நேசத்தை யான் மறவேன். மற்றும் என் உயிரும் உன்னாற் காக்கப்பட்டதென்று நினையாதொழியேன்" என்று கமலினி விசையையினைத் தழுவிக்கொண்டு நின்றனள். விசையை கண்ணீர் விட்டுக்கொண்டு "என்ன செய்வது? உன்னைப் பிரியத்தான்வேண்டும். உன்னுடன் யானும் வரவேண்டுமென்று மனமிருப்பினும் முடியாதகாரியம். சீக்கிரத்தினுன்னை யடைவேனென்று மாத்திரம் என் மனம்ஒருபாற் சொல்லுகின்றது. ஏ! கனகமாலை! நீ கமலினியுடன் செல்லத் தானே போகின்றாய்." என்றாள் விசையை.

"கமலினி தனியே செல்லலாகுமோ. மற்று மவளைப் பிரியேன். யான் கூடத்தான் செல்வேன்; ஆயின் என் தந்தையிடங் கூறிவிட்டுப் போகவேண்டும்.—ஒருகால் அவர் தடுத்தாலென்செய்கிறது? விசையே! தகுந்தவர் மூலமாகத் தந்தையிடம் யான் கமலினியுடன் செல்கின்றேன். அரசன் வினவினால் உறவினர் வீட்டுக்குப் போயினளென்று சொல்லச்செய்வாய்" என்று கனகமாலை கூறினாள்.

"யாங்கள் போய் வருகின்றோம். நீ மிகவும் விசனப்படவேண்டாம்" என்று கமலினி கனகமாலையுடன் சென்றனள். காவலன் இவர்களை யின்னாரென்றுகூட வினவாமல் வெளியேற

விடுத்தனன். கனகமாலையை யவனுக்கு நன்றாய்த் தெரியும். அரண்மனை யரவமடங்கியபின்னர் அனேகமுறை தனியேனும் ஒரு பாங்கியுடனும் அவள் சென்றிருப்பதை யவன் அறிந்தவன். அவன் ஏதேனும் சந்தேகம் கொண்டானேயாகில் கமலினிக்கு மிகவும் துன்பம் நேரிட்டிருக்கும். சத்தியகீர்த்தி மறுநாட்காலையிற் சிறையிடுவதற்குக் கமலினி இரகசியமாய்ச் செல்வதொரு காரணமாகும். ஒழுக்கம் பிறழ்ந்தாளென்றுங் கூறுவான். அரண்மனையுள்ளாரு மிக்காரணத்தால் திருப்தி யடைந்திருப்பார்கள். இறைவனே இவர்களை வெளியேகும்வண்ணம் துணைசெய்தனன்.

இருவரும் முன்னர் யாம்கூறிய போருடை யுடுத்து உலாவி நின்ற வீரனையணுகி அவன் பின்சென்றனர். இவர்கள் தண்டு சீவரத்தை நோக்கிச் சென்றனர். பொழுது புலர்வதன் முன் பழைய சீவரமென்னும் கிராமத்தை யடைந்தனர்.

---

## அத்தியாயம்—XIV.

"அண்ணலு நோக்கின னவளு நோக்கினள்."

மதிமுகன் சீவரச்சிறையினின்றுந் தப்பிக்காஞ்சியை நோக்கி வருவதாகக் கூறினோமன்றே. மற்றும் மதிமுகனைத் தொடர்ந்து கொண்டுவந்த வீரர்கள் அவனை வீரமார்த்தாண்டனெனவெண்ணினார்கள். மதிமுகனேறிய குதிரை மிகவும் வேகமாக ஓடியதனால் அவ்வீரர்கள் நெருக்கமாகச் செல்ல முடியவில்லை. மற்றும் மதிமுகன் இவர்களை மயக்கவெண்ணிப் பக்கங்களிற் போமாறு உரத்தகுரலுடன் கட்டளையிட்டான். அவ்வீரர்கள் அவ்வண்ணமே வெகு வேகமாகச் சென்றனர். நம்மதிமுகனைப்பின்றொடர்வா ரெவருமிலராகலான் மனத்திற் சஞ்சல மெய்திலன். தான் தப்பிச் செல்லுஞ்சமயம் குணவதியால் தடுக்கப்பட்டதும் இறைவன்றன் அருளென்றுன்னினான். தற்சமயத்துத் தீங்கெனத் தோன்றுமெவையும் பின்னர் நேரப்போகிற நன்மைக்கு அறிகுறி யென்பது

முண்மையே யன்றோ? இன்ப துன்பங்கள் சம்பவிப்பது ஈச்சுரன் றன் அருட்பயனுலன்றே! "நிலையில்லாத் தீவினையு நீதந்த தன்றே" என்ற கம்பநாட்டாழ்வார் மொழியும் பிழையாமோ? மாந் தரிடத்துத் தந்தைமுறை பாராட்டும் இறைவனோ கொடுமையைச் செய்வன்? தீயன வினைத்தும் நன்மைகளின் விதையாம். இதன் மெய்ம்மையை மதிமுகன்றன் சம்பவத்தால் நம் நண்பர்கள் அறி யக்கடவர். மதிமுகன் தண்டுசிவரத்தினின்று பொழுது புலருஞ் சமயத்துப் பழஞ்சிவரமென்னு மொரு கிராமத்தை யடைந்தனன்.

இப்பழஞ்சிவரத்திற்குங் காஞ்சிக்கும் சுமார் மூன்று நாழிகை வழித் தூரமிருக்கும். இதனருகில் உன்னதமான மலையொன் றுளது. அம்மலை யுச்சியில் ஆலிலைதுயின்ற அரவணைச் செல்வன் கோயிலொன்றுளது. அம்மலை யுச்சிமுதல் அடிவாரம் வரையில் அழகிய ஒரு சோபானமுளது. இது வைகுந்தத்தை யடைதற் கேற் படுத்திய சோபான மேயோ? வருடத்தொருமுறை எண்ணிறந்த மாந்தர் இவ்விடம் விசேஷமாய் நடக்கும் உற்சவத்திற்கூடுவர். இம்மலையடியிற் பாலியாறு பெருக்கெடுத்துச் செல்கின்றது. கோயி லுச்சியின் கண் இருப்பு அடியிற் பாலியாறு ஓடுவதை நோக்க வெம் பெருமான் திருவிக்கிரம உருவெடுத்த ஞான்று பிரமாதி தேவர்கள் ஸ்ரீ பாத தீர்த்தஞ் சேர்த்ததும் பிரவாகித்த கங்கையின் றன்மையை யொத்தது. இப்பாலியாற்றின் நீர் சுற்றிலும் உள்ள மரங்களுக்குச் செழுமையைத் தந்தது. எண்ணிறந்த தருக்கள் பசுமையான தம் கிளைகளை யெங்கும் பரவச் செய்வது குளிர்ந்த தன்மையையும் மிகுஞ்க்கியமான வெழிலினையு முற்றிருந்தன. மற்றும் மதிமுகன் காலைப்பொழுது அவ்விடம் வந்தன னுதலாற் பறவைகள் துயி லெழுந்து இன்னொலி செய்தலானது நல்வரவு கூறுதலை யொத் திருந்தது. கவிகள் வயிற்றிற் பொருந்திய குட்டிகளுடன் கிளைக் குக் கிளை தாவுதலும் கோம்பினானவை சிறிது நேரத்தொருவிதை நிறமாறிக்கொண்டு இலகுவாக ஒரு மரத்தினின்று மற்றொரு மரத்திற்குப் பாய்தலு பலவிதப் பறவைகள் அழகிய பலவன்னச்

சிறகுகளுடன திரிதலும் பார்க்கப்பார்க்க மனத்தை வசிகரிக்குந் தன்மையாயிருந்தன. இயற்கைப் பொருள்களனைத்தும் உயிர்த்தெழுந்து சுறுசுறுப்பையுஞ் சந்தோஷத்தையுங் காண்பித்தன.

இத்தகைய இடமே நம்மதிமுகன் மனநிலைக் கொற்றுமையுற்றதாயிருந்தது. மனத்தை யொரு புறத்துக் கமலினியைப் பற்றிய வின்ப வெண்ணமும் வேறொரு புறத்துத் தமயனால் நேர்ந்த துன்ப வெண்ணமும் மற்றொரு புறத்து சிறைப்பட்ட கொடுமையுறு மெண்ணமுஞ் சஞ்சலப்படுத்தி நின்றன. மனம் துக்கத்தை மேற்கொண்டிருந்தபொழுது இயற்கை யரசியின் இளமை யெழிலினைக்கண்டு மகிழ்ச்சி யடையாதிருத்த லென்னையோ? இவ்விடமன்றே காதலர் ஒருவரை யொருவர் காண்பதற்குத் தகுந்தது. இவ்விடமன்றே காதலாகிய நாவாய் தாய் தந்தையர், உற்றார், உறவினர், நட்பினர், பகைவர், முதலியோரது அபிப்பிராயமாகிய அலையுறு கடலின் துறைமுகம்! இத்தகைய தனிமைப் பிரதேயம் யாம் ஞாபகத்தினின்று முரைக்கின்றோம்.—ஆம், இக்கண்கள் அத்தகைய இடத்தைக்கண்டுள்ளன; இப்பாதங்கள் அவ்விடத்தை மிதித்துள்ளன; இம்மனம் அவ்விடத்தை யடையப் பேரவாக் கொள்கின்றது.—பொறாமை, பேராசை முதலிய குடிகொண்ட உலகத்தினின்றும் போந்து தங்கியிருத்தற்குத் தகுந்த இடமிதுவேயென்று எமக்குத் தோன்றுகின்றது.

அம்மலையிற் சிறிது தூரமடைந்ததும் குதிரையினின்றிறங்கினன். பரிமா மகிழ்வெய்தக் கண்டத்தினிடத்துக் குவிந்த கரங்கொடு தட்டி மரகதம் பரப்பிய மலர்தலைக் கலமென அருகம்புல் ஏராளமாகத் தழைத் திருக்குமிடத்தில் மேய்ந்திளைப்பாறுமாறு விடுத்தனன். மதிமுகனும் மரங்களினுற்ற பழவர்க்கங்களிற் சில பறித்துப் புசித்துப் பாலியாற்றின் நீரினைப் பருகி யிளைப்பாறக் கால்களை நீட்டிக்கொண்டு உட்கார்ந்து இவ்விதமாக வெண்ணுகின்றான்.

"என் தந்தை யிறந்தமுதல் இதுகாறும் வாழ்நாளில் இன்பமே கிடையாது. எவ்விதத் துயருமுற்றேன். காரணமின்றிச் சிறையிலடைக்கப்பட்டேன். எப்படிக் கார்காலத்தில் இருண்ட மேகமண்டலத்தைக் கிழித்துக்கொண்டு சிறிதுநேரம் வெளித் தோன்றுஞ் சூரியனென்ன அப்படி என் துன்பமண்டலத்தினின்று கமலினியாகிய வொருபேரொளி பிரகாசித்தது. கண நேரத்தில் மறைந்துவிட்டது. இன்பமெல்லாம் துன்பமாயது. துன்பத்தை யெல்லா மனுபவித்த பின்னறை இன்ப முண்டானால் உலகோர் உய்வர். இன்பத்தின் பின் துன்பம் நேரிடுமாயிற் சகிக்க முடியுமோ? தெய்வீகமாக சடகோபரைக் கண்டேன். சிறையினின்றுந் தப்பிவந்தேன். அவரைப்பற்றி நினைக்கும்பொழுதெல்லாம் என்னென்ன வெண்ண மெல்லாமோ உதிக்கின்றன. என்னை யின்னனென்று தெரிந்தே யிருத்தல் வேண்டும். யானும் முன் பார்த்திருப்பேனோ? ஒன்றுந் தெரியவில்லையே——எல்லாவற்றினுக்கு மிப்பொழுது காஞ்சிக்குச் சென்று கமலினியைக் கண்ட பின்னறையே என்மன மொருநிலைப்படும். யாம் அரசனாற் சிறையிடப்பட்டிருப்போம் என்று ஒருவித ஐயப்பாடு உதிக்கின்றது. ஆனால் யான் அவனுக்கு யாதொருதீங்கு மென்மனமாறச் செய்திலேன் என்று தோன்றுகின்றது. என்தமயனால்நேரிட்டிராது. ஏனெனின் சேரச்சிறையில் அரசனாக்கினையின்றி எவருமடைக்கப்படார். இதன் காரணத்தை யெவ்வாறறியலாம்? எனக்குப் பிழையியற்றியவ னின்னனென்று தெரியுமாயின் இப்பொழுதே அவனை யும் பரலோகத் தனுப்புவேன். இவ்விஷயங்களை யாமெவ்வாறறிவது? சூரியன் அஸ்தமனமானபிறகே இவ்விடம் விட்டேகவேண்டும். பிறரறியாமலே காஞ்சிக்குச் செல்லவேண்டும்" என்றிவ்வாறு மதிமுக னினைத்துக் கொண்டிருந்தான்.

இஃதிங்ஙனமாக கண்ணிற்குச் சிறிதே தென்படுதூரத்தில் மூன்று பிரயாணிகள் அடிக்கடி பின்புறந் திரும்பிப் பார்த்துக் கொண்டு வேகமாய் நடந்து வருவதை யறியலாம். அவர்கள் நெருங்

களுஞ் சிறிது சிறிதாக உருவந்தெளிவர்கத் தெரியும். அப்பிரயாணிகளுள் ஓர் ஆடவனும் இருபெண்களுமுளரென்று தோன்றும். இவர்களின்னரென்று நம் நண்பர்களுக்குத் தெரிவிக்கவேண்டிய தில்லை. ஒருமனிதன் போருடையுடுத்து இடுப்பிற்கட்டிய கட்கத்துடனும் பளபளப்பும் வன்மையுமுள்ள இருப்புச் சங்கிலியினாலாய மெய்ப்பை தரித்துக்கொண்டும் இருந்தான். அவன் அடியெடுத்து வைக்குந்தோறும் கணகண வென ஒருவிதச் சப்த முண்டாயது. இரண்டு ஸ்திரீகளுமோ சிரமுதல் மூடிக்கொண்டு இருந்தார்கள். மேற் போர்த்திருந்த உடையானது மிகவும் தூசுப்படிந்து வெகுதூரத்தினின்று நடந்து வருகின்றார்களென்பதைத் தெரிவிக்கும். அவர்களுள் ஒருத்தி மெலிந்த சரீரமும் மற்றையவள் சிறிது பருமனான சரீரமுடையவளாகவுந் தோன்றும். மெல்லிய சரீரமுடையாள் நடத்தலைச் சிறிது கவனித்தோமாயின் மிகவும் வருத்தத்துடன் நடக்கிறதாகத் தெரியவரும்.

விஞ்சையர் மகளிர் சாயல் மேயபொற் புற்ற நல்லாள்
பஞ்சினுக் கனுங்கும் பாதப் பைந்தொடி நடத்தல் வேட்டு
கஞ்சியே யோடு மானை யடைவுட னிகர்க்கு மென்று
னெஞ்சநெக் குருகி மிக்க் நீயே குறுவ ரன்றே!

அம்மூவருட் சிறிது பருமனான சரீரமுடையாள்,

" அரசன் நம்மைப் பின்றொடர்ந்து வருமாறு வீரர்களை விடுத்திருப்பனோ ? அப்படி விடுத்திருந்தால் அவர்கள் நம்மை யிதுகாறும் சந்தித்திலரோ!" என்று கூறினள்.

" அரசன் பின்றொடர எவரையு மனுப்பியிரான். விசையை அரசனுக்கு ஏதேனும் அவன் கோபத்தைத் தணிக்க உரைத்திருப்பாள். தேடுவதிற் பயனில்லை யென்று நினைத்துச் சும்மா விருந்திருப்பான்" என்றாள் கமலினி.

இவ்வாறு பேசிக்கொண்டு செல்லாநிற்பப் பாலியாற்றி னொருபுறம் ஒரு முதிய மாதும் ஓரிளம்பெண்ணும் பேசிக்கொண்டிருந்தார்கள். இவர்கள் மிகவும் சாதாரணமான உடை யுடுத்திக்

கொண்டிருந்தார்கள். அடிக்கடி பிரயாணிகளைக் கடைக்கணித்துப் பார்த்துக்கொண்டிருப்பதை யாம் யோசிக்க இவர்களுக்கு ஏதேனும் தீங்குபுரிய நினைக்கின்றார்களோ வென்று சந்தேகிக்கலாம். ஆனால் அவர்கள் நடவடிக்கையால் மிகவும் நல்லவர்களைப் போலத் தோன்றுவர். இவ்விளம் பெண் சாதாரணமான அழகுடையாளென்று சொல்லலாம். கை கால்கள் பருமனாக இருந்தபோதிலும் இளமைத் தன்மையை யுணர்த்தும் சரீரப் பளபளப்பு இல்லாமலிருப்பதாய்த் தெரியும். நாட்டு வாசிகளின் பெண்ணெனத் தெளியலாம். மற்றும் நகரவாசிகளிடத்துக் காணப்படும் நாகரிகமில்லாதவளாகத் தோன்றும். இவள் பேசுங்குரலுஞ் சிறிது உரத்த தொனியினதாயிற்று.

இவ்விரு மாதர்களும் யாவரோ வென்றறிய வெண்ணிய நம் பிரயாணிகள் அருகிலிருந்த மரங்களினிடையில் அவர்கள் கட்புலனாகா வண்ணம் உட்கார்ந்தனர். யாற்றின் கரை யுட்கார்ந்திருப்பவர் நம் வழிப்போக்கர்கள் அணுகியதை யறிந்தார்களோ வென்னவோ? அறிந்தபோதிலும் அறியாதவர்போல விருந்தார்கள் என்பதற்கையமில்லை. இவ்விருவரும் இவ்வாறு பேசிக்கொண்டிருந்தார்கள்.

"ஏன் ஒருவாறாகத் தோன்றுகின்றனை? சில காலமாக அடிக்கடி உன் உடம்பு நடுக்குகின்றது. நம்மைச்சுற்றிலும் யாதோர் அரவமும் கேட்கவில்லை. நீ பயப்படுவதற்கோ ஏது ஒன்றுமில்லை. ஆகையாற் காரணம் ஏதேனு மிருத்தல் வேண்டும்." என்றாள் முதியாள்.

"அப்படி யொன்றுமில்லை. நீ கூறுங் குறிக ளென்னகத்துக் காணப்படவில்லை" என்று இளையாள் கூறினாள்.

"காதல் நோயுற்றோர்க் குரியதான சில அடையாளங்கள் தோற்றுகின்றன. அப்படி யேதேனுமிருப்பின் என்னிடத்துக் கூறலாகாதா?" என்று முதியவள் வினவினாள்.

"நம்முடைய காருண்ய வள்ளலின் வீரர்கள் தலைவனான மணிவண்ணன் அழகு வாய்ந்தவனன்றே?" என்று மெதுவாகக் கூறினாள் மானினி யென்னும் இளையாள்.

"அவன் சீக்கிரத்தில் நல்ல ஸ்திதியை யடைவான்; மற்றும் அவன் பெரிய பிரபுவல்லனே? அவனைப்பற்றி நினைத்தலை யொழிதி. மற்றும் வேறு விதத்திற்கு அவனும் ஒருப்படான். உன் தமயனான மாணிக்கமும் ஒருப்படான். நானும் என் மனச்சாட்சிக்கு விரோதமாக நடக்க உத்தரவளியேன்" என்று கோமளாங்கி யென்னும் முதியாள் கூறினாள்.

"அம்ம! நீ மிகவும் துணிச்சலுடன் சொல்லத்தகாத விஷயங்களைச் சொல்லுகின்றாய். இவ்விதம் நீ எப்படிப் பேசலாம்? அவன் என்னை யிதுகாறும் பார்த்துமிலன். யான் இருப்பது மவனுக்குத் தெரியாது. மகாப்பிரபு புத்திரனான மணிவண்ணனைக் கனவில் நினைத்தலும் பயித்தியக்காரத்தன மென்பதற் கையமில்லை" என்று மானினி சொல்லினாள்.

"அப்படித் தெரிந்திருக்கும் பொழுதும் ஏன் அவனைப்பற்றிக் கனவு காண்கின்றாய்?" என்றாள் கோமளாங்கி.

மானினி நெட்டுயிர்ப் புற்றனள்.

"மெய்க்காதலாலன்றி யெவன் கரத்தையுந் தீண்டேல்" என்று மீட்டுங் கோமளாங்கி கூறினாள்.

மானினி மறுமொழி யுரைத்திலள்.

"அவனை யெப்படிக் காதலுற்றனை. அவனைக் காண்பதே அரிதாயிற்றே. மற்றும் அவன் அரசனை யடைந்து இரண்டு மூன்று மாதந்தானேயிருக்கும்" என்றாள் அவள் மீட்டும்.

"என்ன புத்தியற்றவளா யிருக்கின்றாய். கணப்பொழுது கண்டாலுங் காலமுள்ளவரையுங் காதல் கொண்டலையமாட்டார்களா?" என்றாள் மானினி.

இவ்வாறு பேசிக்கொண்டிருக்கக் கமலினி அடங்கா மகிழ்ச்சியுடன் காருண்ய வள்ளலிருக்குமிடத்தை யறியவெண்ணி யாற்றங்கரையை யடைந்தனள். உடனே அவ்விடம் உட்கார்ந்திருந்த மாத ரிருவருமெழுந்து நின்றனர். மருண்டு அவளை விழித்துப் பார்த்தனர். பிறகு கோமளாங்கி "அம்மா! நீங்க ளிவ்விட மெப்படி வந்தீர்கள்? என் ஞாபகமென்னை மோசஞ் செய்யாமலிருந்தால் நீங்கள் கமலினித்தேவி யல்லீர்களோ? தனிமையான காடாயிற்றே. துணையாக யாவரேனும் வந்திருக்கின்றார்களோ?" என்று கேட்டனள்.

"யான் இன்னளென்று உனக்கெப்படித் தெரியும்" என்றாள் கமலினி.

யான் அநேகமுறை தங்களைப் பார்த்திருக்கிறேன். உங்கள் தந்தை காருண்ய வள்ளல் என்னை அடிக்கடி உங்கள் க்ஷேமத்தைத் தெரிய அனுப்புவார். யான் யாவருக்குந் தெரியாமல் அந்தப் புறத்தில் வந்து பார்த்துச் செல்வது வழக்கம்."

"என் தந்தை சமீபத்திலிருக்கின்றாரோ?" என்றாள் கமலினி.

"ஆம் சிறிது தூரத்திலிருக்கிறார். தாங்கள் அவ்விடந் திடீரென்று செல்ல முடியாது. இங்குத்தானே மாலினியுடன் இருப்பீர்களாயின் யான் போய்ச்சொல்லுகின்றேன். பிறகு யான் திரும்பிவந்து தங்களை அழைத்துச் செல்லுகிறேன்" என்றாள் அம்முதியவள்.

இச்சமயத்துக் கனகமாலையும் சௌம்பரமும் இவர்கள் வார்த்தையாடி நிற்குமிடத்தை நெருங்கினர். உடனே மாலினி, "இவர்கள் கமலினித் தேவியுடன் வந்தவர்களோ!" என்றாள்.

"ஆம் என்னுடன் வந்தவர்களே!" என்றாள் கமலினி. முதியவளான கோமளாங்கியும் சென்றனள். சிறிது நேரத்தில் மரங்களினிடையில் மறைந்தனள். நால்வரும் ஆற்றின் கரையில் மௌனமாய் உட்கார்ந்தனர்.

இப்படியிருக்க; யோசித்துக் கொண்டிருந்த மதிமுகன் இம் மூன்று பிரயாணிகளையும் இன்னரென்றறிய வெண்ணி மரங்களி னிடையிலே தானே மறைந்து நடந்தயாவற்றினையும் நன்குணர்ந் தனன். மதிமுகன் கமலினியைத் திடீரென்று சந்திக்கக்கூடா தென்று நினைத்தோ, அன்றி அவளுக்குத் தெரியாமற் காருண்ய வள்ளலிடந் தானுஞ்சென்று அவன் நல்லெண்ணத்தை யடைந்த பின்னரே கமலினியைத் திரும்பவும் பார்க்கவேண்டுமென்று நினைத்தோ தன்னை வெளிப்படுத்திலன். ஆனல் மனத்தில் இவர் களைப் பின்றொடர்வதென்று மாத்திரம் நிச்சயித்தனன். சிறிது பொழுதிற்கெல்லாம் கோமளாங்கி இரண்டு வீரர்களுடன் வந்த னள். அவ்வீரர்கள் கமலினி இவள்தான் என்று தெரிந்ததும் மிக வும் மரியாதையாய் நல்வரவு கூறினர்கள். எல்லோரும் காருண்ய வள்ளல்பாற் சென்றனர். முதலிரண்டு வீரர்களும் பின்னர்க் கமலினியும் கனகமாலையும் அவர்களுக்குப் பின்னர் மாளினியுங் கோமளாங்கியும் எல்லோருக்கும் பின்னர் ஏகாம்பரமும் இவர் களுக்குத் தெரியாமல் ஒளித்துக்கொண்டு ஒளித்துக்கொண்டு மதி முகனும் சென்றார்கள்.

மேற் கூறியவர் அனைவரும் சிறிது தூரஞ் சென்றதும் திடீ ரெனப் பக்கத்தி லொருவித சப்தங்கேட்டது. அச்சப்தத்தாற் பயந்தவர் கமலினி, கனகமாலை, ஏகாம்பரம் ஆகிய இம்மூவரே. மற் றையோர் சிறிதும் அஞ்சாது சென்றனர். உடனே கமலினி, "என்ன? அருகில் யாரோ வருகிற சப்தங்கேட்டது. மேற் செல் வதன்முன் அதனை ஆராய்தல் வேண்டும். மனிதர் பின்றொடர்ந்து வருவதாகத் தோன்றுகின்றது" என்றாள்.

இப்பொழுது செல்பவர் யாவரும் நம் கமலினியை எஜமானி யெனப் பாராட்டுகின்றாராகலின் அவளிவ்வாறு கூறியதும் உட னே முன்னர்ப்போகும் வீரர்கள் சுற்றித் திரும்பிப் பார்க்க ஆரம்பித் தார்கள். மதிமுகன் இன்னமும் சும்மாவிருத்தல் தகுதியன்றெனா வெளிவந்தனன். கண்ணிமைப் பொழுதில் வீரர் தம் உடைவாள்

கள் உறைகளினின்றும் வெளியே எழற்றப் பெற்றன. உடனே கமலினி கண்ணீர் ததும்பும் விழியுடன் மெய்ம்மயிர் பொடித்து மதிமுகனைத் தழுவிநின்றாள்: இவர்கள் அனைவரும் இஃதென்ன புதுமையென அங்காந்த (திறந்த) வாயுடன் நின்றனர்.

கனகமாலை,

"இவர்தாம் 'மதிமுகர்' எனப் பெயருடையவர். முன்னொருவிசை நம் கமலினியை மகா கொடுமையான தசையினின்றுந் தப்புவித்தவர். நம் கமலினியும் இவரையே வரித்துளள். ஆதலின் நீங்கள் ஏதும் புதுமை பாராட்டாதீர்கள்" என்று யாவரும் இவர் தம் செயலைக்குறித்து ஐயுறுவண்ணம் கூறினாள்.

இதுநிற்க. இதுகாறும் காருண்யவள்ள லென்ற நாமத்தைக் கூறினுமேயன்றி மற்றுமவன் றன்மையைச் சிறிதுங் கூறிலம். காஞ்சிக்கும் பழஞ்சிவரத்திற்கும் மத்தியிலுள்ளது ஒரேகாடு. அக்காட்டிற்றான் காருண்ய வள்ளல் ஒன்றரை வருஷகாலமாய் வசிக்கின்றனன். இவனைச் சுற்றி நிற்பார் சுமார் முப்பது பிரபுக்களும் நூறு போர்வீரர்களுமே. இக்காட்டினிடையில் நிருமித்த ஒரு மண்டபம் மனிதர் பார்வைக்குத் தோன்றாது. செடி கொடிகளான் மறைவுண்டு இருந்தது. அம்மண்டபத்தை யடைவது சாதாரணமாக அசாத்தியமே. அம்மண்டபத்தில் அவன் தன் பிரபுக்களுடன் காஞ்சி யரசை யடையச் சமயம் பார்த்துக்கொண்டு காலத்தைக் கழித்துவந்தனன். கோமளாங்கி யென்பவள் காருண்ய வள்ளலுக்குச் சிசுருஷை செய்பவள். இவள் காருண்யவள்ளல் மனைவியின் தோழி. மனைவி யிறந்தது முதல் இவள் இவனைப் பிரியாதிருந்தனள். இவளை யடிக்கடி வள்ளல் கமலினியின் க்ஷேமத்தை விசாரித்துவர அனுப்புவதுண்டு. அவளும் மாறு வேஷம் பூண்டு மிகவும் இரகசியமாய்க் கமலினியின் சௌக்கியத்தை யறிந்து வந்து அரசனிட முரைப்பாள். தன் தந்தையனைக் காணவேண்டுமென்று வள்ளல் போவாக் கொண்டிருந்தனன். மானினி யென்பவள் ஒரு போர்வீரன் மகள். இவள் காருண்ய வள்ளலின் தானைத் தலைவனான மணிவண்ண னென்னும் பிரபுவின்மீது காமுற்றிருப்பது

சாதாரணமாக எல்லோர்க்குந் தெரியுமேனும் அவனுக்கு மாத்திரந் தெரியாது.

காருண்யவள்ளல் கமலினி தன்னிடம் வரப்போகின்றாளென்னத் தெரிந்ததும், மிகவும் சந்தோஷத்துடன் வரும் வழிபார்த்திருந்தான். அநேக நாட்களாய்ப் பிரிந்த தன் கண்ணினுண்மணியென்னப்பாராட்டும் மகளைச் சிறிது நேரத்திற்கெல்லாம் பார்க்கக் கூடுமெனின் ஒரு தந்தைக்கு எவ்வளவு ஆநந்தம் பெருகும்? அவ்வளவு சந்தோஷத்தினும் பதின் மடங்கு நம் காருண்ய வள்ளல் அடைந்தான். மற்றுந் தன்பத்தலைசயில் மனைவியு மின்றி யிருக்கின்றவனல்லனே? கமலினி முதலியோர் வெயில் மாலைப்பொழுதிற் காருண்ய வள்ளலை யடைந்தனர். தந்தையுந் தநயையுஞ் சந்தோஷ சாகரத்தி லாழ்ந்தனர். கமலினி மதிமுகன் சௌரியத்தையும் அவன் றனக்குச் செய்த உபகாரத்தையும் விசைபை தன்னை அன்புடனே பாராட்டியதையும் தான் எவ்வாறு அரண்மனை நீங்கி இவ்விடம் போந்தனளென்பதையும் சாங்கோபாங்கமாய்க் கூறினாள். காருண்ய வள்ளலும் மதிமுகனிடத்து மிகுதியும் அன்பு பாராட்டினனேயன்றி அவனை மணிவண்ணன் கீழ்த் தானைத்தலைவனாக ஏற்படுத்தினன். அதி சீக்கிரத்திற் காஞ்சியைக் கைப்பிடிக்கத் தக்க வுபாயங்களைத் தேடிக்கொண்டிருந்தார்கள்.

---

## அத்தியாயம்—XV.

> "கொடுமை! கொடுமை! இக்கொடும்பாதகன்சொல்
> கடுவெனப் பரந்தென் கைகா லடுக்கின.
> கைத்தவென் கண்ணுங் காதும்
> இத்தனை துட்டரு மிருப்பரோ வுலகில்."

மிகவுஞ் சாக்கிரதையாகப் பாதுகாக்கும்படி அரசனே ஏவிய குற்றவாளி தப்பித்துக்கொண்டு சென்றதைப் பற்றி வீரமார்த்தாண்டன் மிகவும் மனம் வருந்தினான். கூடியவரையும் மதிமுகனை

மறுபடியுஞ் சிறைபிட முயன்றும் பயன்படாமையைக் குறித்து விதியின் பயனேயென்று விசனப்பட்டான். அரசனுடைய கோபத்திற்குப் பாத்திர னானமையைக் குறித்துத் தன் விதியை நொந்தான். மிளையிலை வைதான். எது செய்து எதுபயன். கடைசியில் மதிமுகன் தப்பிப்போனதற்கு அரசனே ஒருவாறு காரணனென்று சிறிது தேறுதலடைந்தான். அரசன் தன்னையழையாம லிருந்திடின் இவ்வளவு துன்பமும் நேர்ந்திரா தென்று எண்ணினான். "அரசனது அந்தரங்கப் பகைஞரது சிறைச்சாலையன்றே யிச்சிவரச்சிறை. அவ்வாறிருப்ப என் இக்குற்றவாளியைப் பற்றி முக்கியமாகக் கவனிக்க உத்தரவளித்தான்? அவ்வுத்தரவை யேற்றுத் திரும்புதற்கு முன்னரே குற்றவாளி பறந்தனன். இச்செய்கை சாதாரணமெனக் குணிக்கற் பாற்றன்று. ஏதோ தெய்வ சங்கற்ப மிருத்தல் வேண்டும்" என்று பலவாறு யோசித்துப் பிறகு அரசனிடமே சென்று அபயம் பெறல் வேண்டுமென்று தீர்மானித்தான். வீரமார்த்தாண்டன் மறுநாள் வெயினமாலைப் போழ்திற் காஞ்சி யரண்மனை யடைந்தான். அரசன் வீரமார்த்தாண்டனைக் கண்டதும் சந்தேகித்து,

"என்ன விசேஷம்? நேற்றைச் சென்றவன் இன்றைக்கே வந்தனையே! யான் குறித்த குற்றவாளியைச் சாக்கிரதையாகப் பாதுகாத்துக் கொண்டிருக்கின்றனையா?" என்றான்.

வீரமார்த்தாண்டன் உடனே அரசன் காலில் வீழ்ந்து நடந்த வினைத்தையுங் கூறின னன்றியுந் தன்னை மன்னிக்குமாறும் வேண்டினன். அரசன் மிகவுங் கோபங்கொண்டு "ஏ! வீரமார்த்தாண்டா! உன் செய்கைக்கேற்ற பெயர் உனக்கு வைக்கவில்லை. எம்முடைய சிம்மாசனத்திற்கே கேடுவருமாறு செய்தனை. சாமானிய இராணுவத் தலைவனை யத்தகைய உயரிய பதவியில் வைத்தது எம் மேற் பிழை. இனி ஒரு கணமேனு மவ்விட மிருக்கவேண்டாம். யாம் வேற்று மனிதனை யவ்விடத்திற் கனுப்புகின்றேம்" என்று கூறினன். வீரமார்த்தாண்டன்,

"தாங்கள் என்மீது அவ்வளவு கோபித்தலொண்ணுது. எப்பொழுது சிவரச்சிறைக்கு ஒருவன் வருகின்றானே அப்பொழுதே அவன் மகா சாக்கிரதையுடன் பாதுகாக்கப்பட வேண்டியவன். இராசத்துரோகஞ் செய்தவரை யன்றிப் பின் எவர் அச்சிறைக்கு வரப்போகின்றார்கள்? தாங்களென்னை யழைப்பிக்க வேண்டுவதேயில்லை. என்னை யிவ்விட மழைப்பித்த சமயத்திற்றானே சிறையினின்றுங் குற்றவாளி தப்பித்துச் சென்றான். ஆகையால் அவன் தப்பிச் செல்லுதலே தெய்வசங்கற்பம் போலும்" என்று கூறினான்.

அரசன் மீட்டும், "பிழையியற்றியது மன்றி எம்மீதே குற்ற மேற்றவும் தலைப்பட்டனை. நன்றாயிருந்தது உன் புத்தி! எம்முன்னில்லாதே. நாளையுனக்குச் சொல்லுகின்றேம்" என்று கோதித்த பார்வையுடன் கூறினான்.

வீரமார்த்தாண்டன் மிகவும் விநயமாய், "யான் தங்கள் மீது குற்றங் கூறவில்லை. நடந்த விஷயத்தையன்றே யான் கூறினேன். தாங்கள் கோபஞ்செய்து கொள்ளக்கூடாது. என்மீது கருணை புரிந்து யான் செய்த பிழையைப் பொருத்தருளவேண்டும். மற்றும் இவ்வொருவருஷகாலமாய்ச் சிவரச்சிறையி லேதேனும் பிழை நடந்ததா?" என்று கூறினான்.

"அக்குற்றவாளி யெம்மைக் கொலை செய்ய எத்தனித்தவன். ஆதலினாற்றான் மிகவும் ஜாக்கிரதையாய்ப் பாதுகாக்குமாறு கூறினேம். அவனோ தப்பிச் சென்றான். எச்சமயத்து எவ்வேஷம்பூண்டு எம்மை யெதிர்க்கப் போகின்றானோ தெரியவில்லை. எல்லாவற்றிற்கும் நீ இனி அவ்விட மிருக்கக்கூடாது. நாளைக்காலையிற்றானே எம்மிடம் வரக்கடவாய். பகற் பொழுதெல்லா மெம்முடனேயே இருக்கக் கடவாய்" என்று சத்தியகீர்த்தி கூறினான்.

"எது தங்களிஷ்டமோ அதன்படி நடக்கச் சித்தனா யிருக்கின்றேன்" என்று வீரமார்த்தாண்டன் கூறிவிட்டு விடைபெற்றுக்கொண்டு திரும்பிச் சென்றான்.

அரண்மனையை விட்டுச் சிறிது தூரஞ் சென்றதும் ஒரு மனி தன் தன்பின்னர் வருவதைக் கண்டான். அரண்மனைக்கு அருகி லுள்ள காவையனுகலும் அம்மனிதன் வீரமார்த்தாண்டனை நோக்கி "ஐயா! தாங்கள் சிறிது என் பொருட்டுத் தாழ்த்தல் வேண்டும்" என்று அதிகாரமாயும் வணக்கமாயுங் கூறினன். அவன் சொல்லியதாற் றிகைத்து "நீ யாரப்பா? என்னிடத் துனக் கென்னவேலை? உடனே சொல், யான் முக்கியமான வேலையாய்ப் போகவேண்டும்" என்றான்.

பக்கலில் மரங்களினிடையில் நாலைந்து மனிதர் நகருவதாகச் சத்தங்கேட்டது. வீரமார்த்தாண்டன் காற்றினுலென்று சும்மா விருந்தனன். மற்றுந் தன் சௌரியத்தில் மிகவும் நம்பிக்கை யுற் றூர்க்கு மவுட்டியத் தனமதிகமாக விருக்குமென்பது யாவர்க்குந் தெரிந்ததன்றே!

"யான் வினவுங் கேள்விகளுக்குத் தடையின்றி விடைபகர் கிற்பையேல் என் வேலையைச் சொல்லுகின்றேன்" என்று மாறு வேடம் புனைந்து நின்ற சுந்தரன் கூறினன்.

"என்ன நீ மிகவும் அதிகாரத்துடன் மரியாதையின்றிக் கேட் கின்றாய்? யான் இன்னனென்று தெரியுமா உனக்கு?" என்று வீர மார்த்தாண்டன் பகர்ந்தான்.

"நீதான் வீரமார்த்தாண்டன் என்னும் பெயரினை. சிவரச் சிறை காவலர் தலைவனன்றோ நீ" என்றான் சுந்தரன்.

"யான் உன்னை யிதுகாறும் பார்த்திலேன். என்னை நீ எவ் வாறுணர்ந்தனை?" என்றான் வீரமார்த்தாண்டன்.

"இறைவனைப் பார்த்தவ ரெவருமில்லை. மற்றெல்லோரையும் இறைவன் கண்டுளான்" என்றான் சுந்தரன்.

"அப்பா! என்ன அடக்கமான குணம்! இறைவனுக்குச் சமானனென வொப்பிட்டுக் கொண்டனையே! நின் இயல்பே இயல்பு!!" என்றான் வீரமார்த்தாண்டன்.

"ஏது பரிகாசஞ் செய்யவுந் தலைப்பட்டனையோ? சும்மா இரு. அரண்மனையுள் நீ சென்றதெதன் பொருட்டு? உடனே கூறுவாய். இல்லையேல்—" என்றான் சுந்தரன்.

"அதை வினவுதற்கு நீ யாரடா? உனக்கு யான் கூறக் கடமைப்பட்டவனல்லேன" என்றான் வீரமார்த்தாண்டன்.

"தானாகவே கூறப்போகின்றாயா? அன்றி பலாத்தாரத்தாற் கூறப்போகின்றாயா?" என்றான் சுந்தரன்.

"நிராயுதபாணியாக விருக்கின்றாய் எனச் சும்மா விருந்தால் ஏது பேச்சு மிஞ்சுகின்றாய்" என்று வீரமார்த்தாண்டன் உறையினின்றும் வாளினை நீக்கினான். மேகத்தில் மறைந்த மின்னல் வெளித் தோன்றியதெனப் பிரகாசித்தது. சுந்தரனுஞ் சிந்து நிகைத்தனனேனுஞ் சிறிது கூவினான். உடனே நான்கு போர் வீரர்கள் பூமாதேவியின் வயிற்றினின்று முற்பவித்தாரென மிகவுஞ் சீக்கிரமாக வீரமார்த்தாண்டனெதிரில் நின்றனர். வீரமார்த்தாண்டன் சிறிதும் தளராமற் பக்கலில் நின்ற வீரனைத் தன் கட்கத்தாற் றாக்கினான். நால்வரும் நாற்புறமாக வளைந்து கொள்வதன்முன் ஒரு மரத்திற்கு நேரே தன் முதுகைக் காட்டிக் கொண்டு இந்நால்வருடனும் போர்புரிந்தான். இந்நால்வர் ஊறு செய்வானெய்யுங் குறிகளைத் தடுத்தனனேயன்றி யவர்களுக்குச்சிறிதும் காயம்படுமாறு வீரமார்த்தாண்டன் ஒரு வீச்சுந் தன் வாளால் வீசவில்லை. அவர்கள் வீச்சுக்களைத் தடுத்துக்கொண்டே நின்றான். வெற்றி தோல்வி தெரியாமல் சமானமான போர் செய்வதனால் இருதிறத்தினருஞ் சிறிது களைப்புற்றனர். ஒருவரை யொருவர் உறுத்துப்பார்த்துக்கொண்டு நின்றனர். ஒரு கணத்தில் வீரமார்த்தாண்டன் பாயும் புலியென இரண்டு வீரரை வீழ்த்திவிட்டு மற்றையவனை யூறுபடுத்தி நின்றனன். நான்காமவன் புறங்காட்டிச் சென்றனன். சுந்தரன் போர் நடந்துகொண்டிருக்கும்பொழுதே நழுவிவிட்டான். வீரமார்த்தாண்டன் தெய்வ கதியால் தப்பினோமென் றெண்ணினான். "அரண்மனையில் நடந்த விஷயத்தை

யிவர்கள் எதன்பொருட்டுக் கேட்கவேண்டும்? வழிபறிக்குங் கள்வரெனல் சாலாது. எவரையோ வழிமறிக்க எண்ணினர்களெனின் என் பெயரை யுரைத்தார்களன்றே! காருண்யவள்ளலின் சேனையைச் சார்ந்தவரோ? அவர்களாக விருந்தாற்றான் அரண்மனையிடயங்களை யாராய விருப்புற்றவர்களா யிருப்பார்கள். எல்லாவற்றிற்கு மரசனிடம் நானே வந்ததுங் கூறுவா" மென்று விசையாய்ச் சீவரத்திற்குச் சென்றான். யாவற்றையும் மனைவிக்குரைத்தான். அவன் மிகுதியும் வெளியே வருத்தந் தோற்றுவித்தனனேனும் மனத்திற் சந்தோஷத்தை யடைந்தானென்பதிற் சந்தேகமில்லை.

---

## அத்தியாயம்—XVI.

"தூமகேது புவிக்கெனத் தோன்றிய
வாம மேகலை மங்கைய ரான்வருங்
காம மில்லை யெனிற்கடுங் கேடெனு
நாம மில்லை நரகமு மில்லையே."

பொழுது புலர்ந்தது. சீவரத்தினின்று வீரமார்த்தாண்டனும் அவன் மனைவியாய குணவதியும் இரண்டு காளைகள் கட்டிய பெட்டிவண்டியிற் காஞ்சியைநோக்கி வந்தனர். சுதந்தரமிகுந்த உத்தியோகத்தினின்றும் கணந்தோறும் அரசன் கோபத்திற்கும் சந்தோஷத்திற்கும் பாத்திரனாகும்படியான வேலைக்குத் தான் மாற்றப்பட்டதைப்பற்றி மிகவும் வருத்தப்பட்டான். மற்றும் தன் மனைவி பிறரோடுங் கலக்குமாறும், அநேகரைச் சிநேகஞ் செய்யுமாறும் விசையை தனியேயிருத்தலினால் அவளுடன் உல்லாசமா யிருக்குமாறும் நேரிடு மென்று வீரமார்த்தாண்டன் மிகவும் வருத்தப்பட்டான். எப்பொழுதும் மனைவியைப் பிரிய மனமிலனாகலான் விபரீதமான எண்ணங்க ளெல்லா மவன் மனத்திலுற்பவித்தன. மற்றுக் குணவதியோ சிறையினின்றுந் தப்பி மறுபடியும் தன் குழுவுடன் சேர ஏதுக்கிடைத்ததென மனமகிழ்ந்தாள். கணவனது கடோர

மான கட்டுப்பாடுகளி லின்றும் உல்லாசமாக அரண்மனைக்குப் போகலாமென்னும் பேராவா அவளுககு மிகவும் சந்தோஷத்தை யுண்டுபண்ணிற்று. தன் மனைவியின் குணத்தை முற்றும் அறிந்த வனல்லன் வீரமார்த்தாண்டன். அவன் குணவதியை நோக்கி,

"எனக்கு அரண்மனைக்குப் போவதைக் குறித்து மிகவும் வருத்தமாயிருக்கின்றது. இவ்வளவு துன்பமு மப்பாதகக் குற்ற வாளியால் ஏற்பட்டன. அவனை யான் காண்பனேற் சித்திரவதை செய்வேன்" என்று சொன்னான்.

"அரண்மனைக்குப் போவதனால் நமக்கென்ன வருத்தம் நேரப்போகின்றன? அரசனது நல்லெண்ணத்தை யடைந்தால் நல்ல ஸ்திதிக்கு வரலாம், மற்றும் பிரபுக்களுடனும் ஆஸ்தானி களுடனும் ஊடாடலாம்" என்றாள் குணவதி.

"உன்னினின்றுப் பிரியுமாறு நேரிடுமோ வென்றுதான் மிகவும் வருத்தப்படுகின்றேன். மன்னன் மனைவியிலான். எங்குஞ் சுற்றித்திரிவான். அவன் மெய்காப்பாளனானால் மிகுந்த அரத்தைக் குட்பட வேண்டிவரும்" என்று வீரமார்த்தாண்டன் சொன்னான்.

"கிராமங்களில் வசித்தலைப்பார்க்கிலும் நகரங்களில் வசித்தலே மேலானது. நல்லனாகரீகங்களைத் தெரிந்துகொள்ளலாம். விநோத காட்சிகளைக் காணலாம். கௌரவம் பெறலாம். எல்லா விதத்தி லும் மேன்மையடையலாம்" என்றாள் குணவதி.

"அஃதென்னையோ? நீ அரண்மனையிலுள்ளவருடன் கூடிக் கொண்டு என்னைத் துறப்பையேல் இப்பொழுதே யான் அவ்விடம் செல்லாமல் ஓடிக் காருண்யவள்ளலுடன் சேருகின்றேன். என் உத்தரவின்றி வெளியேறுதலும் உல்லாசமாய்த் திரிதலுங்கூடாது: இதற் குடன் படுவையேல் போகலாம். இல்லாவிடின் வழியை மாற்றச் செய்கின்றேன்" என்றான் வீரமார்த்தாண்டன். குணவதி பிறகு யாவற்றினுக்கும் யோசித்துக்கொள்ளலாம் என்று மெல் லெனத் தன் கணவனைத் தழுவிக்கொண்டு,

"என்ன? அவ்வாறெல்லாஞ் சொல்லுகின்றீர்களே. என் கண்ணுளராகிய உங்களைப்பிரிந்து யான் எவ்வாறு ஒருகணமேனுந் தாழ்ப்பேன். உங்களையன்றி எனக்கு என்ன உல்லாசமிருக்கின்றது? தாங்கள் என்மீது அன்பு பாராட்டுவீர்களாயின் அதுவே போதுமானது. காட்டிலிருந்தாற்றான் என்ன? குகையிலிருந்தாற்றான் என்ன? எல்லாவற்றிற்கும் அரண்மனையில் தாங்கள் நன்மையை யடையலாம். மேலான பதவிக்கு வரலாமென்றல்லவா கூறினேன்" என்று குணவதி மிகவும் பாசாங்குடன் மழலைமிழற்றங் கிளியைப்போல் சொன்னாள்.

வீரமார்த்தாண்டன் தன் மனைவியின் ஆலிங்கனத்தால் மிக மனமகிழ்ந்து முத்தங்கொண்டு,

ஒருபொழுது நினைப்பிரியேன் ஒருபொருளு
மதியேன்நான்
பொருவறுநின் முகநோக்கிப் புயல்வீழுந்
தனிநோக்கி
விரதமனுட்டிக்குமொரு வியன்புள்ளே
மானவன்றன்
கருதரிய வின்பசுகங் காமித்து
வாழ்வேன்யான்.

என்று பாடி அவனைச் சந்தோஷிப்பித்தனன். குணவதியும் தன் நாயகன் தன்வலையிற் சிக்கியதனிமித்தம் மனமகிழ்ந்தாள். வழியினில் யாதொரு தடையுமின்றி இருவரும் அரண்மனையை யடைந்தனர்.

---

## அத்தியாயம்—XVII.

"நன்று நீ தென்றவ னென்றையு நாடான்
சென்று நீ தென்றே செறிந்திடு முரையாற்
பகர்ந்தனன் சுந்தரன் பார்த்திப விடத்து."

மேலை யத்தியாயத்திற் கூறிய விஷயங்கள் நடந்த மறுநாட் காலையிற் சுந்தரன் அரசனைத் தரிசனஞ் செய்யுமாறு அரண்மனை

யை யணுகினன். கமலினி காரிருளிற் கடிந்தேகியவன்றைமுதல் மேகங்களான் மறைவுண்ட வேனிற்கால மதியினை யொத்த முகங் கொடு விசையை சுந்தரன்முன் எதிர்ப்பட்டாள். அழகுற்றார் அசட்டையாயணியு மாபரணங்கள் மிகுதியும் விளங்குமன்றே! விசையை தன் அழகை வெளித்தோற்றுவிக்கும் எண்ண மிலளேயாயினும் இச்சமயம் ஆடவர் மனத்தை யபகரிக்கும் பேரழகு வாய்ந்தவளெனத் தோன்றினள். ஆசை யதிகரித்தார் ஆபத்துக்களை யணுவளவேனும் சிந்தியாரன்றே! மற்றும் கார்த்திருந்தவன் பெண்டாட்டியை நேற்றுவந்தவன் அபகரித்துச் சென்றதை யொப்பத் தான் சிரமப்பட்டுக் கொணர்ந்த கமலினியை மதிமுகன் எடுத்துச் சென்றான். அரசனிடம் மதிமுகன் ஏது கூறுவனோவென்று அவன் சஞ்சலமுற்றதும் இவ்வளவு அவ்வளவோ? ஏதோ தெய்வகதியாற் பல பொய்பேசித் தப்பித்துக்கொண்டான். 'பயங்கொள்ளிக்குப் பல மரணங்கள்' என்று கூறுமொழி யுண்மையேயன்றோ? அதுபோல, நம் சுந்தரன் அற்பவிஷயங்களிலும் பயந்து பொய் கூறித் தப்பித்துக்கொண்டானன்றே! ஆசையானது இப்பொழுது அவனுக்கு இயற்கையானமைந்த பயங்கொள்ளித்தனத்தையும் மறைத்துக்கொண்டு வெளித்தோன்றியது.

முன்னொருகால் அரண்மனைப் பாங்கர் ஒரு சோலையுளதென்று கூறினேமே அச்சோலைக்கு விசையை தன் எண்ணமுந்தாலும் உறவு கொண்டாட ஏகினள். "இதுவே நல்ல சமயம். இவளழகோ நம் மனத்தைக் கலக்குகின்றது. அடைந்தா லவனி யாளலாம். கமலினியிடத்தில் வேண்டியதுபோற் களவினில் மணம் புரியுமாறு வேண்ட லொண்ணாது; நல்ல தன்மையாய் நம்மை மணக்குமாறு வேண்டலாம். தெய்வம் வரங்கொடுத்தாற் 'பூசாரி வரங்கொடுப்பதற்கென்ன? முயற்சியிருந்தா லெவ்விதநன்மையுங் கைகூடும். நாமும் விசையையைப் பின்றொடர்வாம்" என்று கூறிச் சுந்தரனும் அதே சோலையிற் சென்றான்.

விசையை தாண்டிச் சென்றதும் புஷ்பச் செடிகளானடர்ந்த ஒரு புதரின்முன் உட்கார்ந்தனள். அவளுடன் வார்த்தையாட ஒரு தோழியும் வரவில்லை. அத்தனிமைப் பிரதேசத்தில் துக்கமென்னும் பதுமை உட்கார்ந்திருந்ததுபோற் றோன்றிற்று. விம்முவாள், பெருமூச்சுவிடுவாள், அழுவாள், இரங்குவாள். "அழகிற் சிறந்த ரோஜாமலரும் முட்கள் நிரம்பியிருக்குஞ் செடியிலன்றோ உற்பவிக்கின்றது! அவ்வாறாக நாம் துன்பப்படுவது ஓர் அதிசயமோ?" என்று முணுமுணுத்த குரலுடன் கூறுவாள். சிறிதுநேரம் இருகையையும் கோத்துக்கொண்டு சும்மா விருப்பாள். மறுபடியும் "கமலினியைப் பிரிந்த தினமுதல் யான் உயிரிலாச் சவமென இருக்கின்றேன். அவளோ தந்தைபால் வேகினள். நம்மைப்பற்றிச் சிறிதேனும் நினைப்பாளோ? ஆம்! நினைத்துத்தான் எது பயன்? யாம் நினைத்துக்கொண்டேயிருந்து என்ன செய்தோம்?" என்று கூறுவாள். உடனே திடீரென்று எழுந்து "என்ன அப்புதரின் கண் ஏதோ ஓசைப்படுகின்றதே!" என்பாள். "சீ! அஃது ஏதுமில்லை. நமது மனத்தின் சொரூபமே!—நல்ல வேளையாய் நமது தந்தை நம் எண்ணத்தை தெரிவித்தார். இல்லையேல் அவளை நான் கஷ்ட சம்பவத்தினின்றும் காப்பாற்றினே னென்னும் சந்தோஷமும் இல்லாமற் போய்விடுமே. கனகமாலை திரும்பிவந்து கமலினியின் சவுக்கியத்தைப்பற்றித் தெரிவிப்பாளோ? தந்தைபால் தந்திரமாய் அன்றைக்கு 'எங்குச் சென்றனளோ? ஒருகால் தப்பித்துச் சென்ற மதிமுகனை அழைத்துச் சென்றனளோ?' என்று கூறினேன். இல்லாவிடின் அவன் பின் வீரர்களை அனுப்பி யிருப்பார்.—என்ன யாதோ ஒரு சப்தம் அப்புதரின் பக்கத்திற் கேட்கின்றதே! நாமிங்கிருந்த லொண்ணாது. எவையும் துஷ்டமிருகங்கள் இருந்தலுங்கூடும். நான் இங்கிருப்பதை யுணர்ந்தால் என்னைப் பின்றொடருமன்றே. எல்லாவற்றிற்குந் தெய்வமே கதி" என்றிவ்வாறு மெதுவாகக் கூறிக்கொண்டே அவ்விடத்தினின்றும் நகர்ந்தாள். மெல்ல மெல்ல அவ்விடத்தை விட்டு நீங்கி அரண்மனையருகுற்றனள். உடனே சத்தியகீர்த்தி சோலைக்கு வருவ

தைக் கண்டாள்; கண்டதும் ஏது செய்வாள்? தலையைக் குனிந்து கொண்டு அரண்மனைக்கே செல்ல எத்தனித்தாள். உடனே சத்தியகீர்த்தி "ஏது இவ்வளவு காலையிற் சோலைக்குத் தனியே சென்றனை? தோழியரெவரையும் காணேமே!" என்று வினவினான்.

"இரவு முழுதும் சிறிது தலைவலியாயிருந்தது. குளிர்ந்த சோலைக்காற்றினால் மிதப்படுமென்று யான் வந்தேன். தோழியர் யான் வரும்பொழுது நித்திரையினீங்கிலர்" என்று விஜசயை விடைபகர்ந்தாள்,

"அவ்வாறாயின் என்னுடன் சோலைக்குத் திரும்பிவருவாய். நாமிருவரும் சிறிது உலாவலாம்" என்று அரசன் கூறினான்.

"இதுகாறு மங்கிருந்தேனாதலின் யான் அரண்மனைக்குச் செல்லுகின்றேன்; மற்றும் இளைப்பாயிருக்கின்றது" என்று விசையை கூறினாள்.

"ஆயின் நீ செல்வாய்" என்றான் தந்தை.

விசையை தன்னை உடன்வருமாறு கட்டாயப்படுத்தாததனி மித்தம் மிகவும் சந்தோஷமெய்தினாள். அவளுக்குத் தந்தையின் சமுகம் சிறிதும் பிடிக்கவில்லை போலும்!

சத்தியகீர்த்தி சோலைக்குட் சென்றான். சென்றதும் சுந்தரன் அரசனை வணங்கி நின்றான். அரசன் புன்னகையுடன் அவனைத் தன்னுடன் வருமாறு அழைத்துச் சென்றான். இருவரும் உத்தியானத்தின் ஒருபக்கம் மேடையின்மீது உட்கார்ந்தார்கள். அரசன் சுந்தரனைப்பார்த்து,

"என்ன விசேடம்? உன்னை இரண்டு தினங்களாகப் பார்க்கவேயில்லையே!" என்று கூறினான்.

"ஏதும் விசேட மில்லை. நேற்றைச் சாயங்காலம் தங்களைக் காணவந்தேன். காவலாளிகள் தாங்கள் எவருடனோ வார்த்தையாடிக்கொண்டிருப்பதாகச் சொன்னார்கள். தங்களை வீணிற் சிர

மப்படுத்த லொண்ணுதென்று காத்துக்கொண்டிராது திரும்பிச் சென்றேன்" என்றான் சுந்தரன்.

"நேற்றுமாலையோ? ஆம் ஆம்!! வீரமார்த்தாண்டனுடன் பேசிக்கொண்டிருந்தேன். உனக்கு ஒரு விசேஷம் தெரியுமோ?"

"என்னவிசேஷம், யான் ஒன்றுமறிகிலேன்."

"நாம் முக்கியமாய்க் காத்துக்கொண்டிருந்த இரண்டு பறவைகளும் தப்பி ஓடிவிட்டன."

"தாங்கள் சொல்வது தெரியவில்லையே!"

"மதிமுகன் சிவரச் சிறையினின்றுந் தப்பிச் சென்றனன்; கமலினி அரண்மனையினின்றுந் தப்பிச் சென்றனள்."

"என்றைக்கு? ஏதும் தெரியவில்லையே!"

"இருவரும் ஒரே சமயத்தில் முந்தைநாளிரவு தப்பிச் சென்றார்கள்."

"கமலினியேனுந் தப்பிச் செல்லலாம், மதிமுகன் அக்கடுஞ் சிறையினின்றுந தப்பித்துக்கொண்ட தெவ்வாறு? யாரேனும் உதவி செய்திருப்பார்களோ?" என்று சுந்தரன் கூறினான்.

"சடகோபரென்ற முனிவரைக் கட்டிப்போட்டுவிட்டு வீரமார்த்தாண்ட னிவ்விடம் வந்தசமயத்தில் தப்பித்துக்கொண்டனனும். யாரும் உதவிசெய்யவில்லை யென்றே தோன்றுகின்றது."

"இருவரும் ஒரே சமயத்தில் தபபித்துக்கொண்டுவிட்டார்களெனின் ஏதோ சந்தேக முண்டாகின்றது."

"எனக்கு ஒன்றும் தோன்றவில்லை."

"இது காகதாலிய நியாயமாயிராது. இருவருக்கும் தூதர் எவரேனு மிருந்திருப்பார்கள் என்றே தோன்றுகின்றது."

"எவன் தூதனாக விருந்திருப்பானென் றுனக்குத் தோன்றுகின்றது?"

"இன்னானென்று இப்பொழுது கூறமுடியாது. என்மீது கோபியாதிருந்தால் யான் கூறுகின்றேன்."

"என்ன ? கூறுவாய் ?"

"யாரோ ஒரு பெண்தான் தூதாயிருந்திருக்க வேண்டும். இஃது எனக்கு நிச்சயமாய்த் தெரியும். இன்னாளென்று தங்களுக்குச் சீக்கிரம் தெரிவிக்கின்றேன்."

"ஆயின் சீக்கிரம் தெரியப்படுத்துவாய். நாம் வீரமார்த்தாண்டனை அரண்மனைக்கு வருமாறு கட்டளையிட்டேம் ; அவன் நல்ல வீரனாகையால் அவனை நம்மெய்காப்பாளர் தலைவனாய் நியமித்தேம். இப்பொழுது நம் மெய்காப்பாளனான மாணிக்கத்தை அங்குச் செல்லுமாறு கட்டளையிட்டேம்."

"வீரமார்த்தாண்டனையா மெய்காப்பாளனாக நியமித்தீர்கள் ? சரிதான் அவனும் எனது அத்தைமகன் ; ஆயினு மெங்கள் குடும்பத்திற்கு மவன் குடும்பத்திற்கும் பகைமை."

"அவன் உன் உறவினனென்றெமக்கு இதுகாறுந்தெரியாது."

"ஆயின் அவன் இன்றைக்கு இங்கு வரவேண்டுமே ?

"இன்னுஞ் சிறிது நேரத்திற்கெல்லாம் அவன் தன் மனைவியுடன் வருவான்" என்றான் அரசன்.

"அவன் வந்தபிறகு தங்களைக் காண்கிறேன். யான் செல்ல விடையளிக்குமாறு வேண்டுகின்றேன்."

"எமக்கும் அரண்மனை செல்லவேண்டியிருக்கின்றது. ஆயினும் இவ்விஷயத்தைக் கேட்டுச் செல்வாய் ?"

"என்ன ? கேட்கச் சித்தனாயிருக்கின்றேன்."

"கமலினி தந்தைபாலனுகினளோ என்னவோ ? சீக்கிரத்தில் தமயனுக்கும் எனக்கும் போர் நடக்குமென்று நினைக்கின்றேன். அதற்குத் தகுந்த ஏற்பாடுகள் இரகசியமாய்ச் செய்யவேண்டும்."

" அதற்கென்ன ? உடனே செய்யலாம். முக்கியமாய்க் கமலினியும் மதிமுகனும் எதிர்ப்பட்டிருந்தால் அபாய மிருக்கின்றது. மற்றும் இருவரும் காருண்ய வள்ளலை யடைந்திருந்தால் வெகு சீக்கிரத்திற் போரை எதிர் பார்க்கலாம். ஏனெனில் மதிமுகன் எல்லோரையுந் தூண்டுவான் என்பதற்குச் சந்தேகமில்லை. முன்னமே நம்மீது பகை பாராட்டியிருந்தவர்கள் இவன் தூண்டுதலினுற்றைரிய மடைவார்கள். எல்லாவற்றிற்கும் இரகசியமா யிருவரையுஞ்சேர்த்து வைத்த பெண்ணைப்பற்றி விசாரித்த பிறகுதான் யோசிக்கவேண்டும். யான் விடைபெற்றுக்கொள்கின்றேன்" என்றுரைத்துச் சென்றான். சத்திய கீர்த்தியும் சிறிது நேரத்திற்கெல்லா மரண்மனை யடைந்தான்.

அரசன் சமூகத்தை விட்டு நீங்கிய சுந்தரன் அவனுக்குத் தெரியா வண்ணம் அரண்மனையுள் நுழைந்து விசையை வசிக்கும் அறைக்குட் சென்றான். விசையை தனியே யுட்கார்ந்திருந்தாள். சுந்தரன் வந்ததும் திடுக்கிட்டு "என்ன விசேஷம்?" என்று கேட்டனள். அவன் விசையை சொல்லாமலே ஓரா தனத்தமர்ந்தனன். சுந்தரன் மறுமொழி யாதும்பகராமைப்பற்றி மனமுளைந்து ஒருபக்கந் திரும்பினாள். சுந்தரன் தன் சமூகம் இவட்கு வெறுப்பாயிருக்கின்றதென் றுணர்ந்து உரைவழங்கலாயினான்.

" அம்மா ! சில தினங்களாக மிக்க வருத்தமுற்றிருப்பதையுற்று நோக்கியான் ஒருவாறு தேறுதல் கூறலாமென்று வந்தேன்."

" என்விஷயத்தி லவ்வளவு பிரயாசை யெடுத்துக்கொண்டதற்காக மிக்க வந்தனமுள்ளவளாக விருக்கின்றேன்" என்று சிறிது பரிகாசக் குரலுடன் கூறினாள்.

விசையையினது வார்த்தைகளின் பொருளுணராச் சுந்தரன் " அரசியின் மனத்தவர்ச்சியை யறிந்து அதற்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்தல் குடிகளெவ்வொருவருக்குங் கடமையாகும். மற்றுந் தங்களைப்போன்ற இயற்கையரசியின் மனவருத்தத்தை மாற்ற

முயலுதற்கு உலகிலுள்ள எல்லாப் பிராணிகளுங் கடமைப்பட்டிருக்கின்றன" என்று கூறினன்.

விசையை இவன் றன் உயர்வுநவிற்சியான மொழியினைக்கேட்டு "யாரு இயற்கையரசி? வசந்த காலத்தை யன்றோ இயற்கையரசியென்று கூறுவர். அத்தகைய இயற்கை யரசியையுஞ் சில்லோர் புகழ்வர், சில்லோர் இகழ்வர். அவ்வாருக அற்ப பெண்ணுகிய என்னைச் சகலப் பிராணிகளும் கொண்டாடுகின்றனவென்முல் அது முழுப்பொய் என்று சொல்லாமலே விளங்கும். இவையெல்லாமிருக்கட்டும். தங்கள் காரியமென்னை? சீக்கிரஞ்சொல்லும். என் தோழியருடன் நீராடச் செல்லவேண்டும்" என்று கூறினள்.

"கமலினித் தேவி தந்தைபால் ஏகினள். மதிமுகனழைத்துச் சென்முன். நம் கனகமாலை இவ்விருவர்க்குந் தூதுசென்றன ளன்றே! அவள் வந்துவிட்டனளோ?" என்று சுந்தரன் கேட்டனன்.

"மேற்கூறிய விஷயங்கள் யார் உமக்குச் சொன்னூர்?"

"யார் கூறினுற்முன் என்ன? உண்மை யிதுவெனின்."

"அப்புறம் யாது விசேஷம்?"

"கனகமாலை வந்துவிட்டால் எல்லாம் விசேஷந்தான்."

"அவள் வந்தனளோ என்னவோ தெரியவில்லை. உமக்குத் தெரியுமா?"

"என்னைக்கேட்டால் தெரியுமா? விசையவல்லி அம்மாவைக் கேட்டாற்முன் தெரியவரும்."

"ஏது பரிகாசத்திற்காரம்பித்துவிட்டீர்கள்! அந்தவேலை அரசனை யடைந்த பார்ப்பார்க்கன்றே உரித்து."

"இவ்வாறெலா மிழிவு படுத்துக் கூறவேண்டாம். உன்னுடைய குணங்களையெல்லா முணர்ந்தேன். மதிமுகனையும் கமலி

லியையும் அரசன தெண்ணத்திற்கு மாருகக் கூட்டிவைத்தவள் நீயல்லேயோ? இது விஷயம் அரசனுணர்ந்தால் அரர்தைக்கேது வாம். அவனிடத்திற் கூறவேண்டாமெனின் என்னை மணக்கு மாறு வாக்குத்தத்தஞ் செய்வதுடன் அரசன் உன்னை வினவும் போதும் என்னையே மணப்பனென்று கூறுவதாகவும் வாக்களி. இது விஷயத்தைப்பற்றி யோசிக்க இரண்டு தினங்கள் கொடுக்கின் றேன். இவ்வளவு கடோரமாயிருக்கின்றே னென்று எண்ண வேண்டாம். உன்மீது காதல்கொண்டே இவ்வாறு கூறுகின்றேன். நீ என்னை வெறுத்தலின் இவ்வாறு கூறினேன். இல்லாவிட்டால் நல்லவிதத்திற் கேட்டிருப்பேன்" என்ருன் சுந்தரன்.

"உன்னை வெறுக்கின்றேன் என்று தெரிந்தும் என்னை மணக் குமாறு வேண்டுதல் நியாயமோ? கமலினியை இரகசியமாய் எடுத்துச்சென்ற கள்வன் நீயல்லேயோ? அவள் உன்கைக்கெட் டாததனுல் என்னை வருத்தத் தலைப்பட்டனையோ? அரசனிடத் திற் கூறினுலுஞ்சரி கூருமற்போனுலுஞ்சரி. யான் சூதுநடந்த வள் என்று நீ கூறுமொழியி னுண்மை அரசனே தெரிந்து கொள் வான்" என்று கூறிவிட்டு எழுந்து சென்ருள்.

சுந்தரன் தனியே சிறிதுநேரம் உட்கார்ந்திருந்து தனக்குள் யோசிக்கலாயினுன்: "இவளோ மிகவும் பயப்படாச் சித்தமுள்ள வளாயிருக்கின்ருள். ஒருகால் இனியமொழி பகர்ந்திருந்தால் உடன்பட்டிருப்பாளோ? நமக்கெப்பொழுதும் பெண்களை வசீக ரிக்குஞ் சக்தியில்லை. நாம் பயத்தினுலும், பலாத்காரத்தினுலும் பெண்ணை வசீகரிக்க முயலுகின்ருேம். எப்பெண்ணும் நம்மை விரும்புகின்ருளில்லை. நாம் விரும்பினுல் லென்னபயன்? ஒருவர்மீது ஒருவர் அன்பிருந்தாலன்ருே இன்பமுண்டாம்.

"ஒருதலைக் காம மன்னினர்க்
கின்னலே யன்றிமற் றின்ப மில்லையே."

என்று கூறியிருக்கின்றது. ஆம் இப்பொழுது நூலிற்கூறியபடி நடக்கிறதென்ருல் முடிகின்றதா? சுலபமாய் எழுதிவிடலாம்.

நடக்கிற தென்றுலன்றே கஷ்டந்தெரியும்? இப்பொழுது நாம் அரசனுக்குத் தெரிவித்துத் தகுந்த உபாயஞ் செய்து விரைவில் யின்ஜ நாம் அடையவேண்டும்; முன்னர் ஒரு கிளி கையிலின்றுந் தப்பிச் சென்றது. இப்பொழுது இக்கிளியையேனும் பாதுகாத்து அடையவேண்டும்" என்று பலவாறு நினைந்து எழுந்து சென்றான்.

---

## அத்தியாயம்—XVIII.

"எண்ணின் றியேது ணியுமெவ்வழி யானு மோடு
முண்ணின் றுருக்கு இரவோருரை கோட லின்று
நண்ணின் றியேயு நயவாரையு நயந்து நிற்குங்
கண்ணின் றுகாம நனிகாமுறு வாரை வீழ்க்கும்."

குணவதியும் வீரமார்த்தாண்டனும் அரண்மனையை யடைந்தனர். அரசன் ஆக்கினையால் அரண்மனையி னொருபக்க மதிவர்கள் வசிக்குமாறு நேரிட்டது. வீரமார்த்தாண்டனுக் கிவ்வாறிருத்தல் விருப்பில்லையேனு மென்செய்வான்? அரசன் ஆணைப்படி நடக்கவேண்டியதாயிற்று. குணவதியோ தான் அரண்மனையிலேயே தங்குமாறு நேரிட்டதேயென மிகவும் மனமகிழ்ந்தாள்.

இப்பொழுது நம் கதையைத் தொடருமுன்னம் குணவதி வீரமார்த்தாண்டன் ஆகிய இவ்விருவர் தம் பரஸ்பர அன்பைப் பற்றிச் சிறிது கூறுவாம்:

இதுகாறுங் கூறியவைகளான் வீரமார்த்தாண்டன குணவதி பால் மிகவு மன்புற்றவன் என்பது தெற்றன விளங்கும். வீரமார்த்தாண்டனுக்குக் குணவதிபாலுள்ள அன்பு உண்மையாகவும் அளவற்றதாகவு மிருந்தது. இனி எவ்வாடவரானும் அவ்வளவு அன்பு ஒரு மனைவியின்மீது பாராட்டுதலரிது. இவனது அளவற்ற அன்பானது மிகுதியும் பொறுமைக்கிடங்கொடுத்தது. வீரமார்த்தாண்டன் பொறுமைப்பட்டா னெனின் தன்மனைவி சோரம் போய்விட்டாளென்றும் சோரம்போய்விடுவாளென்றும் நினைக்க

வில்லை, ஒரு கணமேனுந் தன்னைவிட்டுப் பிரியாமலிருத்தலினும் அடிக்கடி தன்னிடத்து அன்பு பாராட்டுவதாயுங் கூறுவதினும் விருப்புடையவளா யிருந்தாள். இவ்வாறான அன்பு சித்திரத்திற் குணவதியாற் பொறுக்க முடியாமற்போயிற்று. முதலிற்குணவதி புதுமணப்பட்டொழிந்ததும் வீரமார்த்தாண்டன் றன் கழிபெருங் காதலழிந்து மனையாளிடத்து வைக்கவேண்டிய அன்புடன் வாழ்வானென்று நினைத்தாள். வீரமார்த்தாண்டனிடத் தப்படியல்லாமல் நாளுக்குநாள் அப்பொறாமை யதிகரித்தது. குணவதிக்கிவ்வித வாழ்க்கையிற் சிறிதும் பிரியமில்லை. நாளடைவிற் பரபுருடரை இச்சிக்கு மெண்ணமு மதிகரித்தது. அதிகரிக்கவே அன்னோர்க்குரிய தைரியமும் வளர்ந்தது. முதலிற் சடகோபரைத் தன்வலையிற்படுத்த முயன்றனள். அது பயன்படாமற் போயிற்று. இன்னுஞ்சிலகால மக்கேயிருந்திருப்பாளாயின் ஒருகாற் சடகோபரை வசப்படுத்தியிருக்கவுங்கூடும்; இப்பொழுது அரசனையே தன்வலையிற் சிக்குமாறு செய்ய எண்ணங்கொண்டு தன் அழகை எடுத்துக்காட்டும் அணிகளும் உடைகளுந் தரித்துக்கொண்டு மயிலென நடப்பாள். அரசன் மருண்டு நோக்குவான். புன்முறுவல் செய்வான். உடனே குணவதி மனமுளைந்து தன் அழகு அரசனை வசீகரிக்கவில்லையென்று வேறு விதமாக உடையும் அணியுந்தரிப்பாள். வீரமார்த்தாண்டன் இவள் செயலை வினவினுல் அவனிடத்தாசை மிகுதியா லிவ்வாறெலாஞ் செய்வதாகக் கூறுவாள். அவநம்பிக்கையில்லாத அவன் மற்றும் அன்புபாராட்டுவான்.

அரசனும் மனைவியிலானன்றே! இவளழகின் மயக்கினனேனும் வெளித்தோற்றுவிக்கச் சமயம் நேரிடாதிருந்தான். வீரமார்த்தாண்டன் வந்த மறுநாள் அரசனை யனுகித் தான் காஞ்சிக்கு மதிமுகன் தப்பி யோடியதைத் தெரிவிக்கவந்த காலத்திற் சில கள்வர் தன்னைத் தடுத்ததையும், அவர்கள் வினாவிய கேள்விகளையுந் தான் மறுமொழிகூறுது அவர்களுடன் பொருது அவர்களைத் தொலைத்ததையும் விவரமாய்க்கூறினன். மற்றும் அக்கள்வர்கள் காருண்

யவள்ளலைச் சார்ந்தவீரர்களாயிருத்தற்குத் தகுந்த காரணங்கள்கூறினான். அரசன் அத்தனையுங்கேட்டுக்கொண்டு அதற்குத்தான் செய்ய வேண்டியதைப்பற்றிக் கேட்டான். வீரமார்த்தாண்டன் "அன்னர் கள்வரேயாயின் அதனால் தீங்கேது மிலது. காருண்யவள்ளலின்வீரர்களாயின் அது மிகுதியும் அஞ்சற்பாலது" என்றான்.

"எவ்வாறு? நாம் ஏன் அஞ்சவேண்டும்?" என்று அரசன் கேட்டனன்.

"ஏனெனிற் பகைவர் தம் ஒற்றர் நாட்டினில் வந்த செய்திகளைத் தெரிந்து கொள்வாராயின் நம்முடைய குறைவுகளைத்தெரிந்து கொண்டு அதற்கேற்பச் சைனியங்கள் சந்நத்தஞ் செய்துகொண்டு யுத்தத்திற்கு வரக்கூடும்" என்றான் வீரமார்த்தாண்டன்.

"எவ்வித ஏற்பாடுகள் செய்தல்வேண்டும்?" என்றான் அரசன்.

"நமது நாட்டினெல்லையைச் சுற்றிலும் பகைவர் வாராவண்ணம் பாதுகாத்தற்கும், அப்படி வருபவர் எண்ணத்தை யறிதற்கும், இப்பகைவர்களில் முக்கியமானவரைச் சிறைபிடித்தற்கும், இன்னும் சமயோசிதமாகச் செய்யவேண்டியவற்றைச் செய்தற்கும் நாம் யாவனேனும் ஒரு வீரனைச் சில யுத்தவீரர்களுடன் அமைக்கவேண்டும்" என்றான் மெய்காப்பாளன்.

"அத்தகையா னொருவன் இவ்வரண்மனையி லெவனுளன்?" என்று வினவினன் அரசன்.

"அவனின்னனென்று என்னால் தெரிவிக்கமுடியாது; யான் வந்து இரண்டு தினங்கள் தாமே யாகின்றன. தாங்கள் தெரிந்து எடுக்கலாம்."

"உன்னைத்தவிர மற்றெவனும் அத்தகைய உதவிபுரிதற்கேற்றவனல்லனென்று தோற்றுகின்றது. ஆனால் நீ எப்பொழுதும் அத்தகையவேலையிலே யிருத்தற்கேலாது. நம் சுந்தரன்—ஏதோ உனக்கும் உறவினனும்—அவனும் இவ்விஷயத்தில் உதவிபுரிவான். இருவரும் மாற்றிமாற்றி யித்தகைய காவல் செய்யுங்கள். அரசனிடத் தந்தரங்கமான பிரியம் வைத்திருப்பவர் இன்னுரென்று

யானறிவேன். அவர்களை நல்ல ஸ்திதியிற் சீக்கிரங் கொணரத் தகுந்த ஏற்பாடுகள்செய்வேன். தடையேதும் பகராது செல்லக் கடவாய். இப்பொழுது சுந்தரனையும் வரவழைத்து அவன் எண்ணத்தையும் அறிவேன். நீ செல்வாய்" என்று அரசன் கூறினான்.

வீரமார்த்தாண்டன் "தங்களிஷ்டப்படியே செய்யச் சித்தமாயிருக்கின்றேன்" என்று கூறிவிட்டு மிகவும் மனக்கலக்கத்துடன் சென்றான். மனைவியைக் கண்டான்; கண்ணீர்ததும்பிற்று. அவள் மனக்கலக்கம் எய்தியதற்கேது வென்னவென்று விசாரித்தாள். வீரமார்த்தாண்டன் பெருமூச்சுவிட்டுக்கொண்டு "உன்னைப் பிரியுமாறு நேரிட்டிருக்கிறது. அதுவும் யானே 'யானை தன் தலையில் மண்ணைவாரிப் போட்டுக்கொண்டா' லென்னச் செய்துகொண்டேன்" என்றான்.

"அப்படி என்ன நேரிட்டது?" என்று குணவதிகேட்டனள்.

"சீக்கிரத்திற் போர் நிகழுதற் கேதுவிருத்தலின் எல்லைகாக்க என்னையும் சுந்தரனையுந் நியமித்தனன் அரசன்."

"இக்கட்டளைக்குத் தாங்களெவ்வாறு காரணம்?"

"போர் நிகழ்வதற்கேற்ற நிமித்தங்கள் யானே கூறினேன்."

"தெரிந்த விஷயத்தைக் கூறத்தானேவேண்டும். இராஜத் துரோகம் செய்யலாமோ? நீங்களிக்கட்டளையை எதிர்பாராதிருந்தும் தெய்வச்செயலாய் உங்களையே தொடர்ந்தது. சீக்கிரம் போர் முடிந்துவிடும். எல்லாம் சரியாய்ப் போய்விடும். கவலைப்படுவதிற் பயனென்ன? போய்த்தான் தீரவேண்டுமே" என்று குணவதி நியாயங்காட்டினாள்.

வீரமார்த்தாண்டன் இவள் கூறிய மொழிகளைக் கொடுமொழியெனப் பாவித்து உறுத்து நோக்கினான். குணவதியுங் கலக்கங் கொண்டனளெனப் பாசாங்குசெய்தாள். வீரமார்த்தாண்டன் தன் விதியை நொந்து "அன்பிலாப் பெண்டிரை யடையுமாறு தெய்வம் நியமித்ததே" என்று கூறிச் சென்றான்.

---

## அத்தியாயம்—XIX.

"பொய்யன் மின்புறங் கூறன்மின் யாரையும்
வையன் மின்வடி வல்லன சொல்லன்மின்."

வீரமார்த்தாண்டன் அரண்மனைக்கு வந்ததும் வருவதாக அரசனிடத்துக் கூறிச்சென்ற சுந்தரன் சில தினங்கட்குப் பின்னர் அரசனைக் காணவந்தனன். அரசனிடத்துக் காவலன் சுந்தரன் வரவை யுணர்த்தினன். அரசன் உடனே வருமாறு கட்டளையிட்டான். சுந்தரன் அரசனை வணங்கி அவன் நியமித்த ஆதனத் தமர்ந்தான். பின்னர் அரசன் சுந்தரனை நோக்கி, "மூன்று நான்கு தினங்களாக ஏன் வரவில்லை?" என்று வினவினன்.

"அன்றே வருவதாகக் கூறிச்சென்றவன் உடம்பு ஒருவாறாக இருந்ததனால் வரவில்லை, அதற்காக மன்னிக்கவேண்டும்" என்றான் சுந்தரன்.

"என்ன உடம்பு? இப்போது சவுக்கியந்தானே" என்றான் அரசன்.

"இப்பொழுது ஒன்றுமில்லை. மற்று வீரமார்த்தாண்டனும் அவன் மனைவியும் நேற்று வந்தார்களெனக் கேள்விப்பட்டேன். யானும் அவர்களைப் பார்க்கவேண்டும்"

"வீரமார்த்தாண்டன் என்றதும் அவன் கூறிய விஷயம் ஞாபகத்திற்குவந்தது. முன்னொருநாள் நம்மைக்கண்டு அவன் சிவ ரத்தை நோக்கிச் செல்லுகையில் யாரோ வழி மறித்தார்களாம்."

சுந்தரன் சிறிதும் பயத்தாற் பின்னிடையாது "அப்படி வழி ப்பவர் யார்? ஒருகால் கள்வரேயோ? அன்றிக் கலகச்சபையி லொருயரோ?" என்று கூறினன்.

"மற்றும் அவர்கள் அரண்மனையில் நடந்தவிஷயத்தை யுரைக்குமாறு வற்புறுத்தினராம்."

"அதற்கவன் யாரெனக்கூறினன்? தப்பித்துக்கொள்வதற்கு விஷயமனைத்தையும் சொல்லிவிட்டானா?" என்று பரபரப்புடன் கேட்டனன்.

"ஒன்றுங் கூறவில்லையாம். மற்றும் வீரமார்த்தாண்டனை இழித்துக் கூறினனும், அவன் கோபங்கொண்டு போர்யத்தனிக் கையில் இலங்கின் வயிற்றைக் கிழித்துக்கொண்டு வெளித் தோன்றுவதென்னச் சிலவீரர்கள் எதிர்த்து நின்றார்களாம். நம் வீரமார்த்தாண்டன் தன் வல்லமையால் அவர்களை முதுகுகாட்டச் செய்தானும். மற்றும் முதலிற் சமாசாரம் வினவினவன் பறந்தனனும். இவ்விஷயங்களை நம்மிடங்கூறினன். அப்பகைவர் இன்னரென்று அறியக்கூடவில்லை. யாராய் இருக்கலாம் என்று உனக்குத் தோன்றுகின்றது?" என்று அரசன் வினவினன்.

"தாங்கள் கூறியவற்றை பராலோசிக்கின் பகைவர்தம் சேனையைச் சேர்ந்தவர் என்றே நினைக்கவேண்டியிருக்கிறது. மற்றுயான் முன்கூறிய கலகச்சபையினரா யிருத்தலுங்கூடும்" என்றான் சுந்தரன்.

"அக்கலகச் சபையினராயிருந்தால் அரண்மனையில் நடந்த விஷயங்களை யறிய ஆவல்கொள்வார்களா? மற்றும் வீரமார்த்தாண்டன் பெயரைக் கூறினார்களாம். அவன் இன்னனென்று தெரிந்தும் அவனுடன் போர்செய்ததெதற்கோ?" என்றான் அரசன்.

"ஆயின் பகையரசன் சேனையாகத்தான் இருத்தல்வேண்டும். ஒருகால் ஓடியவன் மதிமுகனேயோ? அவனாயிருந்தாற் புறங்காட்டி யோடானே! ஒருகால் நிகழும் போரில் வீரமார்த்தாண்டன் சயித்தால் தன்னைச் சிறை செய்வான் என்று ஓடிவிட்டனனோ! எவ்வாறாயினும் மதிமுகன் கமலினியுடன் பகையரசனைச் சார்ந்திருத்தல்வேண்டும். அவ்வாறாயின் கட்டாயம் போர்செய்ய வருவான். ஆதலின் - யாம் சாக்கிரதையாயிருத்தல் வேண்டும். மற்றும் வீரமார்த்தாண்டனை எதிர்த்தவர் அவ்வரசனைச் சார்ந்தவ

ராயின் அவர்கள் பின்னும் நம் நாட்டிற்குள் வந்து துன்பஞ் செய்யாதிருக்க ஏற்பாடு செய்தல் வேண்டும்" என்றான் சுந்தரன்.

"எத்தகைய ஏற்பாடு செய்யவேண்டும்?"

"ஒரு சேனைத்தலைவனைச் சிலருடன் எல்லைப்புறமாகச் சுற்றும்படியாகவும் பகையரசன் சேனைகளி லெவரையும் சிறைகொணருமாறும் நியமிக்கவேண்டும்."

"அத்தகைய சேனைவீரன் மிகவும் நம்பிக்கையுற்றவனாயிருத்தல்வேண்டும். அவன் இன்னனென்று எனக்குத் தோற்றவில்லை."

"மாணிக்கம் அவ்வகை உத்தியோகத்திற் கேற்றவனாயினும் சிவரச்சிறையிற்கன்றோ தாம் காக்குமாறு அனுப்பியிருக்கின்றீர்கள். ஏன்? வீரமார்த்தாண்டனை அனுப்பலாமே."

"எப்பொழுதும் ஒருவனையே அத்தகைய வேலைக்கனுப்புதல் உசிதமன்று. கடிமணம் புணர்ந்தகாளையன்றோ அவன்? அழகிய தன் மனைவியை அகத்துவிட்டு எப்பொழுதும் வெளிச்சேறல் அவன் மனத்திற் கேற்றதன்று. மற்றும் அவன் அரசனிடத்து அன்புற்றவனென்று அறிகிலம். ஒருவர்க்கிருவர் மாறிமாறிச் சென்று இத்தகைய வேலையை செய்யின் யாதொரு நீங்கிற்கு மிடமில்லை" என்றான் அரசன்.

"இரண்டாமவன் வேறு எவனும் எனக்குத் தோற்றவில்லையே."

"நமக்கு எப்பொழுதும் உண்மையா யிருப்பவன் நீ யல்லையோ? என் நீயே செல்லலாகாது?" என்றான் அரசன்.

சுந்தரன் போர் யென்றுற் காதூரம் பின்செல்லும் வீரனேனும் அரசனுக்குத் தன் இழிவைக்காட்ட மனமிலனாய்,

"ஆயின் யான் செல்கின்றேன். என்றுமுதல் இவ்வித ஏற்பாடுகள் செய்வதாய்த் தாங்கள் நினைத்திருக்கின்றீர்கள்?" என்றான் சுந்தரன்.

"ஏன்? நாளைமுதல் இவ்வித ஏற்பாடு செய்திருக்கிறேன். நாளைக்கு வீரமார்த்தாண்டன் செய்வான். மறுநாள் நீ செல்லக் கடவாய்" என்றான் அரசன்.

அப்படியே யென்று சுந்தரன் வீரமார்த்தாண்டனைக் காணு மாறு சென்றான். வீரமார்த்தாண்டன் ஏதோ ஒரு முறையில் சுந்தரன் றன் அத்தை மகனேனும் இதுகாறும் ஒருவரையொருவர் பார்த்திலர். ஆனால் வீரமார்த்தாண்டனுக்குச் சுந்தரன் உறவின னென்று தெரியும்.

சுந்தரனைக் கண்டதும் வீரமார்த்தாண்டன் திடுக்கிட்டான். உயரம் ப்ருமன் முதலிய அன்று காட்டில் தன்னை இழிவாயுரைத்த வனுடன் ஒப்பாயிருந்தமையினாலோ அவ்வாறு திடுக்கிட்டான்? ஆம். ஆயினும் மனக்கலக்கத்தை வெளித்தோற்றுவிக்காமல் "உட் காருங்கள்" என்று வீரமார்த்தாண்டன் கூறினான்.

சுந்தரன் உட்கார்ந்ததும் தானும் உட்கார்ந்தான். இருவரு சிறிது மௌனமாய் ஒருவரை யொருவர் நன்றாய்ப்பார்த்தனர். வீர மார்த்தாண்டன் சுந்தரனைப் பார்க்கப் பார்க்கச் சந்தேக மதிகரித் தது. பிறகு சிறிதுநேரத்திற்கப்பால் சுந்தரன்,

"வீரமார்த்தாண்டா! நாம் ஒருவரை யொருவர் இதுகாறும் பார்த்ததில்லை. யான் உன் மாமன் மகன். உன் தந்தைக்கு மென் தந்தைக்கு நேரிட்ட மனஸ்தாபத்தால் ஒருவரை யொருவர் இது காறும் பார்க்க முடியாதிருந்தது. எம் தந்தை இறந்ததும் அம் மனஸ்தாபம் மறந்துவிட்டது. இனி யாம் உறவினராக விருக்க வேண்டும்" என்றான் சுந்தரன்.

சுந்தரன் குரலினால் வீரமார்த்தாண்டன் தன் சந்தேகம் ஏறக் குறைய நீங்க அவனை மிகவும் வெறுப்புடன் உற்றுநோக்கினான். அதைச் சுந்தரன் அறியவில்லை. பின்னர் வீரமார்த்தாண்டன்,

"புதிதான உறவினனைப்பார்க்க மிகவும் சந்தோஷ மடைகின் றேன். இதுகாறும் ஒருவரை யொருவர் பாராது பிரிந்திருந்து

பெரிதும் தெளர்ப்பாக்கியமே. தம்பெயர் சுந்தரரோ ?" என்றனன்.

"ஆம் உன் மனைவியையும் யானிதுகாறுங் கண்டிலேன்; ஆதலின் அம்மாது சிரோமணியையும் பார்க்க விரும்புகின்றேன்" என்றான் சுந்தரன்.

வீரமார்த்தாண்டன் "குணவதி!" என்று கூப்பிட்டான். அவள் உடனே "ஏன்" என்று வந்தனள்.

வீரமார்த்தாண்டனுடன் அயலான் இருப்பதைக்கண்டு தான் உரத்த குரலுடன் விடைபகர்ந்ததன் நிமித்தம் வெட்கப்பட்டுக் கொண்டு சிறிது தூரத்தில் நின்றனள். உடனே வீரமார்த் தாண்டன் "இவர்தாம் என் அம்மான் மகனர். இதுகாறும் ஒரு வரை யொருவர் தெரியாமலிருந்தாலும் இன்று இறைவனருளால் ஒன்று சேரப்பெற்றோம்" என்றான்.

"அம்மா! உன்னைக்கண்டு யான் மிகவும் சந்தோஷமுற்றேன். இன்றைத்தினத்தை நாம் நல்லநாளாக என்றும் நினைக்கவேண் டும்" என்றான் சுந்தரன்.

"ஆம் உண்மையாக இது சுதினமே. தாங்களினி யடிக்கடி இவ்விடம் வருவீர்களென்று நம்புகின்றேன். இன்றைக்கு இவ் விடமே போஜனஞ்செய்து போகலாம்" என்றாள் குணவதி.

வீரமார்த்தாண்டன் சில காரணங்களுக்காக இவனிருத்தலிற் பிரியமிலனேனும் தன்மனைவி விரும்பியதனால் தானும் சுந்தரனை இருக்கும்படி வேண்டினான். சுந்தரன் அவர்கள் வேண்டுகோட் கியைந்தனனேனும் தன் வீட்டிற்குப் போஜனமானதும் செல்லல் வேண்டு மென்றனன்.

உண்டிகொண்டபின் சுந்தரன் "உன்னை யானறே சில தினங்கட்குமுன் அரண்மனைக் கருகிலுள்ள காட்டிலெதிர்த்தன னுமே!" என்றான்.

வீரமார்த்தாண்டன் சுந்தரனை உறுத்து நோக்கிக்கொண்டு,

"ஆம். யாவரோ எதிர்த்தார்கள்? அவர்க ளின்னாரென்று அறியக்கூடவில்லை. அவர்களுட்டலைவன் வீரர்கள் வந்ததும் மறை ந்துவிட்டனன். யாதுகாரணமோ? தெரியவில்லை. அவன் வீரமே வீரம்! அவனை யின்று காண்பேனேனும் என்னை அவமதித்துப்

பேசியதற்காகக் கொலைசெய்யா தொழியேன்" என்று பற்களைக் கடித்துக்கொண்டு உக்கிரத்தோடுங் கூறினன்.

சுந்தரன் உடல்முழுதும் நடுங்கிற்று. சிறிதுநேரம் சும்மாவிருந்து தன் பயங்கொள்ளித்தனத்தை யொருவாறு மறைத்துக்கொண்டு,

"அவனை யின்னனென்று அறியமுடியவில்லையே! பயனென்ன?" என்றான் சுந்தரன்.

"அவன் உயரத்தினனும், பருமனனும், குரலினனும் இப்பொழுதேனும் அறிவேன்" என்றான் வீரமார்த்தாண்டன்.

"அவன் மூகக்குறியா லறிய முடியாமற்போனற் சந்தேகமின்றி இன்னனென்று சுட்டிக் கூறுதல் முடியாதன்றே" என்றான் சுந்தரன். வீரமார்த்தாண்டன் இன்னும் தன் எண்ணத்தைத் தெரிவிக்க மனமிலனாய்,

"ஆம். நீ கூறுவது உண்மையே. ஆயின் அன்னோர் பகையரசரைச் சார்ந்தவரென்று யான் அயிர்த்தேன். அரசன் என்னை எல்லைகாப்பத னிமித்தம் தலைமை கொள்ளும்படி நியமித்தான். உன்னையும் நியமிப்பதாகக் கூறினன்" என்றான் மார்த்தாண்டன்.

"ஆம் என்னிடத்துங் கூறினன். யானும் ஒப்புக்கொண்டேன். அரசனுக்குத் துன்பமுண்டானால் அதை நீக்குதல் குடிகளின் கடமையேயன்றோ?" என்றான் சுந்தரன்.

"உண்மைதான். ஒருகால் அவர்கள் அரசன் அந்தரங்கக் குடிலராயிருத்தலுங் கூடுமென்று தோன்றுகின்றது. சீக்கிரத்தி லின்னரென்று அவர்களைத் தெரிந்துகொள்வேன்" என்றான் மார்த்தாண்டன்.

"ஏதேனும் தெரிந்துகொள்வதற்கு ஏற்பாடுகள் செய்திருக்கின்றனையோ" என்றான் சுந்தரன்.

"அதைப்பற்றிப் பின்னர்த் தெரிவிக்கின்றேன்" என்றான் வீரமார்த்தாண்டன்.

சுந்தரன் சிறிது நேரத்திற்கெல்லாம் வீரமார்த்தாண்டனிடத்துங் குணவதியிடத்தும் விடைபெற்றுக்கொண்டு வீட்டிற்குச் சென்றான். வீட்டிற்குச் செல்லும்போது வீரமார்த்தாண்டன்

கூறியவைகளை நினைந்து நினைந்து பயங்கொண்டு பின்னர் அடிக்கடித் திரும்பித்திரும்பிப் பார்த்துக்கொண்டு " அன்றெதிர்த்தவன் யான்தான் என்று அறிந்துவிட்டானே " என்று நினைந்து வீட்டையடைந்தான்.

---

## அத்தியாயம்—XX

" கோயில் புக்குநற் குருமணி நெடுமுடிக் குரிசில்
வேயின் மிக்கநல் லுருவமை வெள்வளைத் தோளி
யாய மைக்கணாள் குணவதி யணிபுய மவாவிற்
றேய வுற்றன னவளிவன் காதலை யுவந்தாள்."

குணவதி தனியே ஓர் அறையின்கண் உட்கார்ந்திருந்தாள். அவடன் முகஞ் சிறிது ஒளி குன்றியுந் தீர்க்காலோசனை யான் மனமொரு நிலைப்பட்டவள் போலவுந் தோன்றினாள். அவடன் முக வெண்மையானது அச்சமயம் உடுத்திருந்த நீலவன்ன ஆடைக்கு ஒரு காட்டாக இருந்தது.

இவ்வாறு முகம் வேறுபாடடைந்திருப்பினும் மிகுந்த கட்டழகுடையாளெனத் தோன்றினாள். அவள் கூந்தல் இருளின் சமுகங்களெனப் பின்னிக் கட்டப்பட்டிருந்தது. அவள் தன் இனிய பார்வையானது ஆடவர் மனத்தை யபகரிக்கும் தன்மையதாக விருந்தது.

அவள் தனியாக இருக்கின்றாளென்றன்றே கூறினோம். ஆம். தன் தோழியாகிய சுந்தரியை அறையினின்றும் அனுப்பிவிட்டாள். ஏனெனின் தன்மனத்தின் நிலைமையை ஆலோசனையானிற்றென உணருவாளென்று போலும். ஒருகால் அரசன்மீதுற்ற ஆசையை வெளித்தோற்றவிக்காது அடக்குவதற்காகவோ இவ்வாறு செய்தனள்? அன்றி யாரோ வருவதை எதிர்பார்த்திருக்கின்றாளாகலிற் பிறர் அறையின்கண் இருத்தலாகாதென அவளை யனுப்பினாள் போலும்.

அரண்மனையில் வந்ததுமுதல் அரசனிடத்துக் காதல்கொண்டிருப்பதாக யாம் முன்னர்க் கூறினோமன்றே. குணவதி அரசனி

டத்துக் காதல்கொண்டுளளேனும் சிற்சில சமயங்களில் தான் தன் புருடனுக்குத் துரோகஞ் செய்வதை நினைத்து மனமழிவாள். எவ்வளவு கெட்ட எண்ணமுடையவரேனும் அப்போதைக் கப் போது மேகத்தில் மறைந்த சூரியன் தன் கிரணங்களைக் காட்டி மறைதல்போல நல்லெண்ணமும் அவர்பால் உதிக்குமன்றே! அரசன்றன் உருவத்தை அவள் மனத்தினின்றும் வெளியோட்ட முயன்றும் பயன்படாமற் பின்னும் அது மிகவும் அன்புடன் குடி கொண்டது. அவனைப்பற்றி நினைக்கவேண்டாமெனினும் போரா சையாகிய கள்வன் தூண்டப் பின்னும் அதிகமாக நினைக்கும்படி நேரிட்டது. இவ்வாறு இருக்குஞ்சமயத்தில் தான் அரசனை யடைந் தாற்பெறக்கூடிய பதவியையும் பெருமையையும் நினைப்பாள். பெரு மூச்சு விடுவாள். வீரமார்த்தாண்டனிடத்து எவ்வாறினி யொழு குவதென மருளுவாள். அச்சங்கொள்வாள். தன்மன மிவ்வாறு எண்ணத்தலைப்பட்டதே யென வருந்துவாள். கடைசியாகத் தான் உட்கார்ந்திருந்த நாற்காலியி னின்றெழுந்து அறையினுலாவத் தலைப்பட்டாள். அரசனைப்பற்றிய எண்ணத்தை யொழிக்கத் தன் தலைவன் தன்மீது வைத்திருக்குங் காதலை நினைப்பாள். அவனை மோசஞ் செய்யவேண்டியதைக்குறித்து மன நைவாள். அரசனைக் காமித்தலா லடையக்கூடிய கேட்டினை நினைவாள். மற்றும் அவன் மனத்தைச் சந்தோஷிப்பிக்கு மாற்றல் தனக்கில்லாமையால் அவ னிடத்திற்றனே இருத்தல் இனி முடியாதென உன்னினாள். மற்றும் அவனிடத்திலேயே எப்பொழுது மிருத்தல் முடியாது. சிலகாலத்திற்குப்பிறகு பிரிவதனினும் இப்பொழுதே பிரிதல் நல மென்று நினைப்பாள்.

"பாவமும் பழியு நல்கும் பல்வகைப் புகழ றக்கன்
யாவையு மழிக்கு மெய்து மின்பமு மதனு லெய்து
சோவுகன் மரபுஞ் செய்யு நோன்புநல் லொழுக்கு மேன்மை
சாவுமென் னூறும னிற்குந் தயங்குபுன் காம மென்பார்"

அன்றியும்,

"தீமை யுள்ளன யாவையுந் தந்திடுஞ் சிறப்புந்
தோமில் செல்வமுங் கெடுக்குநல் லுணர்வினைத் தொலைக்கு

மேம நன்னெறி தடுத்திரு ளுய்த்திடு மிதனற்
காம மன்றியே யொருபகை யுண்டுகொல் கருதில்."
என்ற முன்னோர் மொழிகளை நினைந்துருகுவாள்.

சிறிது நேரத்திற்கெல்லாம் அவள் உடல் நடுங்கிற்று. அறையின் நாற்புறமும் பார்த்தாள். மறுபடியும் மறுபடியும் அரசன் பக்கலே தன் எண்ணஞ் செல்வதைத் தடுக்கமாட்டாது நின்றாள். உடனே தன் அறையின் கதவங்கள் திறக்கப்பட்டன. சுந்தரி தான் வருவாள் என்று அப்புறம் பாராமலே ஓராதனத்தமர்ந்தாள். உடனே அரசன் அவள்முன்பு நின்றான். கனவுதானோ தன்னெண்ணத்தின் உருவுதானோ என்று சந்தேகித்துப் புறங்கையாற் கண்களைத் துடைத்துக்கொண்டு மறுபடியும் பார்த்தாள். அரசனே என்று தீர்மானித்து வெருண்டு நின்றாள். ஒன்றும் பேசாமற் சிறிது தூரஞ்சென்று தலைகுனிந்து நின்றாள்.

ஆ! ஆ!! என்னே மாதர்களின் தன்மை. அன்பனைக்காண வேண்டுமென்று வேணவாக்கொண்டு அவன் எதிரில் வந்ததும் தலைகுனிந்து விரும்பாதவள் போலவும் 'ஏழைப்பெண்ணின் தனிமையைக் கெடுக்கவந்தவன் நீ' என்னும்படி மேல்வேடம்போட்டுக் கொண்டு நிற்பதென்னோ? ஆங்கிலக்கவியாகிய பைரன் * என்பவர் ஸ்திரீகளின்றன்மையைக் கூறும்பொழுது அன்னாரினிய சொற்களனைத்தும் நீரின்மேலெழுதிய எழுத்தாமெனவும், வன்சொற்களெல்லாம் மணல்மேலெழுத்தெனவும் கூறுகின்றனர். அவர் மொழி மெய்ம்மொழி யென்பதற்குச் சந்தேகமுமுளதோ?

" வணங்குங் கொழுநனை நோக்குகின் றிலளாற்
றுபமே யடைவா னுயகன் வெளியைச்
சார்ந்ததுஞ் சேடியர் வருந்திப்
பூபனை யழைத்து வந்திடின் மிகவும்
பொருள்செயான் மூங்கையாய் நிற்பாள்."

என்ற வடமொழிப் புலவர் தம் மொழியும் மெய்ம்மையே.

சிறிது நேரத்திற்கப்பாற் குணவதி அரசனைக்கிட்டி வணங்கி, "மகாராஜ! தாங்க...ளிவ்விடம் வந்ததனல்...யாங்கள் பாக்

* Byron.

கியவந்தாரனேம். எளியகுடியாகிய எம்பாற் கட்டளையிடக்கூடிய தென்னையோ ?" என்று கூறினார்.

"யான் நினைத்தன வனைத்தும் பொய்யாயினவோ ? என்ன மூடன்யான்" என்றான் அரசன்.

"ஏதேனுந் தாங்கள்கூறிய விஷயத்தில் மாறுபாடாக என் தலைவர் நடந்தனரோ ?" என்றாள் குணவதி.

"உன்னிடத்துப் பிரியம்வைத்த அரசனிடத்து இம்மாதிரி யான மொழிபகாதல் நேரிதோ ?" என்றான் அரசன்.

"யான் கூறியவற்றி லேதேனும் பிழையுளதாயிற் பொறுத் தருளுமாறு வேண்டிக்கொள்ளுகிறேன்."

"யான் பொறுத்தருளும்படியான குற்றம் நீ யாதுஞ் செய்ய வில்லை. யான் கூறுவதாக இவ்விடம் வந்த விஷயத்தில் ஏதேனுங் குற்றமிருப்பின் மன்னிக்குமாறு யான் வேண்டுகின்றேன்."

"தங்கள் கட்டளைக்குப் பாத்திரையாகிய அடியாளிடத்திற் பொறுத்தருள வேண்டுமென்று தங்களைப்போன்ற மகா புருஷர் கூறுதல் தகுதியன்று."

"ஏ! குணவதி! உன்னிடத்திற் காதல் கொண்டுளேன்; உன்னைக்கண்ட நான்முதல் என் மனம் வேறு எப்பொருளிடத்தும் பற்றாது வருந்துகின்றது. அவ்வருத்தத்தை யொழிப்பவள் நீயே யென்று உன்னிடத்து வந்தனன்" என்றான் அரசன் அவள் முகத்தை யுற்று நோக்கிக்கொண்டே.

குணவதி மறுமொழி கூறவில்லை. அவள் முக மொருவாறு மாறியதைக்கண்ட அரசன் தேறுதலடைந்து மறுபடியும் "உன் மீது காதல் கொண்டுள்ள அரசனிடத் தொருமொழி கூறலா காதோ ?" என்று கூறினான்.

"தாங்கள் கூறுவது ஒன்றுந்தெரியவில்லை" என்று மெல்லிய குரலுடன் குணவதி கூறினாள்.

உடனே அரசன் சின்னென அருகிற்சென்று அவள் மிருது வாகிய கரங்களைப்பற்றி முத்தங்கொண்டு "உண்மையில் இன்றே யான் கிருதார்த்தனாயினேன். என் மனைவி யிறந்தது முதல் உன் னைப்போன்ற மாதினைக் காணாததனால் இவ்வாறு வீணே காலத் தைக் கழித்தேன்."

"தாங்கள் கூறுவது உண்மையோவென்று என்மன மயிர்க்கின்றது" என்றாள் குணவதி.

"அதற்குச் சந்தேகமு முண்டோ? யான் கூறுவத னுண்மையை விளக்குமாறு ஏதேனு முனக்குச் செய்ய வேண்டுமானாற் கூறுவாய். பின்னர் யான் கூறுவத னுண்மையை யறிவாய்"

"ஆயின் என்னை நேசிக்கின்றீர்கள்?" என்று கீழ்நோக்கிய பார்வையுடன் குணவதி சொன்னாள்.

"யான் உன்மீது காதல்கொண்டுளேன் என்பதற்குத் தடையு முண்டோ? நீ என் காதலை நிராகரிப்பையேல் யான் இறப்பது உண்மையே" என்றான் அரசன்.

"ஆம்! ஆம்! உண்மையே! ஒருபெண் தன் கவுரவத்தையும் நாணத்தையும் விட்டுத் தன் குடி குலம் முதலியவற்றின் பெருமையையும் ஒழித்துக் கடிமணம் புணர்ந்த கணவனையுங்கடிந்து வேறொரு ஆடவன்மீது காதல் கொள்ளுதல் நேரிதோ?" என்றாள் குணவதி.

குணவதி இவ்வாறு கூறியதும் அரசன் சிறிது மயங்கினான். பிறகு அவள்கூறிய சொற்களைக் கவனித்துப்பார்த்து, "உன்னுடைய காதற்றிறத்தை யானுவக்கின்றேன்" என்று கூறுவதையொப்ப அவள்முகத்தை நோக்கினான். அவள் முகத்தைச் சிறிது உற்று நோக்கியதும் ஆசையென்னும் அனலானது அழகாகிய வாயுவாற்றூண்டப்பெற்றுத் தழுவி முத்தங்கொண்டான். குணவதியவனைத்தடுக்காமல் அசைவற்றுப் பதுமையென நின்றாள். பின்னர் இருவரும் ஓராதனத்தமர்ந்தார்கள்.

"இவையனைத்துந் தங்களுக்காகச் செய்யவேண்டும். ஆகலின் தங்கள் முழுப்பிரியத்தையடைய இச்சிக்கின்றேன்" என்றாள் குணவதி.

'நீயே இனி யென்னின்னுயிர்த் துணைவி' என்று அரசன் கூறினான். குணவதி கரத்தைத் தன்கரங்களில் வைத்துக்கொண்டு விளையாடிக்கொண்டிருந்தாள். அரசன் தன் அழகில் மிகவும் மயங்கியுளனென்பதை யறிந்துகொண்டு "என்னருமை மகாராஜா!" என்று அரசனை அணைத்து "உங்களிடத்து யான் வைத்

துள அன்பு இத்துணைத்தோ? இனித் தாங்கள் என்னைச் சிறிது காலத்திற்குப்பின் அசட்டை செய்யாமலிருப்பதாய் வாக்களிக்க வேண்டும்.—நான் உங்கள் உள்ளன்பை நம்புகின்றிலேனென்றாவது தன்னயங் கருதிக்கூறுகின்றேனென்றாவது நினையாதீர்கள்.—என் மனத்தின் நிலை இற்றென யானே அறிய முடியாவண்ண மிருக்கின்றது. என் செய்வேன்?'' என்று கூறினான்.

"ஏ! குணவதி! என்காதலில் ஐயப்பாடுறுகின்றது மிகுதியும் பிழையே. உன்னை இராஜமகிஷியென யாவரும் பாவிக்கும் வண்ணம் செய்யாமற் போவேனோ? அப்பொழுதல்லவோ என் காதலின் பெருமையை யுணருவாய்'' என்றான் அரசன்.

"உலகினர் என்னை வையாமலும் அவமதியாமலு மிருப்பார்களாயின் அதுவே எனக்குப் பெரிய மரியாதையாம். கொண்டவனைவிட்டுக் கொற்றவனைக் கைப்பற்றிய பாதகி என்று உலகோர் கூறுவரே; என்செய்வேன்? மற்றும் என் புருஷன்—அன்று வீரமார்த்தாண்டன் என்னை என்செய்வானோ? அவன் என்மீது மிகவும் அன்புபாராட்டியவனேனுங் கொடியவனாயினனே. அரசனெனவும் அஞ்சான். யாவரையும் கொலைசெய்து தன்னையுங் கொலைசெய்து கொள்ளும்படியான மனவுறுதி யுடையவன்'' என்று பிரலாபித்துக் குணவதி கூறினாள்.

"வீரமார்த்தாண்டன் அடிக்கடி வெளியே தங்கியிருக்கவேண்டும். அச்சமயங்களில் யானிவ்விடம் வருகின்றேன். அவனுக்கு நம் சிநேகம் என் தெரியவேண்டும்? இவ்வாறு சில காலங்கழிக்கலாம். பின் எல்லாவற்றிற்கும் பார்த்துக்கொள்ளலாம்'' என்றான் அரசன்.

"அவ்வாறு வஞ்சனைசெய்துகொண்டு எவ்வாறு இருத்தல் கூடும்? மனம் ஒருபாலிருப்ப யான் எவ்வாறு அவனை அன்புடன் பாராட்டவல்லேன்? அன்றியும் அரசர்க்குரியளாயபின் அற்பருக்கு உரியளாவேனோ? அவனை அரண்மனைக்கு வாராவண்ணஞ் செய்யுங்கள்'' என்றாள் குணவதி.

"உடனே செய்தல் கூடாது. பத்துத்தினங்கள் நீயும் பொய்ம்மையன்பு அவன்பாற் பாராட்டித்தான் வரவேண்டும். பிறகு

அவனை ஆண்மனைக்கு வாராவண்ணம் வெளியேயே எல்லை காக்கும்படி செய்கின்றேன்" என்றான் அரசன்.

"நீயின் தங்களிடத்து ஒருவரம் வேண்டுகின்றேன். அஃதாவது அவனை வருத்தக்கூடாது என்பதே."

"என் அவனை வருத்தவேண்டும்? யான் உன் இஷ்டப்படியே செய்கின்றேன்" என்றான்.

அரசனும் மனமகிழ்ச்சியுடன் குணவதியினிடத்து மிக்க அன்புபூண்டு ஒழுகலாயினான். வீரமார்த்தாண்டன் தன்மனைவியை யடிக்கடி விட்டுப்பிரியவேண்டியதன் நிமித்தம் வருத்தப்பட்டான். என்செய்வான்? பாவம்!

---

## அத்தியாயம்—XXI

"எவ்விடத் தழுகு நன்ன ரிசைந்துகட் களிப்புண் டாக்கு
மவ்விடத் தமைந்தி ருக்கு மரியபல் குணமு மன்றே."

மனிதர்கள் தங்கள் மனத்தைக் கவரும்படியான தன்மையுள்ள பெண்ணைக் காணுங்காலம்வரையுந் தத்தம் மனைவியர்க்கு உண்மையா யிருப்பார்கள். அம்மனக் கவர்ச்சியானது வன்மையதாயின் அதற்கவர்கள் இடங்கொடுக்கிறார்கள். இஃது எவ்வாறிருக்கின்றதென்றால் ஒரு கயிறானது எவ்வளவு பளுவைத்தாங்குமோ அவ்வளவிற்கு மேற்படுமேல் அறுந்துபோய்விடு மென்பதைப்போல விருக்கிறது. ஆசை யெப்படி மனிதருக்கோ அப்படியே பொருள் பெண்களுடைய இளகிய மனமாகிய கயிற்றிற்கொரு பளுவாகும். பொருளினால் மேன்மையனான ஒருவனை எத்தகைய பெண்ணும் விரும்புவாள். ஆனால் தான் மணம்புரிந்த நாயகனைவிட்டு வேறு ஆடவனை அணையநினைக்கும் பெண் அப்பொழுதே உற்பவித்தழியும் மலரினைப்போலும்.

காதல் வனத்தில் மலரும் புஷ்பத்தைப்போலும். அரேபியா தேசத்துத் தாழையைப்போல மலர்ந்ததும் அழிகின்றது. காதலோ வாழ்நாளாகிய ஒரு பெரியவனத்தில் மலர்ந்தும் சிறப்பினையிழந்து அழிகின்றது. மேலும் அக்காதல் காற்றுமழைக்காலத்து வானத்

திற்றேன்றும் ஒற்றை நட்சத்திரத்தைப்போலும். எவனொருவன் அம்மலரை முதலிற் பார்க்கின்றானோ அவனுக்கு அம்மலர் தாழ் கின்றது. அவன் அதைப் பறித்துச் செல்லுகின்றான்.

ஒவ்வொரு மனிதனும் பெண்களின்னெழிலினால் மயங்கிவிடு வான். இது நம்புராணங்களிற் கூறிய மகாருஷிகளின் சரிதையை யுற்றுநோக்கியதும் தெரியவரும். பெண்களழகையோ பொன் னினாலடையக்கூடும். முற்காலத்திலு மிக்காலத்திலும் இப்படியே நடந்துவருகின்றது. இவ்வுலகமே ஒரு பெரிய சந்தை. அச்சந் தையில் எவன் அதிகவிலை கொடுக்கின்றானோ அவன் எத்தகைய பொருளையுமடைகிறான். ஆனால் அவ்விலை அச்சமயத்திற் கேற் றதா யிருத்தல்வேண்டும். அவ்வளவுதான். மற்றொன்றுமில்லை.

மனைவியினிடத்து மிகவும் அன்புபாராட்டிய வீரமார்த்தாண் டனை விட்டுவிட்டு அரசனிடத்து நட்புப்பாராட்டிய குணவதி யின் தன்மையைச் சிறிது ஆராயின் முற்கூறிய விடயங்களின் உண்மை தெற்றெனவிளங்கும். ஒருவன் நன்மையை யடைய வேண்டுமாயின் பலர் துன்பமடையவேண்டும். இது சாதாரண மாக உலகில் நடைபெறுஞ் சட்டமாம். எது வலிமையிற் சிறந்த தோ அது கெடுகோன் இவ்வுலகில் தினமுமுண்டாகும் போரின்கண் வெற்றிபெற்று நீடுழிவாழும் என்று உயிர்நூற் புலவர்கள் கூறுவார் கள். அதன் உண்மையை இச்சந்தர்ப்பத்தில் ஆலோசிப்போ மாயின் குணவதியின் ஆசையாகிய வலிமையுடைய பொருள் நிலை நிற்கவேண்டுமாயின் பாவசெயலைச் செய்யத்தான்வேண்டும். நம் வாழ்நாள் முழுவதும் ஒரு பெரிய நீடித்த பாவவாழ்க்கை யென் போரின் கூற்றமொருவாறு ஏற்புடைத்தாம். நாம் உயிருடன் வாழ அநேகம் பொருள்களை அழிக்கின்றோம். ஏனெனில் இவ் வுலகில் வலிமையுள்ளதே நீடித்து நிற்கும்.

இத்தகைய மாபாதகத்தை நம்குணவதி எதற்குச் செய்தனள்? பேராசையெனும் கள்வனது தூண்டுதலினாலன்றோ! ஆம்! பேராசை யென்பதன் தன்மைதான் என்னை? உயர எறவெற வளர்ந்துகொண்டேவரும். அது கணக்கில்லாப் பழுக்களையுடைய தோர் ஏணியாமன்றே! அவ்வேணியை யடையவிரும்பிய ஒருவன்

அதன் உயரத்தையறிகிறதில்லை. உயரச்சென்றதும் அதற்கு முயரமான இடத்தையடைய மனம் அவாக்கொள்கின்றது. ஒரு கணப்பொழுதேனும் சந்தோஷத்தையடைய விரும்புங்கால் கணக்கற்ற பொருளும் பயனிலவாதல் உண்மையே யன்றோ? அறிவையடைதற்கு ஏதேனும் ஒரு வரையறை யுளதோ? நாம் எவ்வளவு படிக்கின்றோமோ அவ்வளவும் நம் அறியாமையையன்றே விளக்குகின்றது. நாம் பதினாயிரம் வருஷம் உயிருடன் வாழினும் சூரிய சந்திரர் தன்மையையேனும் அன்றி அவைகளை வானத்திலிருக்கச் செய்த பொருளின் குணத்தையேனும் அறியவல்லமோ? எப்பொழுதும் பேராசையானது பெரு நஷ்டத்தையே விளக்கும். அது போற் குணவதியின் பேராசையானது தீமையை விளைவிக்காமலிராது. கார்காலத்திற் றோன்றுஞ் சூரியனையொப்ப உலகிற்கு அற்பநாழிகையே இன்பம் விளைத்துப் பின்னர்க் கடுமழையை விளைக்குந்தன்மையை யொப்ப தத்சமயத்தில் இம்மையல் இன்பத்தையே விளைத்துப் பிறகு பொறுத்தற்கு முடியாத துன்பத்தை விளைவிக்கும்.

மனைவியினிடத்து மட்டின்றி யாசைபாராட்டும் வீரமார்த்தாண்டனுக்குக் குணவதியை அனேகநாட்கள் விட்டுப் பிரிந்திருத்தல் மிகவும் வருத்தமே யென்பதை நாம்முன்னமே தெரிவித்திருக்கின்றோம். ஆம் என்செய்வான்? தன்னிடத்து இதுகாறும் ஒருவாறாக நடந்துவந்த மனைவி அரசனை யடைந்தநாள்முதற் பின்னும் பதின்மடங்கு அவனிடத்தே யன்புபாராட்டி வந்தாள். தன் நாயகனுக்குத் துரோகஞ் செய்கிறோமே என்று அதற்குப் பதிலாகப் பின்னும் அதிக அன்பு குணவதி காட்டுகின்றனளோ? என்னையோ? அன்றி அவனுடன் இன்னுஞ் சிலநாட்கள் தாமே நாம் தங்கியிருக்கப் போகின்றோம்; அதிசீக்கிரத்தில் அரசன் அவனை நீக்கிவிடுவதாக வாக்களித்திருக்கின்றனனென்றதனாலோ? அன்றித் தான் மிகவும் அன்புபாராட்டினால்தான் கணவனுக்குத் துரோகஞ்செய்வது தெரியாமலிருக்குமென்ற எண்ணத்தினாலோ அவள் அவ்வாறு நடந்தனள். குணவதி இவ்வாறு நடப்பதானது வீரமார்த்தாண்டனது ஆசையை மிகுதியும் வளர்த்து அவளை விட்டுப்பிரிய மனமிலனாய்ச் செய்தது. இராசாங்ககாரியமாக விடி

யற்பொழுதிற் செல்லவேண்டுமாயின் பத்து நாழிகைக்கே மிக வருத்தத்துடன் செல்லுவான். இவ்வாறு ஒழுகுதலானது குணவதிக்கே நீங்கை விளைத்தது. எவ்வாறெனின் தன் ஆசைநாயகனைக் காணுமல் வருத்தமடைதலாம். அவளும் என்செய்வாள்? கிணறுவெட்டப் பூதம் புறப்பட்டது.

குணவதி அரசனைச் சந்தித்து அநேகநாட்களாயின. அரசன் ஆவலுடன் அவளை யணைய எதிர்பார்த்திருக்கின்றான். ஒரு நாள் மாலை வீரமார்த்தாண்டன் இராசாங்க காரியமாகச் சென்றிருந்தான். அப்பொழுது அரசன் குணவதியை யடைந்து ஆதரத்துடன் தழுவிக்கொண்டு,

"என் அருமைக்குணவதி! இன்றைக்கேனும் நாம் இன்பமுடன் இருக்கலாகுமோ?" என்றான்.

குணவதி சும்மாவிருந்தனள். அவன் முகத்தைப் பிரியத்தோடும் பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் கன்னங்களைத் தன் கைகளால் மெதுவாகத் தட்டினான். அவளழகை மிகவும் வர்ணித்தான். அவனது வர்ணிப்பானது குணவதிக்கு இன்பத்தை யுண்டு பண்ணிற்று. அவள் தன் அழகில் மிகவும் கர்வமுற்றவளாகலின் அடிக்கடி அவனைத் தழுவிக்கொண்டு சிருங்கார வார்த்தைகள் சொல்லிக்கொண்டிருந்தாள்.

"ஏ! குணவதி! நீ மிகவும் அழகாயிருக்கின்றனை. சீக்கிரம் அவ்வீரமார்த்தாண்டனினின்றும் உன்னைப் பிரித்துவிடுகின்றேன். உன்னை முழுவதும் என்னுடைமை என்று எப்பொழுது பாவிப்பேனே? அக்காலமெக்காலமோ?" என்று சொல்லிக்கொண்டு அவளுடைய இரண்டு தோள்களிலும் தன்கைகளை வைத்து முத்தங்கொண்டான்.

"தாங்களிவ்விதம் பிரியம் பாராட்டலானது எனக்குத் துன்பத்தை விளைக்கின்றது, அடிக்கடித் தங்களைப் பிரியநேரிடுகின்றதாகலின்" என்றாள் குணவதி.

"ஆயின் நாளைமுதல் வீரமார்த்தாண்டனைச் சிலகாலம் அரண்மனைக்கே வாராமலிருக்குமாறு செய்கின்றேன்" என்றான் சத்தியகீர்த்தி.

"அப்படியே செய்யுங்கள்" என்று குணவதி பெருமூச்சு விட்டுக்கொண்டு சொன்னாள்.

மறுநாள் வீரமார்த்தாண்டன், அரண்மனைக்கு வந்ததும் "சுந்தரன் உதவி அரண்மனையிற் சிலகாலம் முக்கியமாய் வேண்டியிருத்தலின் நீயே காவலிற் றலைமைபூண்டு இருக்கவேண்டும்" என்றான் அரசன். வீரமார்த்தாண்டன் அவ்வாறு தன் மனைவியைப் பிரிந்திருப்பதற்கு மனமிலனாய் அரண்மனையைவிட்டு எங்கேனுமோடிப் போவதாகத் தீர்மானித்துக் குணவதியுடன் ஆலோசித்தான். அவளுக்கு ராஜத்துரோகம் செய்வதில் மனமிலையென்று உணர்ந்தான்; மிகவும் மனவருத்தத்துடன் வெளியே சென்றான். வீரமார்த்தாண்டன் சுந்தரியை அழைத்துக் குணவதியின் குணத்தைப் பற்றிப் பயமுறுத்தி வினவ, அவள் பயங்கொண்டு ஏதோ அரசன் குணவதியிடத்துப் பிரியம் பாராட்டுகின்றான் என்றாள். உடனே கோபத்துடன் மனைவியை மறுமுறை யோடிப்போகலாமென்று கேட்டான். அவள் மறுத்ததும் தான் இனி அரண்மனைக்கு வருவதில்லையென்றும் அரசனைக் கொலைசெய்த பிறகே வருவதாயும் சபதம் கூறிவிட்டு வெளியே சென்றான். பிறகு குணவதி அரசபத்தினியாயினாள். அரண்மனையிலுள்ளவரெவரும் அரசன் தீய ஒழுக்கத்தையுணர்ந்து மனம்வருந்தி ஏதோ தீங்கு அரசனுக்குச் சம்பவிக்கப்போகின்றதென்று உறுதியாய் நம்பினார்கள். விசையையோ மிகவும் வருத்தமுற்றாள்.

---

## அத்தியாயம்—XXII

"மீளுருந் தருமந் தன்னை வெல்லுமோ பாவஞ் சொல்வாய்."

வீரமார்த்தாண்டன் அரண்மனையைவிட்டுச் சென்று சில காலமானதும் சுந்தரன் விசையையினை இரகசியமாய்ப் பலாத்காரமாய் இராக்கத மணம்புணர இதுவே நல்ல சமயமென்றெண்ணி ஒரு தந்திரஞ் செய்தனன்.

அரசன் குணவதியின் மோகவலையிற்சிக்கி இராசாங்க விஷயங்களையும் சரிவர நடத்தாமல் வீணே காலத்தைக் கழித்தனன். தன் பெண் யுவதித்தன்மை யுற்றதனால் மணஞ்செய்விக்க வேண்டு

மென்னும் எண்ணமே அவனிடத்து உற்பவிக்கவில்லை. அவன் கோமெதி சீக்கிரத்திற் றீமையை விளக்குமென்று விசையை உண்மையாக எதிர்பார்த்தனள்; 'பெண்கள் காமம்பிடித்தவர் உய்வரோ' என்ற மெய்ம்மொழியை முழுதும் நம்பினளாகலின்.

ஒருநாள் விசையை தன் தந்தையின் தீக்குணத்தைப் பற்றி எண்ணி மனம் வருந்தும்பொழுது இன்னலே உருக்கொண்டு வருபவன் போன்று சிங்காரம் என்னுமொரு கிழக்கூனி வந்தனள். விசையை மிகவும் மரியாதையுடன் ஓராசனத் துட்காருமாறு சொல்லித் தன்னிடம் வந்த காரியத்தை வினவினள். அதற்குச் சிங்காரம்,

"உன்னைப்பார்த்தால் மிகவும் துயரமடைந்தவள்போல் தோற்றுகின்றாய்" என்றாள்.

"அப்படி மனவருத்த மொன்றுமில்லை. ஏதோ என் தங்கையைப்பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன். அவ்வளவுதான். வேறொன்றுமில்லை." என்றாள் விசையை.

"உன் பெயர் என்ன?"

"என்னை இன்னளென்று அறியாயோ? ஏதோ முக்கியமான காரியமாக என்னிடம் வந்ததாகவன்றோ இதுகாறும் நினைத்திருந்தேன்."

"ஆம். உண்மையே. இவ்வரண்மனையில் ஒருத்தியுடன் இரகசியமான வார்த்தைகள் பேசவேண்டுமென்றே வந்தேன். அவையெல்லாம் போகட்டும். உன் பெயர் என்னை?"

"என்னை விசையை என்பார்கள்."

"விசையையா! நான் கேள்விப்பட்ட பெயரே. மறக்கவில்லை. அரசனுக்கு என்ன உறவு?"

"அரசன் மகள்தான் யான்."

"ஏதோ தங்கை என்று சொன்னாயே. அவள் யாவள்?"

"அவள் இவ்விடமில்லை."

"நான் ஏதோ கேள்விகள் கேட்கின்றேனென்று மனத்தவர்ச்சியடையவேண்டாம். அவள் பெயரை மாத்திரம் சொல்."

"அவள் பெயர் கமலினி."

"மதிமுகனென்றவனுடன் ஓடிப்போனவளோ?"

"அஃது என்னவோ எனக்குத்தெரியாது." உடனே சுந்தரன் விட்டதூதோவென்று சந்தேகித்தாள்.

"உனக்கு உண்மையாகத் தெரியாதா? ஆயின் சரிதான்." என்று சிறிது யோசிப்பவள்போலச் சிங்காரம் பாசாங்கு செய்தனள்.

"என்னிடம் ஏதேனும் காரிய மிருக்கின்றதோ?"

"உன்பெயர் விசையவல்லி யம்மையாயின் இரகசியமான விஷயங்கள் பேசவேண்டி யிருக்கின்றன."

"ஆனால் தடையின்றிச் சொல்லலாம். இஃது அந்தரங்கமான இடமே. யாரும் இவ்விடம் இப்பொழுது வரமாட்டார்கள்."

"உன் தங்கை—கமலினி—நாலைந்து நாழிகைவழித்தூரத்திற் கப்பால் தங்கியிருக்கின்றாள்.—என்ன? ஆச்சரியப்படவேண்டாம். நான் சொல்வது மிகவும் உண்மையே. அவள் உன்னைப்பார்க்க மிகவும் விரும்புகின்றாள்."

"இன்னும் ஏதேனும் முக்கியமானவிஷயம் சொன்னாளோ?"

"உண்மையைச் சொல்லட்டுமா? நான் அவளுக்கு உயிர்த் தோழி. என் புத்திரிபோல் அவளை நினைக்கின்றேன். என்னவோ அவள் தகப்பன் போர் செய்வதற்குப் படையெடுத்து வருமுன் அவள் உன்னைக்கண்டு சில விஷயங்கள் சொல்லவேண்டுமாம்."

"அவளுடன் இன்னும் யாராவது தங்கி இருக்கின்றார்களா?"

"அவளுடன் கனகமாலை, மதிமுகன் ஆகிய இவ்விருவரும் வந்திருக்கின்றார்கள். மதிமுகன் ஒரு க்ஷணமும் அவளை விட்டுப் பிரிகிறதில்லை. ஏதேனுந் தீங்கு சம்பவிக்குமென்று பயப்படுகின்றான்போலும்."

"என்னை அழைத்துச் செல்வாயோ?"

"உனக்கு அவள்மீது பிரியமிருக்குமாயின் உடனே வரவேண்டும். அழைத்துச்செல்கின்றேன். மிகவும் இரகசியமாக வரவேண்டும். அரண்மனையில் யாருக்கும் நீ கமலினியிடம் செல்வதாகத் தெரியலாகாது."

"ஏதாவது சுந்தரன்செய்த சூழ்ச்சியோ? கமலினி அரண்

மனையைவிட்டு நீங்கியதற்கு யான் உடந்தை என்று குற்றஞ்சாட்டி யதை அரசனுக்கு ரூபிக்க வெண்ணங்கொண்டு இவ்வாறு செய் கின்றனரோ?—அப்படி ஒன்றுமிராது என்றே தோன்றுகின்றது. எதற்கும் பார்க்கலாம்" என்று விசையை சிறிது ஆலோசித்தாள்.

"என்ன ஆலோசிக்கின்றாய்? ஆயின் நான் போகட்டுமா?" என்றான் அக்கிழம்.

"இது மாலைப்பொழுதாகலின் யாதொரு கஷ்டமும் நேரிடாது. யான் புறப்பட்டு விட்டேன். வா போகலாம்" என்று எழுந்து நின்றான்.

சிங்காரமும் எழுந்து அவளை அரண்மனையினின்றும் அனேகஞ் சிறு சந்துகள்தோறும் அழைத்துக்கொண்டு போனான். இருளாதலாற் போம்வழியும் நம்விசையையாலறிய முடியவில்லை. சிறிது தூரத்திற்கப்பால் இரண்டு குதிரைகள் கட்டிய வண்டி யொன்று நின்றுகொண்டிருந்தது. அவ்வண்டியினுட்புறத்தில் இரண்டுபேர் கரிய உடுப்புத் தரித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். சிங்காரம் அவ்வண்டியினருகுபோய் "அம்மா விசையே! இந்த வண்டியில் ஏறிக்கொள். உனக்கு நடந்தால் இளைப்பாயிருக்கும். சீக்கிரம் கமலினியிடம் போகலாம்" என்றனன். விசையை அப்படியே ஏறிக்கொண்டான் காற்றினும் கடுகிக் குதிரைகள் பறந்தன.

தன் எதிரில் இரண்டு மனிதர் உட்கார்ந்திருப்பதையும், குதிரைகள் மிகவும் வேகமாய்ப் போவதையும் நினைத்துச் சிறிது விசையை சந்தேகமுற்றனள். பிறகு இம்மாதிரி இரகசியமாய் அழைத்து வரும்படி கமலினி ஏற்பாடு செய்திருந்தாலுமிருப்பாள் என்று தெளிந்தனள். வெகுநேரமாயும் குறித்த இடம் அடையாமையாற் சந்தேகமடைந்து எதிரில் உட்கார்ந்திருப்பவரைக் கேட்டனள். அதற்கு அவர்கள் இன்னும் காதவழிதா னிருக்கின்றதென்று சொன்னார்கள். 'உடனே வண்டி குதிரைகள் இளைப்பாறுமாறு தங்கிற்று. இருவரும் விசையையினை வண்டியினின்றும் வெளியே செல்லவிடவில்லை. பொழுது புலருஞ் சமயத்து ஒரு சிறு குடிசையிற் றங்கினார்கள். அக்குடிசையை யடைந்ததும் விசையை 'கமலினி எங்கே?' என்றனள். சுந்தரனும் அவன் சேவகனுமாகிய இருவரும் 'இன்னும் அரைக்காதத் தூரத்திற்றான் கமலினி இருக்

கின்றாள். பகற்பொழுதில் அவளைச் சந்தித்தல் முடியாது. அவள் இருப்பிடம் யாவரும் அறியலாகாது. ஆகையால் இன்று மாலை போகலாம்' என்றனர். விசையை இவர்கள் வார்த்தையை நம்பவில்லை. ஆயினும் என்செய்வாள்? சுந்தரனை இன்னனென்று அவள தெரிந்துகொள்ளவில்லை, அவன் மாறுவேடந் தரித்திருந்தனனாகலின். பிறகு விசையை "நீங்கள் என்னை இம்யாதிரி அதிக இரகசியமாய் இவ்வளவு தூரம் அழைத்துவருவதைப் பார்த்தால் எனக்குச்சந்தேக முண்டாகின்றது. என்னை யாது காரணத்திற்காக அழைத்து வந்தீர்கள்? கொலை செய்வதற்கா? அதற்காயின் இவ்வளவு பிரயாசை நீங்கள் எடுத்துக்கொள்ள வேண்டியதேயில்லையே? உண்மையைச் சொல்லுங்கள்" என்று பயத்துடனும் அதிகாரத் தொனியோடுங் கேட்டனள்.

"உன்னை அழைத்து வந்ததன் உண்மையைக் கூறினதனாற் றெனென்ன? இனி எங்கள் கையிற் சிக்கிவிட்டாய். முதலில் என்னை இன்னனென்று உனக்குத்தெரியுமா? சிறிது ஆலோசித்துச்சொல். பார்க்கலாம்" என்று சுந்தரன் சொன்னான். விசையை கோடை யிடியிடிப்பக்கேட்டுப் பயப்படும் நாகங்களைப்போலவும், புலியைக் கண்டு நடுங்கும் ஆட்டுக்குட்டியைப்போலவும் பயந்து,

"உன் பெயர் சுந்தரனன்றோ? அடே! கொடிய! என்னை என் இப்படி வருத்துகின்றாய்? உனக்கு யாதொரு தீங்குஞ் செய்யாத என்னை இவ்விதத் துன்பத்திற் காளாக்குவித்தல் நேரிதோ?" என்றாள்.

"உன்னுடைய அழகின் ஒளிக்கதிர்களாகிய அம்புகள் என் மார்பைப் பிளந்துகொண்டிருக்க யாதொருதீங்கும் செய்யவில்லை என்று என்ன பாசாங்கு செய்கின்றாய்! இன்னும் மூன்று தினங்கள் இரவும் பகலும் இடைவிடாமற் பிரயாணமாகப்போக ஏற்பாடுகள் செய்திருக்கிறேன். யான் குறித்த இடத்தையடைந்ததும் உன்னை அழைத்துச்செல்வதன் காரணத்தைச் சொல்கிறேன். இனி அடிக்கடி எங்களை வினவுவதிற் பிரயோசனமேயில்லை" என்று சுந்தரன் சொன்னான்.

'பாக்குவெட்டியிடை யகப்பட்டுக்கொண்ட பாக்கு வெட்

ணென்றுமற்போமோ? எப்போது நீயர்களாகிய உங்கள் வலையிற் சிக்கிக்கொண்டேனோ அப்பொழுதே யான் துன்பத்திற்காளாயி னேன். நீங்கள் என்னதான் செய்கிறீர்களோ கடைசிவரையிற் பார்க்கின்றேன். பிறகு இறைவனிருக்கிறான்" என்று விசையை பெருமூச்செறிந்து கூறினாள்.

* * * * * *

விசையை வரும் வண்டியானது பாண்டியநாட்டின் தலை நக ராகிய மதுரையை யடைந்தது. மதுரையில் ஒரு சாதாரணமான வீதியிற் சீநிவாசன் என்பவன் வசிக்குங்கிருகத்தை யிவர்கள் அடைந்தார்கள். விசையை இருக்க ஒரு தனி அறை விடுத்தன ரேனும் மிகவும் சாக்கிரதையாய்ச் சுந்தரன் பாதுகாத்து வந்தான்.

சீநிவாசனுக்கு விசையையினைக் கண்டதுமுதற் சுந்தரனிடத்து ஒருவிதப்பகைமை யுண்டாயிற்று. அதற்குக்காரண மின்னதென்று அவனுக்கே தெரியவில்லை.

---

## அத்தியாயம்—XXIII

"காத்திருந்தவன் மனைவியை நேற்றுவந்தவன்
அழைத்துச்சென்றான்."

உறவு நட்புமுதலியவை பெண்கள் குறுக்கிடும் வரைக்குந் தான் நிலைநிற்கும். உறவினன் விரும்பும் பெண்ணை எப்படியா வது தானே அடைய எவனும் இச்சிக்கின்றான். ஏனெனின் ஒருவன் நன்குயக்கவனித்த பொருளையே அருகிலுள்ளவனும் ஆசை யுடன் பார்க்கின்றான். அப்பொழுதுதான், சுபாவத்திலுள்ள பொறாமைக்குணம் மனிதரிடத்துத் தூண்டப்பெறுகின்றது. காதல் விஷயத்தில் ஒற்றுமையுள்ள இரண்டு உறவினரைக் காணு தல் அரிது. தெய்வத்தன்மையையுடைய பாண்டவரே ஒற்றுமை யிலராயின் வேறு எவரிருத்தல் கூடும். நண்பர்கள் காதல் விஷ யம் ஒன்று தவிர வேறு எவ்விஷயத்திலும் ஒற்றுமையுடையராய் இருப்பார்கள். சுபாவமிங்ஙனமிருப்ப நம் சீநிவாசன், காவி

யம் பயின்றவன். உண்மையான காதல் இத்தகைத்து என்று நன்குணர்ந்தவன். அண்ணன் இச்சித்தங்கை என்று பாராட்டுவானோ? அவன் பாராட்டவேண்டுமென்று நினைத்தாலும் மனம் எப்படி ஒப்பும். மலரிடத்துத் தேனுளதென்றறிந்த பின்னரும் வண்டு அதையுண்ண முயலாது செல்லுமோ? அப்படிச் செல்லுமாயின் ஆண்தன்மைக்கே ஓரிழிவாகுமன்றோ?

சுந்தரன் உண்மையைச் செவ்வையாய் உரையாமல் விசையை யினைத்தான் மணக்கும்படி அரசன் உத்தரவைப் பெற்றும் அவள் மாறிய மனத்தளாயிருக்கின்றமையின் இவ்விடம் உற்றாரினின்றும் பிரித்துவைத்த பின்னரேனும் வழிக்குவருவாள் என்ற எண்ணத்தால்தான் அவளை இவ்விடம் கொணர்ந்து விடுவதாகச் சீநிவாசனிடம் சொன்னான். சுந்தரன் தன் தம்பி தன்னிடம் பிரியம் பாராட்டுவான் என்று எண்ணியே இக்காரியம் செய்தான். தன்னைக்காணாததால் எங்கேனும் அரசன் சந்தேகிக்கப்போகின்றான் என்று ஒரேவேளை மதுரையிற்றங்கி உடனே காஞ்சியை நோக்கிச் சென்றான். பத்து அல்லது பதினைந்து தினங்களில் தான் திரும்பி வருவதாய்ச் சொன்னான். விசையைக்குப் புத்திமதி சொல்லி நல்ல வழியிற்றிருப்பும்படி சீநிவாசனைக் கேட்டுக்கொண்டான். அவனும் அப்படியே என்று ஒப்புக்கொண்டான்.

சுந்தரன் சென்று இரண்டுதினங்களாயின. முதலில் விசையை துக்கசாகரத்தில் மூழ்கினவளாய் யாருடனும் வார்த்தையாடாமல் உடலும் மெலியும்படி வேளையில் உண்ணாமல் இருந்தனள். சீநிவாசனுடைய சீரிய ஒழுக்கம் நாளடைவில் நம் விசையையின் மனத்தில் இரக்கத்தை யுண்டுபண்ணிற்று. விசையை சுந்தரனால் தனக்கு நேர்ந்த தீங்கை வெளியிட்டு அவன் சொன்னவெல்லாம் பொய் என்றும் கூறினாள். சீநிவாசன் யாருக்குத் தீங்கிழைத்தாலும் பொறுத்துக்கொள்வான். பெண்ணிற்குத் தீங்கியற்றுபவனை எவ்விதத்தானும் தொலைக்கமுயலுவான். பெண்களைத் தெய்வமெனப்பேணிப் பாராட்டுவதே ஆண்தன்மை என்று பலவிசை சொல்லுவான். பெண்களை பிரமசிருஷ்டியில் உயர்ந்தவரென்பான். இது தற்காலத்திய சில உயர்நூற் புலவர் கொள்கையுமாம்.

எப்பொழுதும் பெண்கள் புகழ்ச்சி விரும்புவோர் என்பது நன்ருய் அநுபவத்திற்காணலாம். சூர்ப்பனகைக்குச் சமானமான பெண்ணாலும் திருமகள் என்று ஒருவன் புகழவிரும்புவாள். தன்னைப் பரிகசிக்கின்ருன் என்று ஒருகாலும் எண்ணுள். அவ்வாருக உண்மையாக அழகிய பெண்ணை உயர்த்திக்கூறினல் எவ்வளவு இன்பமடையாள்? நம் விசையை சிறிது தன் அழகில் செருக்குற்ற வளென்று முன்னமே கூறினேமன்றே! ஆதலால் அடிக்கடிச் சீநிவாசன் அவளழகைப் புகழ்ந்துரைத்து அவள் காதலைப்பெற்ருன். இருவரும் தாம் காதலுற்ற தன்மையை உணர்ந்தவர்களே. வெளித்தோற்றுவிக்கச் சமயம் வாய்க்கவில்லை. மேலும் பெண்கள் எக்காலத்தும் தம்காதலை முதலில் வெளியிட நாணமடைவார். இந்த உண்மையையும் உணர்ந்த சீநிவாசன் தன் காதலை வெளியிடச் சமயம் பார்த்திருந்தான். அச்சமயமும் வாய்த்தது.

"நான் எத்தனைநாள் இவ்விடம் வாசம் செய்வது? என் தந்தை எங்கெங்குத் தேடுகின்ருரோ? யான் இவ்விடம் இருக்கும் விஷயத்தை எவ்விதம் தெரிவிப்பேன்?" என்று விசையை சொன்னுள். "அம்மா! இங்கு ஏதேனுந் துன்பமுண்டாகும்படி யாவரேனும் நடக்கின்ருர்களா? அவர்களை இன்னரென்று சொல்லுங்கள்? அவர்களுக்குத் தகுந்த தண்டனை விதிக்கின்றேன்." என்ருன் சீநிவாசன்.

"என்ன? அப்படிச் சொல்கின்றீர்களே! என்னுடைய ஸ்திதியிலிருப்பவர் எவ்வளவுதான் இன்பமடைந்தாலும் மனச்சஞ்சலமின்றியிருப்பார்களா? ஒருபக்கம் உற்ருர் உறவினரைத் துறந்து தனிமையாயிருக்கும் துக்கம், மற்ருெருபக்கம் உலகோர் யாரையோ காதல்கொண்டு அழைத்துச்சென்ருள் என்ற வசைச்சொல் என்னை மருட்டுகின்றது. அந்தச்சண்டாளன் சுந்தரன் தங்களைப்போன்ற அருளுடைய உன்னத்தினரானவரிட மன்றித் தீயோரிடம் என்னை அடைக்கலம் வைத்திருந்தால் என் கதி என்னவாம்?"

"அப்படித்தங்களுக்கு வருத்தமாயிருந்தால் நானே காஞ்சிக்கு அழைத்துச் செல்கின்றேன். ஆனல் என்மனத்தை வருத்தும்படி

யான் ஒரு விஷயத்தை விசாரித்து ஏற்றுக்கொள்ளவேண்டும்?"
என்றான் சீநிவாசன்.

என்னை அழைத்துச் செல்வதற்குக் கைம்மாறு என்னகேட்டாலும் அளிக்கின்றேன். சிறிதேனும் சந்தேகப்படவேண்டாம்."
என்றாள் விசையை.

"கூலிக்கு வேலைசெய்யும் கொடியன் என்று என்னை எண்ணக்கூடாது. துயருற்றவர்களை ஆற்றுதலே ஒவ்வொருமனிதரின் கடமை. அதுவும் வருந்துபவர் பெண்ணாயிருந்தால் உயிரையும் கொடுத்தல்லவோ அவர்களை ஆற்றவேண்டும்." என்று சிறிது உரத்தகுரலுடன் சீநிவாசன் கூறினான்.

"நான் தங்களுக்கு வருத்தமுண்டாகும் வண்ணம் ஒன்றும் சொல்லவில்லை. அப்படித் தவறிச்சொல்லியிருப்பினும் என்னை மன்னிக்கவேண்டும்."

"பெண் என்றால் பேயு மிரங்கும். திருமகளைப்போன்ற தாம் வருந்தினால் அற்பராகிய யாங்கள் என்னசெய்யக்கிடக்கின்றன. கட்டளையைச் சொன்னால் நிறைவேற்றச் சன்னத்தனாயிருக்கின்றேன். தாங்கள் எங்கட்கு இளவரசியல்லீரா?" என்று சீநிவாசன் கூறினான்.

"யான் அரசி என்ற கவுரவம் பாராட்டவில்லை. யான் எப்படி அரசியாவேன்? முதலில் அரசு என் தந்தையுடையதோ?"

"ஏன்?"

"காருண்யவள்ளலின் இராச்சியத்தையன்றோ என் தந்தை கைப்பற்றி யிருக்கின்றார்?"

"தமயன் தம்பி இவர்கள் ஒருவர்க்கொருவர் உரிமையுடையவரல்லரோ?"

"உரிமை எதுவரைக்கும். ஒருவனை யொருவன் மோசஞ் செய்தலோ உரிமை. தங்கள் தமயன் என்னைக் கவர்ந்தனராயின் யான் தங்கள் உரிமையோ?" என்று விசையை மெல்லிய நகையுடன் சொன்னாள்.

இவ்வார்த்தைகளின் தாற்பரியத்தை நன்றாய் அறிந்த சீநிவாசன் "அவன் கவர்ந்ததும் தாங்கள் அத்தீயோனுடைமையோ?

களவாண்ட பொருளெல்லாம் கள்ளனுடையதாயின் இராசாங்கத்தார் ஏன் அதை மறுபடியும் உடையவனுக்குத் திருப்பித் தருகின்றார்கள்?"

"ஆயின் என்னை யுடையவனிடம் ஏன் சேர்க்கக்கூடாது என்று விசையை நடுங்கிய குரலுடன் கூறினன்.

"இறைவனே சேர்ப்பான்" என்று பரிகாசமாய்ச் சீநிவாசன் சொன்னன்.

"ஆம். இறைவனே சேர்த்திருக்கின்றான்" என்று மெல்லென விசையை கூறினள்.

"அப்படியாயின் நங்காய்! ஏன் வருந்தவேண்டும்? தங்கள் முகாரவிந்தத்தின் எழிலில் ஈடுபட்ட யான் சாதகப்புள்ளினைப் போல் விரதமனுஷ்டிக்கின்றேன்."

"அப்படிப்பட்ட விருதமென்ன? சொல்லுங்கள்."

"ஏ! பெண்ணே! உன்னைக் கண்டநாள்முதல் இதுகாறும் என்மனத்தை வெளியிட நல்ல சமயம் எப்பொழுது வாய்க்குமோ வென்று எதிர்பார்த்திருந்தேன். தமயன் இச்சித்த நங்கையாயினையே என்று சிறிது மனத்தளர்ச்சி யடைந்திருந்தேன். அதனால் இனி உன்னைத்தவிர எப்பெண்ணையும் மணப்பதில்லை யென்ற விரதமொன்று அநுஷ்டித்திருந்தேன். அவ்விரதம் இன்றைக்குத் தான் பூர்த்தியாயிற்று. எப்படியென்றால் உன்மனமும் என்மனமும் ஒன்றுபட்டதாதலினால்." என்று விசையையின் கரங்களைத் தன் இருகரங்களால் சீநிவாசன் பற்றினன்.

விசையை ஒன்றும் சொல்லாமல் நாணத்தால் தலைகவிந்து நின்றனள். அப்பொழுது அவளைப்பார்த்தாரெவர்க்கும் மாலையில் சூரியகாந்த புஷ்பத்துடன் சாய்ந்த அதன் தண்டினைப்போன்று விளங்கினள். ஒரு நிமிஷத்தில் தன் மனவருத்த மனைத்தும் நீங்கினள். முகத்தில் புன்னகை யரும்பியது. என்னே! இவளழகு! இனைத்தென்று யாரால் வருணிக்கமுடியும்? விசையை விஜையையே என்றுதான் எம்மால் சொல்லமுடியும். ஏற்கனவே விசையை தன் தந்தையின் நடவடிக்கையில் குற்றமுளதென்று வருந்தியவள். குலமகளல்லாத குணவதியை அரசன் வைப்பாட்டியாக வைத்துக்

கொண்டிருப்பது நம் விசையைக்கு அருவருப்பையுண்டுபண்ணி ற்று. சிலசமயங்களில்அரண்மனையிலிருப்பதே பிழையென்று நினைத் தாள்; தன்னை அவ்விடத்தினின்றும் துரத்தவேண்டுமென்று கட வுளையும் அநேகமுறை பிரார்த்தித்திருக்கின்றாள். அவ்வேண்டு கோள் நிறைவேறிற்றே என்று மனமுவந்து மேலெழுந்த புன்ன கை என்று அவள் முகத்தைப் பார்த்தாரெவருங் கூறுவார். இப் பொழுதும் கொடும்பாதகம் என்று எவரும் எண்ணத்தக்க செய லைச் செய்த சுந்தரன் செய்கையும் நன்மையே பயந்தது. சுந்தரன் செய்த ஒவ்வொரு தீவினையும் நன்மையையே விளைவித்தது இது விஷயத்தைப் பற்றிச் சிறிது ஆழ்ந்து ஆலோசித்தால் நன்மை தீமை என்பனவே இவ்வுலகில் இல்லை என்று தேரலாம். அவரவர் கள் எண்ணமே நன்மை தீமை என்று வேறுபடுத்தி ஏற்றுக்கொள் கின்றது.

“ஆ! ஆ! சுந்தரன் எனக்கு நன்மையை யல்லவா செய்தான். அவனை யொருகாலும் தூஷிக்கலாகாது.” என்று மெதுவாக விசை யை கூறினாள்.

“ஆம்! உண்மையில் அவன் கடமையையன்றி வேறு எது வுஞ் செய்யவில்லை.” என்றான் சீநிவாசன்.

“எப்படி? அவன் தீங்கு எவர்க்குஞ் செய்யவேண்டிய கட மையை ஏற்றுக்கொண்டிருக்கிறானோ?”

“அப்படி இல்லை. தந்தை இறந்ததும் தமயன் தம்பிக்குத் தந்தைக்குச் சமானனாகின்றான். தந்தையின் கடமை தம்புத்திரர் க்கு மணஞ் செய்விப்பது. அப்படியே என் தமயனும் எழிலு டைய உன்னை எனக்கு மணமகளாகத் தேடிக் கவர்ந்து என்னி டம் சேர்ப்பித்தான்.” என்றான் சீநிவாசன்.

“ஆம். ஆம். உங்களிட விஷயத்தில் கடமையாயும், என் விஷயத்தில் தீமையாகிய போர்வையைப் போர்த்திய நற்செயலா யும் விளங்குகின்றது.” என்றாள் விசையை.

“ஏ! பெண்ணே! நீ சொல்லியது ஒருவகையில் ஏற்புடைத் தாகின்றது. இனி நீ உன் தந்தையிடஞ் செல்லவேண்டுமாயின் கொண்டுபோய் விடுகின்றேன்.” என்றான் சீநிவாசன்.

" தந்தையிடம் போகவேண்டுமென்னும் அவசியம் இப்பொழுது இல்லை."

"ஏன்?"

" தந்தையினும் பதின்மடங்கு அன்புள்ளவரிடம் யான் தங்கியிருத்தலால். மேலும் என் தந்தையின் தீய ஒழுக்கங்கள் என் காதில் கேட்காமலேனு மிருப்பேன். மனதிற் சந்தோஷமடைவேன்."

" ஆயின் என்னினும் பாக்யவான் இவ்வுலகில் எவனுமில்லை. நம்மண உறுதிமொழிகளை மனப்பெட்டியில் முத்தமாகிய பூட்டினாற் பூட்டிவைப்போம்" என்று சீநிவாசன் காடாலிங்கனம் செய்து விசையையினை முத்தமிட்டுக்கொண்டான்.

---

## அத்தியாயம்—XXIV

" தாம்செய்த தீமையெல்லாம் உருக்கொண்டு
குற்றங்கள் சாட்டிற் றன்றே."

குணவதி தனியாய் ஓர் அறைக்கண் உட்கார்ந்திருந்தனள். மன வேறுபாட்டால் முகம் விசனத்தை யடைந்திருந்தது. ஏன் அவள் விசனமுறவேண்டும்? இவ்வுலகத்தில் அடையக்கூடிய உயரிய பதவியை யன்றே அடைந்திருக்கின்றனள். ஆம். பதவியிருந்து யாது பயன்? ஓர் எளிய கிராமத்தில் வசிக்கும் பெண்ணும் இன்பமுடன்றான் வெளியே உலாவுகின்றனள். ஒருக்கால் தன் நிலைபற்ற ஸ்திதியை நினைந்து வருந்துகின்றனளோ? அதுவும் இல்லை. அன்றித் தன் நாயகனைவிட்டுப் பிரிந்து தனியே வசிப்பதனாலோ? என்னவோ தெரியவில்லை; அவள் முகம் விசனக்குறியை வெளியிட்டது.

விசனத்துடன் தோன்றினளேனும் மிகவும் அழகுடன் காணப்பட்டாள். அவள் கூந்தலோ சிறப்புடன் பின்னித் தொங்கவிடப்பட்டது. இரண்டு காதுகளின் பக்கங்களில் அக்கூந்தல் வளைந்து பிறைச்சந்திரன் போன்று விளங்கியது. அவள் கண்கள் மிகவும் பிரகாசமாய் அழகு என்னும் தெய்வமே உற்று நோக்குதல்

போல காணப்பட்டன. எவ்வளவு அழகிருந்து என்ன பயன்? களங்கமுற்ற மனத்தளாயினளே? அவள் என்செய்வாள்? சுற்றியிருப்பவர் பிரதி பிம்பமாயினள். குலம் இழிகுலம். உற்றார் தீய ஒழுக்கத்தினர். சேர்ந்த அரசனும் தீயோன்.

இப்பொழுது அரசன் நியமித்த வேலைக்காரிகளை அப்புறப் படுத்தினள்; ஏனெனின் தான் ஏகாந்தமாய் இருந்து மனச்சஞ் சலத்தை ஒழிப்பதற்கு; மேலும் சுற்றியிருப்பவர் அவள் முகக்குறியால் மனத்தின் தீய எண்ணங்களை அறியாமலிருப்பதற்கு.

இப்படியிருக்குஞ் சமயத்தில் அரசன் திடீரென்று உள்ளே வந்தனன். என்னவோ வழக்கத்திற்கு விரோதமாய் எழுந்து நின்றனள். அரசனை இனிய வார்த்தைகளால் அழைக்கவில்லை. சத்திய கீர்த்தி ஏதோ குணவதி பிணக்குக்கொண்டனள் என்று நினைத்து,

"சதாகாலம் உன் நினைவாகவே யிருக்கும் அரசனைச் சிறிது ஏறட்டுப்பாராயோ?"

"நான் அரசியாயிருந்தா லல்லவோ லக்ஷியமிருக்கும். நான் அரசன் வைப்பாட்டிதானே!"

"ஏ! குணவதி! ஏன் அப்படிக் கூறுகின்றனை? நீ அரசி என்பதற்கு என்ன சந்தேகமிருக்கின்றது? இவ்விராச்சியத்தின் அரசியினும் உயர்வையுடைய என் மனத்தின் அரசி நீ யாயினையே?" என்று அரசன் பகர்ந்தான்.

"எப்படியும் யான் அரசியல்லேன். யான் சாதாரண ஸ்திரீயே! ஆதலால் பெண்ணைப்போன்றே பேசுகின்றேன்." என்றாள் நீர் ததும்பும் கண்களுடன் கூடிய குணவதி.

"அப்படி உனக்கிஷ்டமிருப்பின் யானும் சாதாரண மனிதனைப்போன்றே வினவுகின்றேன். ஏன் நீ விசனத்துடன் காண்கின்றாய். என் தநயை விசையை சென்றவிடம் ஒன்றும் தெரியவில்லை. எங்குச்சென்ற காவலாளரும் காணமல் வந்து சேர்கின்றனர். அந்த விசனத்தைச் சிறிது ஆற்றுவதற்கு உன்னிடம் வந்தேன். நீயும் விசனமுற்றிருந்தால் யான் என் செய்வேன்?" என்று அரசன் பிரலாபித்தான்.

"எனக்கென்ன விசனமிருக்கின்றது. புருஷனைவிட்டு அரசனை நம்பிய பைத்தியக்காரியாயினேன்" என்றாள் குணவதி.

"என்னை நம்பியதற்கு உனக்கு என்ன தீங்கு நேரிட்டது?" என்றான் அரசன்.

"நாளும் குறையும் காதலாகிய தீமையே. இவ்விரண்டு நாளாய் என்னைப்பற்றிய எண்ணமும் தங்களுக்கில்லையென்று உண்மையாய் உரைப்பேன்." என்றாள் குணவதி.

"என் அருமைத் தாயை விஜயையினைக் கவர்ந்து சென்றவன் இருப்பிடம் தெரியாமையால் விசனமுற்றிருந்தேன். அவ்விசனமும் காலமாகிய மருந்தேற வேறத் தானாகவே குறையும். மேலும் உன் அழகிய முகந்தான் என் மனத்தைக் கவரச்செய்யும். உன்னை உபேக்ஷை செய்தேனென்று சிறிதேனும் எண்ணாதே" என்று குணவதியின் தோள்களின்மீது தன் கையைப்போட்டு முத்தமிட முயன்றான்.

உடனே குணவதியும் அரசனும் பயத்துடன் நடுங்கி நின்றனர். ஒரே பக்கத்தை இருவரும் பார்த்து நின்றனர்.

இவ்வாறு இவர்கள் பயந்து நின்றது ஓர் அதிசயமாமோ? வாசற்படியின்மீது முகமும் தெரியாதபடி மெய்ப்பையால் மூடிய ஓர் உருவம் நின்றது. அம்மெய்ப்பை சத்தியவீரப்பிரபு இளமையில் தரித்திருந்தது.

குணவதி ஏதோ ஒரு தெய்வம் வெளிவந்து தன்தீய ஒழுக்கத்தைச் சகியாமல் கண்டிப்பதற்கு வெளிவந்ததென்று நினைத்தாள். குற்றமுடைய மனம் எதையும் தன் தீய தன்மையின் மேலேற்றி நடுங்கச் செய்கின்றது. ஒரு பொருளைக் கவரும் எண்ணமுடைய ஒருவன் முயலுகையில் எலியின் சப்தமும் அவனை மருட்டுகின்றது. இது சுபாவ நியமம். அரசன் தன் தமயனைத்துரத்தி அவனிடமிருந்து கவர்ந்த அரசு தனதன்றென்று உரைக்கவந்த ஆகாயவாணியோ என்று சந்தேகித்தான். ஆயினும் அரசன் குணவதியைப் போன்று பயப்படவில்லை.

அவ்வுருவம் வாளுடன்கூடியதன் வலதுகையை நீட்டியது. குணவதி மூர்ச்சையாயினள். அரசன் ஒன்றும் செய்யத் தோன்று

மல் மரம்போன்று நின்றான். உடனே அவனுக்கும் ஒருவிதமயக்கம் வந்தது. மனத்தின்கண் அனேக தீய எண்ணங்கள் சூரியன் எழுந்ததும் இங்குமங்கும் ஓடும் மேகம் போன்று உலாவியது; தன்னைக் கணக்கற்ற பிசாசங்கள் கிழித்துக் குறவையிட்டுத் தின்ப தாகக்கனவு கண்டான். அப்பொழுது எதிரில் நிற்கும் பிசாசம் வீரமார்த்தாண்டன் மனைவியைத் தூரத்தும்படி கட்டளையிட்ட தாக அவன் மனத்தில் தோன்றியது. அரசன் காருண்யவள்ளலை உடனே காட்டிலிருந்து தகுந்த மரியாதையுடன் வரவழைத்துப் பட்டம் சூட்டும்படி ஏவிற்று என்றும் நினைத்தான். விசையை காணுததற்குச் சுந்தரனே மூலகாரணனென்று வெளியிட்டதாக எண்ணினான்.

உடனே கதவுமூடிய சப்தம் கேட்டது. அரசன் திடுக்கிட்டான். எல்லாமயக்கமும் தெளிந்தது. நடந்ததைப்பற்றி ஆலோசித்தான். ஒன்றும் புலப்படவில்லை. மயங்கியிருக்கும் குணவதியின் ஞாபகம் வந்தது. நீர்கொண்டு அவள் முகத்தில் தெளித்து அவளைத் தெளிவித்தான். கடைசியில் ஏதோ கனவென்று நினைத்தான். ஏனெனின் தனக்கிஷ்டமில்லாத விஷயங்களைச் செய்ய வேண்டும் என்றால் சாக்குச்சொல்லி மறைவது மாந்தர் வழக்கந்தானே. குணவதியின் மனத்திலும் அவ்வித எண்ணத்தை அரசன் உண்டாக்கினான்.

வெளிவந்த உருவத்தின் செயல்களனைத்தும் பயனில்லாமற் போயின. பழையபடி அரசனுங் குணவதியும் தங்கள் காமத்தை ஒழிக்காமல் முன்னினும் பதின்மடங்கு தீய ஒழுக்கத்தினராயினர்.

---

## அத்தியாயம்—XXV

"வலிசெய் படையா திகள்பெருக்க
வகையாய்த் திருக்க பகைமையற."

மதிமுகனையும் கமலினியையும் விட்டுப் பிரிந்து அனேகநாள்களாயின. இவர்கள் காருண்யவள்ளலை அடைந்தனரென்றோமல்லவா. அவ்விடம் என்ன விஷயங்கள் நடக்கின்றன என்று கவனிப்போம்.

காருண்யவள்ளலைச்சார்ந்த பலபிரபுக்களும் மற்றையோர்களும் யுத்தஞ்செய்து சத்தியகீர்த்தியை வீழ்த்தும்படி பலவிசை தூண்டிக்கொண்டிருந்தனர். காருண்யவள்ளல் மிகவும் புத்திமான் ஆகையால் தகுந்த காலம் வரவில்லையென்று சும்மாவிருந்தனன். மேலும் தன் புத்திரியைக்காணாத விசனம் நாளும் அதிகரித்துக்கொண்டிருந்தது. எப்படியோ தெய்வகதியால் கமலினியும் தன்னை யடைந்தாள். அடங்கா மகிழ்ச்சி கொண்டான். மதிமுகனைக் கமலினியின் மணாலனாய்த் தானும் ஒப்புக்கொண்டான். அவன் சீரிய ஒழுக்கமே அரசன் மனத்தில் நல்லெண்ணத்தை யுண்டுபண்ணிற்று. வள்ளலும் மதிமுகன் சொற்படி நடக்கலாயினன். மதிமுகன் எவ்விதத்தும் அதிசீக்கிரத்தில் காருண்யவள்ளலுக்குப் பட்டஞ்சூட்ட முயன்றான். போர்க்கு வேண்டிய செயல்களை யெல்லாம் முறையே செய்துவந்தான்.

இப்படியிருக்குஞ் சமயத்தில் அரசனால் துரத்தப்பட்ட வீரமார்த்தாண்டன் மிகுந்த ஆவேசத்துடன் காருண்யவள்ளலைச் சரணடைந்தான். தான எப்படியாவது சத்தியகீர்த்தியைக் கொலைசெய்து இராச்சியத்தைக் காருண்யவள்ளலுக்குப் பழையபடி மீட்பதாகச் சபதஞ் செய்தான். மதிமுகனும் வீரமார்த்தாண்டனும் ஒன்று கூடியது மின்னலும் இடியும் சேர்ந்தாற்போலாயிற்று.

வீரமார்த்தாண்டன் மதிமுகனைத் தப்பியோடிவந்த குற்றவாளியென்று உணரவில்லை. ஒருகால் அறிந்தனனாயின் பகைமை பாராட்டியிருப்பான்; தனக்குநேர்ந்த துன்பங்களுக்கு அவனே காரணனென்று முழுதும் நம்பியிருந்தானாகையால், ஒவ்வொரு செயலும் இருவரும் ஆலோசித்துச் செய்துவந்தனர். ஒருகால் மதிமுகன் எல்லாம் போருக்குச் சன்னத்தமான பிறகு நாளைக்கே காஞ்சியை நோக்கிச் செல்லலாம் என்று சொன்னான்.

"எதிரியின் பலாபலத்தை யறிந்தபிறகே ஒருகாரியஞ் செய்ய வேண்டும். அவன் அயர்ந்திருக்குஞ் சமயந்தான் நமக்கு நற்காலம். ஆகையால் இன்னும் ஒருவாரம் தங்கியே செல்லவேண்டும்" என்றான் வீரமார்த்தாண்டன்.

"அவன் நிலைமையை நாம் எப்படியறியலாம்?"

"அது ஒரு பெரிய காரியமன்று. யானே சென்று அவன் சயினியத்தின் எண்ணிக்கையும் மற்றைய விஷயத்தையும் அறிந்து வருகின்றேன். எல்லாம் முடிவதற்கு இன்னும் ஒரேவாரந்தான். அதுவரையும் பொறுத்திருக்கவேண்டும்." என்றான் வீரமார்த்தாண்டன்.

"ஆயின்சரி" என்றான் மதிமுகன்.

இது விஷயங்களை யுணர்ந்த காருண்யவள்ளலும் சிறிது காலதாமதஞ் செய்வதற்கு ஒப்புக்கொண்டான்.

எட்டு தினங்களுக்குள் போர் செய்யப்போவதாய்க் கேள்விப்பட்ட கமலினி தவிர மற்றுயாவரும் சந்தோஷத்துடனிருந்தனர். கமலினி மாத்திரம் விசையைபொருட்டுச் சிறிது மனக்கலக்கம் அடைந்தாள். போர்செய்ய நேர்ந்திடின் வெல்லுவோர் யாரோ. உயிருடன் பிழைப்போர் யாரோ. விசையை தன்னை எவ்வளவோ மேன்மையாகப் பாராட்டியதை எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருந்தாள். அதற்கு இவள் செய்யக்கூடிய கைம்மாறு என்னையே? போரைநிறுத்த முடியுமோ? ஒருகால் அரசனைக் கொலைசெய்யாமல் விடுவதற்கு முயலலாம் என்று நினைத்தாள். ஒருகால் தன்னைக் காணவந்த மதிமுகனை நோக்கி,

"எப்பொழுது போர் ஆரம்பிக்கப் போகின்றீர்கள்?" என்றாள் கமலினி.

"இன்னும் ஆறு தினங்கள்தாமிருக்கின்றன." என்றான்.

"போர்செய்யாமல் காரியமுடிய வேறு வழியில்லையோ."

"ஒன்றையுங் காணேன். உனக்கு ஏதேனுந் தோன்றினால் சொல்லுவாய்" என்று மதிமுகன் சொன்னான்.

"என் சமாதானமாய் என் சிறிய தந்தைக்கு இளவரசுப் பட்டங்கட்டி தந்தைக்கு அரசுகொடுக்கச் செய்யலாகாது?"

"அது முடியாத காரியம். நமக்கு இஷ்டமிருந்தாலும் அவனுக்குப் பிரியமிராது. பாடிக்கறக்கும் மாட்டைப் பாடியே கறக்க வேண்டும். அடித்துக் கறக்கவேண்டிய மாட்டை அடித்தே கறக்க வேண்டும்."

"அப்படியாயின் யான் ஒன்று தங்களை வேண்டுகின்றேன்."

"ஏ! கமலினி! உன் கட்டளைகளைச் செய்ய யான் சன்னத்தனு யிருக்கும்பொழுது நீ வேண்டியும் யான் செய்யமுடியாத காரியம் என்ன இருக்கின்றது. உடனே சொல் யான் செய்கின்றேன். உன் வேண்டுகோட்கு மறுமுறையும் இசைய நேரிட்டதற்குச் சந்தோஷமேனு மடைகின்றேன்." என்று மதிமுகன் மிகவும் ஆவேசத்துடன் கூறினன்.

"என் சிறியதந்தையாகிய சத்தியகீர்த்தியின் புத்திரியாகிய விசையை என்மீது பாராட்டும் அன்பை எத்தனையோமுறை தங்களுக்கு எடுத்துரைத்திருக்கின்றேன். அவ்வாறிருப்ப அவள் மனம் வருந்த யான் சகியேன். ஒருக்கால் அவள் தந்தையை நீங்கள் போரிற் கொன்றால் மிகவும் விசனமடைவாள். ஆகையால் அவனைக்கொல்லா தொழியவேண்டும். அவ்வளவுதான் யான் வேண்டுவது." என்ருள் கமலினி.

"எப்பொழுது போர்செய்ய யத்தனித்தமோ அப்பொழுதே இருதிறத்தவரின் உயிரும் திருணமெனவே நினைந்து போர்க்களத்துக்கு வரவேண்டும். ஒருவரை யொருவர் கொல்லாமல் போர் செய்யமுடியாது. அக்காலத்தில் உண்டாகும் ஆவேசத்தைப் பற்றியே ஒருவர் இறப்பதும் இறவாமலிருப்பதும் கூடும்."

"ஆனல் எனக்கு வாக்குத்தத்தஞ் செய்யமாட்டீர்களோ!" என்று கெஞ்சுங்குரலுடன் கமலினி கூறினள்.

"என் பிரிய சுந்தரியாகிய நீயே கேட்கும்போது என்னுயிர் நீப்பினும் நான் அவனைக் கொல்வதில்லை." என்ருன் மதிமுகன்

"என்னவோ என்மனத்தில் ஏதோ தீங்குநேரிடப்போகின்றதாகத் தெரிகின்றது. போர் நடக்காமலிருக்க வேண்டுமென்பதே என் வேண்டுகோள். எல்லாம் இறைவன் செயல். அவன் எண்ணிய வண்ணமே எல்லாம் முடியும். ஏழை மாந்தர் நம்மால் என்னமுடியப் போகின்றது" என்று கமலினி கூறினள்.

---

## அத்தியாயம்—XXVI

"நல்லார் செயுங்கேண்மை நாடோறு நன்றாகு
மல்லார் செயுங்கேண்மை யாகாதே—நல்லாய்கேள்
காய்முற்றிற் றிற்றீங் கனியா மிளந்தளிர்நாள்
போய்முற்றி னென்னாகிப் போம்."

மானுடரினும் மிருகங்களே ஒழுக்கமுடையவை. மேலும் புலி புறவுக்குச் சமானமாகுமா? அதனதன் தன்மையை உரக்க விளம்புகின்றது. பாம்பு மெதுவாக நகர்கின்றதெனினும் தன் தீய தன்மையைப் பெருமூச்சினால் வெளியிடுகின்றது. பசியால் வருந்தும் நரி குரைத்தலால் வழிப்போக்கனுக்குத் தன் எண்ணத்தைத் தெரிவிக்கின்றது.

மனிதனொருவனே தன் எண்ணத்தை எவ்விதத்திலும் வெளியிடாமலிருப்பவன்; புலியின் கொடுமையும் பாம்பின் தீயதன்மையும் நரியின் பேராசையும் உடையவன். தன் நண்பனை மிகவும் இனிமையாய்ப் பாராட்டுவான் மறு நிமிஷத்தில் அவன் சென்றபின் தூஷிக்கின்றான். தன் தீய எண்ணத்தையும் சுயநயத்தையும் சிரிப்புடன் கூடிய முகத்தினால் மறைக்கின்றான்.

சுந்தரன் மிகவும் அவசரத்துடன் அரசனைக் காணவந்தனன். ஏதோ விசேஷ சமாசாரங்களை யுரைக்க வேண்டினன். அரசன் உடனே தன் அறையினின்றும் வெளிவந்தான். சுந்தரனைக்கண்டு,

"என்ன ஒருவாறு தோன்றுகின்றனை. உன்னைப்பார்த்தே நாலைந்து தினங்களாயின. இவ்விடம் நடந்த விசேஷங்களை யுணர்ந்தாயா?" என்று அரசன் கேட்டான்.

"என்னவோ சிறிது அலைச்சல். அவ்வளவுதான் ஒன்றுமில்லை. அந்தப்புரத்தினின்று எப்படியோ தங்கள் புத்திரி வெளியேறினளாம்." என்றான் சுந்தரன்.

"தானாகவே வெளிச்சென்றிருக்கமாட்டாள். யாரோ மோசஞ் செய்து அழைத்துச் சென்றிருக்கவேண்டும். அத்தீயோனைக் கண்டுபிடிக்க என்னாற் கூடியமட்டும் முயன்றும் பயன்படவில்லை."

"அவளை எப்படிக் கவர்ந்திருக்கவேண்டும். பலாத்காரமாய் அவளை இவ்விடத்தினின்றும் அழைத்துச் செல்லவும் கூடுமோ?"

"அதுதான் எனக்கு ஒன்றுந் தோன்றவில்லை." என்றான் அரசன்.

"சாதாரணமாக ஊகிக்கக்கூடிய விஷயந்தானே. தானாகவே தான் இவ்விடத்திலினின்றும் சென்றிருக்கவேண்டும்."

"எவ்விடம்?"

"கமலினியிடம் ஏன் சென்றிருக்கக்கூடாது?"

"ஆம். நீ சொல்வதில் உண்மை ஏதேனுமிருந்தாலும் இருக்கும். ஆயினும் வீரமார்த்தாண்டனும் அப்பொழுதுதான் அரண்மனையைவிட்டுப் போயினான். ஒருவேளை பொறாமை பாராட்டி என் புத்திரியைக் கவர்ந்து சென்றிருப்பானோ?"

"அன்று. அன்று. உன் மகளைக்கவர்ந்தவன், உன் முன்னர்த்தான் இருக்கின்றான். வீரமார்த்தாண்டன் அவ்வளவு இழிய தொழிலைச் செய்யான்" என்ற ஒரு சப்தங்கேட்டது.

இருவரும் திடுக்கிட்டு நாற்புறமும் பார்த்தனர். ஒருவரையுங் காணவில்லை.

"எக்காரியம் செய்தாலும் எவ்விஷயத்தைப்பற்றிப் பேசினாலும் இவ்விரண்டு மூன்றுநாள்களாய் அச்செயலுக்குத் தடையும் அவ்விஷயத்திற்கு மறுமொழியும் கேட்கின்றது. மனிதர் யாரோ என் அரண்மனை முழுவதிலும் மறைந்திருத்தல் வேண்டும்." என்றான் அரசன்.

"அப்படித்தான் எனக்குத்தோன்றுகின்றது. மேலும் அவர்கள் நம் பகைவராகத்தானிருக்கவேண்டும். நேற்றைச் சாயந்திரம் சிவாலயத்தினின்று திரும்பிவரும்பொழுது இன்னும் சில தினங்களில் காருண்யனென்பான் படையெடுத்துவரப் போவதாய்க் கேள்விப்பட்டேன்." என்றான் சுந்தரன்.

"என் புத்திரியைக் கவர்ந்தவன் நீயென்று இரண்டு மூன்று விசை இவ்வாறு ஆகாயவாணி உரைக்கக்கேட்டேன். ஒன்றுஞ் செய்யத்தோன்றவில்லை. யோசிக்கவும் புத்தி சுவாதீனப்படவில்லை. உன்பேரிலென்னவோ எனக்குச் சந்தேகம் பிறக்கவில்லை" என்றான் அரசன்.

"வீரமார்த்தாண்டன் முன் இவ்விதம் கலகம் செய்கின்றான் என்று எனக்குத் தோன்றுகின்றது. குணவதியின் தீய ஒழுக்கத்திற்குத் தாங்கள் தாம் காரணமென்று ஒருகால் அவன் நம்புகின்றனனோ?"

"அப்படித்தான் எனக்குந் தோன்றுகின்றது."

"ஆயின் அவனைப் பிடிப்பதற்குத் தகுந்த முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும்."

"எப்பொழுது என்னைத் தூஷிக்கின்றானோ அப்பொழுதே அவன் என் பகையாளியாகின்றான். அவனைத் தொலைப்பது என் கடமை. அதைப்பற்றித் தாங்கள் சிரமப்படவேண்டாம்." என்றான் சுந்தரன்.

"என் அரண்மனை முழுவதும் பகைவர் உலாவுகின்றனர் என்று தெரிகின்றது. யான் என்செய்வது" என்று அரசன் பிரலாபித்தான்.

"அப்படியாயின் அரசத்துரோகிகளான காவலாளர் இன்னாரென்று தெரியவேண்டும், மேலும் காருண்யவள்ளல் இன்னும் இரண்டு மூன்றுதினங்களில் படையெடுத்து வருவான். நம் சிநேகிதர் அனைவரும் ஒன்றுசேரவேண்டிய சமயமிதுவே. நம் மாணிக்கத்தைச் சீவரத்தினின்றும் இவ்விடம் உடனே வரவழைக்கவேண்டும். அவனும் யானும் அரண்மனை முழுவதிலும் மாறுவேஷமேனுந் தரித்துக்கொண்டு பகைவரைத் தெரிந்து மாய்க்கின்றோம். அதைப்பற்றித் தாங்கள் மனவருத்தமடையவேண்டாம்." என்று சுந்தரன் தேறுதல் கூறினான்.

அரசன் சிறிது ஆறுதலடைந்து,

"எம் நண்பர்களாகிய நீங்கள் தாம் என்னைக்காக்கவேண்டும். மாணிக்கம் இவ்விடம் வருவதாக எவருக்குந் தெரியவேண்டாம். உடனே நீயேசென்று அவனை அழைத்துவருவாய்." என்று கூறினான்.

---

## அத்தியாயம்—XXVII

"பிறர் பெண்டொடு நண்ணன்மின்."

சுந்தரனுக்கும் அரசனுக்கும் நடந்தவை யனைத்தையும் வீர மார்த்தாண்டன் நன்றாய்க் கவனித்துக் கேட்டிருந்தான். எப்படி யாவது சுந்தரனை வழிமறித்துச் சிறையிடவேண்டும் என்று தீர்மா னித்துக்கொண்டான்.

அரசன் சொற்படி சுந்தரன் அன்றைச் சாயந்திரமே சிவாலயத்தை நோக்கிச் சென்றான். போகும்வழி முழுவதிலும் தன்னுடைய சாமர்த்தியத்தை நினைந்து வியந்தான். விசையையினைத்தான் மணப்பதற்கு யாதொரு இடையூறுமில்லையென மனமகிழ்ந்தான். எப்படியாவது சத்தியகீர்த்தியை அரசனாக இருக்கச்செய்யவேண்டு மென்று எண்ணினான். அவனுக்கு உபகாரஞ்செய்து பிறகு விசையையினைப் பரிசிலாகத் தனக்குக் கோரலாம். அப்பொழுது அரசன் மறப்பதற்கு இடமே யிராமற் போய்விடும். நாமே இள வரசாய்விடலாம் என்று பலவாறு யோசித்து மெதுவாக நடந்து சென்றான்.

உடனே நான்கு மனிதர் சுற்றியிருந்த இருட்டினின்றும் தோன்றியவரெனச் சுந்தரனை வளைந்துகொண்டனர். அவர்களைத் தடுப்பதிற் பயனில்லையென்று சும்மா மருண்டு நின்றான். மேலும் தன் உடைவாளையெடுப்பதற்குச் சாவகாசமில்லாமற்போயிற்று. ஒரு நொடிப்பொழுதினிற் கைகால்களைக் கட்டிச் சுந்தரனை நால் வரும் ஆட்டுக்குட்டியை யெடுத்துச்செல்வதென்ன எடுத்துச்சென்ற னர்.

அரசன் சுந்தரன் மறுநாள் முழுவதும் வாராமையை நோக்கி மனமழிந்து அவனை அழைத்துவரும்படி ஆளனுப்பினான். அவன் நேற்றுமாலைமுதல் யாவரும் காணவில்லையென்றனர். அரசன் ஒன்றுஞ்செய்யத்தோன்றாமல் குணவதியிருக்கு மறைக்குச் சென் றான். அவ்விடம் குணவதி படுத்திருப்பதைக் கண்டான். அவள் இவன் எழுப்பியும் எழாமலிருந்ததால் தானும் அருகிலுள்ள ஓர் அழகிய மஞ்சத்தின்மீது படுத்துறங்கினான்.

மாந்தர்தம் நிழல் தொடர்வதுபோல வீரமார்த்தாண்டன் எப்

பொழுதும் ஒருவரும் அறியாமல் பின்றொடர்ந்தான். காவலர் நிறைந்த அரண்மனையில் இஃதெவ்வாறு முடியும் என்று நண்பர்காள்! நீங்கள் ஐயப்படுவீர்கள். பணத்தை லக்ஷியம்செய்யாமல் ஒரு காரியத்தை முடிக்கவேண்டுமானால் எப்படியும் முடித்துவிடலாம். மேலும் தீய ஒழுக்கமுள்ள தன் மனைவியையும் அரசனையும் எவ்வாறேனுங் கொலைசெய்வதாய்ப் பிரதிஞ்ஞை செய்துக்கொண்ட வீரமார்த்தாண்டன் பணத்திற் காசைப்படாமல் உடந்தையாயிராதவனைக் கொலைசெய்யவும் பின்வாங்குபவனல்லன். அரண்மனைக் காவலாளர் எல்லோரும் எளிதில் அவன் வசமாயினர். அவ்விடம் நடக்கும் ஒவ்வொரு விசேஷமும் அதிசீக்கிரத்தில் அவனுக்கெட்டிவிடுகின்றது. தற்காலத்துத் தந்தியும் காலதாமசமுள்ளதாயிற்று.

அரசனுந் தன் மனைவியும் ஒரே அறையிற்றுயில்வதைத் தன் கண்முன் பார்த்தான். எவ்வளவு நாகரிகமற்ற ஜாதியாராயினும் மனைவியின் சோரத்வத்தைப்பார்த்த புருஷன் மனம் எவ்வளவு கொதிக்கும் என்று நீங்களே ஊகிக்கலாம். அரசனுங் குணவதியும் உட்கார்ந்து வார்த்தையாடிக்கொண்டிருந்தபொழுது அநேக முறை அரசனைக் கொலைசெய்யலாமென்று நினைத்தான். அப்படிக் கொலைசெய்தால் குணவதிக்குத் தகுந்த தீங்கு சம்பவிக்காதென்னு மெண்ணத்தாற் சும்மாவிருந்தான். இருவரும் ஒரே படுக்கையிலுறங்குமிச் சமயந்தான் அவன் மனத்திற்கேற்றதாயிருந்தது. வீரமார்த்தாண்டன் மெதுவாகச்சென்று தன் கையிலிருக்கும் விஷத்தை அரசன் வாயில் மெதுவாகக் கொட்டிவிட்டுச் சென்றான். இவன் இவ்வாறு செய்வதற்கு யாதுகாரணமெனின் குணவதியே அரசனுக்கு விஷங்கொடுத்துக் கொன்றனள் என்று உலகோர் யாவரும் நினைத்து அவளை வருத்திக்கொல்வதற்கு.

குணவதி முதலில் எழுந்தாள். அரசன் அருகில் உறங்குவதைப்பார்த்தாள். அவனை மெதுவாக எழுப்பினாள். எவ்வளவு எழுப்பியும் எழுந்திருக்கவில்லை. உடனே அவளுக்குச் சந்தேகமுண்டாயிற்று. சுவாசமும் விடாமைபற்றி இறந்துவிட்டான் என்று கூக்குரலிட்டாள். அருகிலுள்ளா ரெவரும் ஓடிவந்தனர். அரசன் இறந்தவிதத்தை ஆராய்ந்திடுதலும் விஷத்தால் இறந்தான்

என்ற நிர்மானத்திற்கு வந்தனர். உடனே குணவதியின் மீது சந்தேகம் பிறந்தது. யாவரும் கண்டபடி அவளை நிந்திக்க ஆரம்பித்தனர். அன்றியும் நாலைந்து காவலர் அவளை ஈர்த்துக்கொண்டு சிறையிலிட்டனர். நடந்தவிஷயம் இன்னதென்று முற்று முணராத குணவதி மிகவும் துக்கித்தாள். அரண்மனை முழுவதிலும் ஒருவகைக் கலக்கம் உண்டாயிற்று. சிலர் குணவதியே விசையையை முதலில் விஷங்கொடுத்துக் கொன்று பிறகு அரசனையும் அவ்வாறே கொன்று அரசைக் கவரலாமென்று உத்தேசித்தாள் என்று கூறினர். சிலர் அரசனைப் பாம்பு கடித்ததென்று கூறினர். சிலர் குணவதியின் புருஷனாகிய வீரமார்த்தாண்டன் அரசனை விஷங்கொடுத்துக் கொன்றனன் என்று கூறினர். இவ்வாறு பலர் பலவாறாய்க் கூறினர். எப்படியும் அரசன் இறந்ததற்குக் குணவதிதான் காரணம் என்று யாவரும் நினைத்தனர். ஆதலின் குணவதியைச் சிறையிலிட்டு நாளையதினம் கொலைசெய்யலாமென்றிருந்தனர்.

மறுபடியும் வீரமார்த்தாண்டன் தன் மனைவியும் தான் இன்னனென்றுணராதபடி மாறுவேடம் பூண்டு குணவதியிருக்கும் சிறைக்குச் சென்றான். அவ்வறையுட்சென்று குணவதியைத் தன் பின்வரச் சைகைசெய்தான். ஆற்றினில் மூழ்கி யிறப்பவன் கையில் ஒரு வைக்கோலகப்படினும் அதை ஆதாரமாகக்கொண்டு கரையேற முயலும் தன்மைபோல் தன்னைத் தப்புவிக்க எண்ணங்கொண்டு இவன் கூப்பிடுகின்றான் என்று நினைத்துப் பின்றொடர்ந்து வந்தாள். அப்பொழுது சந்திரன் ஒரு பெரிய கருமேகத்தால் மறைக்கப்பட்டான். மாலைக்காட்சி முழுவதும் ஒருவகை இருட்டினால் மூடப்பட்டிருந்தது. ஒரு நாழிகை வழித்தூரம் அவளை அழைத்துச்சென்றான். இவன் வாய்திறவாமல் அவளை அழைத்துச்சென்றதனால் அவள் பயங்கொண்டு,

"ஐயா! நீங்கள் எங்குச் செல்கின்றீர்கள்." என்றாள்.

"நீ எவ்விடம் செல்லலாமென்று என்னைத் தொடர்ந்தனையோ அவ்விடம்தான்" என்று மாறுபட்ட குரலுடன் வீரமார்த்தாண்டன் கூறினான்.

"நான இவ்வூரைவிட்டுப் போகவேண்டியது. அவ்வளவு தான்" என்று கூறினள்.

"ஏன்? அப்படிச் செல்லவேண்டும். அழகிய அரண்மனை உனக்கு இடங்கொடுக்கவில்லையா?"

"யான் என் செய்வேன்? என்மீது பழிவந்துற்றது." என்று குணவதி வருத்தத்துடன் கூறினள்.

"என்ன பழி?"

"உங்களுக்குத் தெரியாமலா என்னை அச்சிறையினின்றும் அழைத்துவந்தீர்கள். மேலும் நீங்கள் அரண்மனையைச் சேர்ந்தவரல்லராயின் அச்சிறையின் கதவங்கள் எவ்வாறு உமக்குத் திறக்கப்பட்டது?"

"உன்னுடைய வரலாறு எனக்கு ஒன்றுந்தெரியாது. ஆயினும் ஏதோ வருத்தப்படுகின்றனையே என்று அழைத்தேன். நீயும் என்னைப் பின்றொடர்ந்துவந்தாய். நான் எங்குச் சென்றாலும் கதவங்கள் தாமாகவே திறந்துவிடும்."

"ஆயின் நீங்கள்மகரிஷிபோலும். நீங்கள்தாம் என்னைக் காப்பாற்றவேண்டும்."

"உன் வரலாறு என்னை?"

"நான் இவ்வூர் அரசனின் வைப்பாட்டி. அரசனை யாரோ விஷங்கொடுத்துக் கொன்றனர். ஊரிலுள்ளார் அனைவரும் நான்தான் கொன்றேன் என்று நம்புகின்றனர்."

"ஆயின் நீ பரத்தையா?"

"அன்று"

"உன் புருஷன் எவன்"

"வீரமார்த்தாண்டன் என்றவர்."

"ஏன் அவரைவிட்டுப் பிரிந்து இத்தீய ஒழுக்கத்தினை மேற்கொண்டனை?"

"என் விதியே என்னை அவ்வாறு செய்ய ஏவிற்று."

"அப்படிச்சொன்னல் என்னல் நம்பமுடியாது. யாதாயினும் அவனை விட்டுப்பிரிய ஒரு காரணம் இருக்கவேண்டும்."

"என் புருஷன் என்னை மிகவும் மேன்மையாகவே பாராட்டி வந்தார். ஆனல் அடிக்கடி என்னைச் சிறிதும் நம்பாமல் பரத்தை

யைப்போல் பாராட்டி வந்தார். அது என் மனத்தைத் திடப்படுத்தி இவ்விதத் துரோகஞ்செய்ய இடங்கொடுத்தது. அதற்காக நான் இப்பொழுது வருந்துகின்றேன்."

"எப்படி?"

"வீண் பழியுற்று."

வீரமார்த்தாண்டன் மெல்லெனச் சிரித்தான். உடனே குணவதி "ஏன் சிரிக்கின்றீர்கள்?" என்றாள்.

"நான் சிரிக்கவா சிரித்தேன்? ஆயின் யான் செய்தது பிழையே. இதோ இம்மலைக்குகையில் நாம் இருவரும் போய்ச் சேரலாம்" என்று அவளைக்குழந்தையை எடுப்பதைப்போல தூக்கிச்சென்றான். இக்குகை சிவாத்தினண்டையிலுள்ளது. பேசிக்கொண்டே அவ்வளவு தூரம் வீரமார்த்தாண்டன் அவளை அழைத்து வந்தான். குகையில் அடிமேலடிவைத்து மெதுவாகச் சென்றான். அவளை அவன் தூக்கியதும் மறுத்ததுகூட அவனுக்குத் தெரியாது. அவன் புத்தி சலனமின்றி யோகியரைப்போல நிலைத்தது. அவன் இப்பொழுது செய்யும் செயல்களெல்லாம் யோசனையின்றிச் செய்வது. கடைசியில் குகையினுட்புறத்தில் தன் அழகிய சுமையை இறக்கினான். சிறிது நேரம் ஒன்றுஞ்செய்யத் தோன்றாமல் அசைவற்று நின்றான். உடனே குணவதி மேல்நோக்கிய கண்களுடனும் இறக்கக் குரலுடனும்,

"ஏன் என்னை இவ்விடம் கொணர்ந்தனை?" என்று பெருமூச்சு விட்டுக்கொண்டு கேட்டாள்.

அவன் அதற்கு மறுமொழி புரைக்கவில்லை. முன்னமேயே அவ்விடம் வைத்திருந்த இரண்டு விளக்குகளைக் கொளுத்தினான். குணவதி சுற்றித்திரும்பிப் பார்த்தாள். இங்கும் அங்கும் மாந்தரின் எலும்புகள் போட்டிருந்தன. அவைகளைக் கண்டு பயந்து,

"ஐயா! என்னை வெளியே அழைத்துச்செல்லுங்கள் உங்களை வேண்டிக்கொள்ளுகின்றேன்" என்று கதறினாள்.

அவள் என்னசொல்லியும் அவன் சும்மா இருப்பதைக் கண்டு மனம் வருந்தி,

"ஏ! பாதகா! நான் அவ்வூராரால் இறந்திருக்கலாம். என் என்னைத் தப்பித்து விடுவது போலப் பாசாங்குசெய்து இங்குக்

கொணர்ந்தனே? உனக்கு வாயடைத்துப் போயிற்று? ஏன் பேச வில்லை?'' யென்று அவன் முகத்தைத்தொட்டாள்.

ஏ! துரோகி! நீ யார்முன் வார்த்தையாடுகின்றாய் என்று தெரிந்துகொண்டனையா? இன்னும் தெரிந்துகொள்ளாமலிருந் தால் சொல்கின்றேன் கேள். என் பெயர் வீரமார்த்தாண்டன். உன்னை மணந்தவன். ஆம் இப்பொழுது உன்னைக் கொலைசெய்ய எண்ணமுடையவன்.'' என்று வீரமார்த்தாண்டன் வரிசைக் கிரம மாய் உயர்ந்த குரலுடன் சொன்னான்.

“ஆ! ஆ! என்னைக் கொல்லவேண்டாம். இனியான் அவ்வி தம் ஒழுகேன்.'' என்று குணவதி அவன் கால்களைப் பிடித்துக் கொண்டாள்.

“ஏ! துஷ்டே! நான் உன்னைக் கொல்லமாட்டேன். உன் னைக் கொலைசெய்வதில் பயனில்லை. மேலும் அதுபோதுமான தண்டனையாகாது. நீ இவ்விடமேயே இரு” என்று வீரமார்த் தாண்டன் ஒரு கல்லின்பின் ஒளிந்தான். குணவதி மயக்கத்துடன் ஒன்றுஞ் செய்யத்தோன்றாமல் நின்றாள். வீரமார்த்தாண்டன் மெதுவாக வெளியே வந்து ஒரு பெரும்பாறையை இடித்துத் தள்ளி வெளியே வரும்வழியை நன்றாய் மூடிவிட்டான்; உலகோர் இனிக்குணவதியைக் காணாதபடி.

---

# அத்தியாயம்—XXVIII.

## முடிவுரை.

அரசனிறந்தான் என்ற செய்தி எங்கும் பரவியது. சத்திய கீர்த்தி இறந்த மறுநாள் காருண்ய வள்ளல் தன் சேனையை ஆயத் தப்படுத்திக்கொண்டு வந்தான். சேனையின் ஒரு பகுதிக்குத் தலை வனான வீரமார்த்தாண்டனை எங்குத்தேடியுங் காணவில்லை. மதி முகன் அவன் தன்மையைப்பற்றிச் சிறிது சந்தேகித்தான்; அவனைக் காணாததனால் எடுத்த காரியத்தை முடிக்காமல் விடுவதிற் பிரியப் படவில்லை.

மதிமுகன் தானைத்தலைவனாகவும் மணிவண்ணன் அடுத்த சேனாதிபதியாகவும் காஞ்சியை நோக்கிச் சென்றனர்.

சந்தோஷகரமாய ஒரு பண்டிகைக்கு ஒன்று சேர்ந்து வரும் ஜனக்கூட்டம்போலச் சேனை ஆரவாரத்துடன் வந்தது. அச்சேனையிலுள்ளார் அனைவரும் இராச்சியத்தைச் சயித்தாற் சயிப்பது இல்லையேல் இறப்பது என்ற உறுதியுடன் தங்கள் கால்களை எடுத்து வைத்தனர். அரசன் இறந்த செய்தி இவர்களுக்குத் தெரியாது. அரண்மனை அருகிற் சென்றும் ஒருவரையுங் காணவில்லை. மதிமுகன் என்னவோ இதிற் சூது இருக்கின்றதென்று மயங்கினான். காஞ்சியிலுள்ளார் எல்லோரும் ஏதோ கலகக்காரர் வருகின்றனர் என்று தம்தம் வீடுகளிற் சும்மாவிருந்தனர். பிறகு அரண்மனைக் காவலாளருள் ஒருவன் சேனைமுன் வந்து "நீங்கள் எத்தேசத்தினர்? எங்கள் அரசன் இறந்து கிடக்கிறான். இந்த சமயத்தில் படையெடுத்து எம்மீது போர் செய்யவருவது தர்மமன்று" என்றான்.

"சத்திய கீர்த்தியா இறந்தான்?" என்று காருண்ய வள்ளல் துக்கித்தான்.

காருண்ய வள்ளலின் குரலைக்கேட்டதும் அருகிலிருப்பவர் மிகுந்த சந்தோஷமடைந்தனரேனும் அவன் துக்கிக்கும்பொழுது அதனை வெளியிடலாகாது என்று நினைத்து அரண்மனையிலிருந்த நாலைந்து காவலாளர் எதிர்கொண்டு அழைத்துச்சென்று சத்திய கீர்த்தி இறந்துகிடக்கும் அறையிலுய்த்தனர்.

காருண்யவள்ளல் தன்னை வருத்திய தம்பி சத்திய கீர்த்தி இறந்ததைக் குறித்து மிகவும் இரங்கினான். எவ்வளவு பகைவனாயினும் அவனிறக்கத் தன் தமயனுக்கு மனம் வருமா? மதிமுகன் விசையையினை அந்தப்புர முழுதும் தேடினான். அவ்விடம் அவள் இராமையின் நடந்த விஷயங்களைச் செம்மையாய் அறிந்துகொண்டான். உடனே வீரமார்த்தாண்டனை எங்குந்தேட மனிதரை அனுப்பினான். சந்தான் சென்றவிடமும் தெரியாமை பற்றிச் சிறிது மனம்வருந்தினான். ஆயினும் இவர்கள் இறக்கவில்லை என்ற தைரியத்தினால் சிறிது ஆறுதலடைந்தான். விசையை சீக்கிரம் அரண்மனையை யடைவாள் என்று யூகித்தான்.

சத்திய கீர்த்தியின் உத்தரக்கிரியை யனைத்தும் காருண்யவள்ளலால் செவ்வனே நடந்தேறியது. சிலகாலத்திற்குப்பின் காருண்ய

வள்ளலுக்குப் பட்டஞ் சூட்டினார்கள். அச்சமயத்தில் கமலினியை மதிமுகனுக்கு மணமகளாக அரசன் கொடுத்தான். மதிமுகன் அடங்கா மகிழ்ச்சியடைந்தனனேனும் விசையையினைக் காணுமலிருப்பதைக் குறித்து மனம் நொந்தான்.

விஜயை தன் தந்தை இறந்த செய்தியைக்கேட்டு துக்கசாகரத்தில் மூழ்கினவளாய்ச் சீநிவாசனைக் காஞ்சிக்குத் தன்னைக் கொணர்ந்து விடும்படி கேட்டாள். தன் அருமை நாயகி கூறுஞ் சொற்களுக்கு மாறுதலுரையாத சீநிவாசன் உடனே அவளை அழைத்துக் காஞ்சிக்கு வந்தான். தன்னால் கூடியவரைக்கும் விசையையினுக்கு ஆறுதல் கூறினான். என்ன சொல்லியும் அவள் ஆறுதலடையவில்லை. அந்தப்புரத்தில் கமலினியைக்கண்டதும் விசையைக்குத் தகுந்த தேறுதல் கூறி ஒருவாறு தேற்றினான். காருண்ய வள்ளலும் மிகவும் பிரியத்துடன் விசையையினைத் தழுவிக் கொண்டு தந்தை யிறந்ததைப்பற்றி வருந்தவேண்டாம் இனித் தன்னைத் தந்தையாகப் பாவிக்கவேண்டுமென்றும் இனியமொழி கூறி அவளை ஆற்றினான்.

மதிமுகன் சீநிவாசனைக்கண்டு அனேக நாள்களாயினமைபற்றி ஒருவரை யொருவர் கண்டு பேரானந்த மடைந்தனர். சுந்தரன் செய்திகளைச் சீநிவாசன் மூலமாய் உணர்ந்து அவனிடமுள்ள வெறுப்பு இன்னும் அதிகமாயிற்று. இவன் தன் கண்களிற்படாமல் பிழைப்பதே மேன்மையென்ற நினைத்து அவனைத்தேடிப் பிடிக்கத் தகுந்த முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை. மதிமுகன் தன் தமயன் சீநிவாசன் காதலையுணர்ந்து அரசன் காருண்ய வள்ளலிடம் சொல்லி விசையையினை அவனுக்கு மணமகளாகக் கொடுக்கும்படி செய்தான். காருண்யவள்ளல் முன்னினும் பதின்மடங்கு பிரஜைகளைப் பிரியத்துடன் பாராட்டிவந்தான். அவன் இறந்ததும் அவன் இஷ்டப்படி மதிமுகனும் சீநிவாசனும் இராச்சியத்தைப் பங்கிட்டுக் கொண்டனர். இராச்சியத்தைப் பங்கிட்டுக் கொண்டனரேனும் பிரிய நண்பரென வதிந்தார்.

மற்றும் நம் கதையிற்றோன்றியவர்களின் வரலாறுகளையுணர நம் நண்பர்கள் பிரியப்படுவார்களன்றே. சுருக்கமாய்க் கூறுகின்றோம்.

சந்திரன் வீரமார்த்தாண்டனாற் கவரப்பட்டு ஒரு சிறையில் முதலில் வைக்கப்பட்டான். வீரமார்த்தாண்டன் குணவதியைக் குகையில் அடைத்துவிட்டுத் திரும்பிச் சந்திரனிடம் வந்து தானும் அவனும் தேசாந்தரம்போய் இனிக் காஞ்சியின் திசைக்குத் திரும்புவதில்லையென்று தீர்மானித்துக் கொண்டு யாத்திரைசென்றனர். இன்றும் நம் மதிமுகனுநகையில் அவர்களைப் பற்றிக் கேள்விப்படவில்லை.

சடகோபர் என்னும் அந்தணர் முன் சத்தியவீரப்பிரபுவுக்குப் பஷிப்பட உயிரைமாய்க்கும விஷத்தைச் சத்தியகீர்த்தியின் மனையால் கொடுத்துக் கொன்ற தோஷத்தை தீர்த்துக்கொள்வதற்குத் தீர்த்த யாத்திரை சென்றனர். இத்தீச்செயலைத்தான் மதிமுகன் சிறையிலிருக்கும் சமயத்தில் வருத்தத்துடன் கூறினர். க— மலைத பாற்றண்டை சந்திரனையும் வீரமார்த்தாண்டனையுஞ் சந்தித்துத் தங்கள் தங்கள் சமாசாரங்களைத் தெரிவித்துக்கொண்டு மூவருஞ் சேர்ந்தே தேசங்கடோருஞ் சென்று பெருமானைத் துதித்துக் கடைசியில் இறைவனடியைச் சேர்ந்தனர்.

மதிமுகனும், கமலினியும், சீனிவாசனும், விசையையும் நெழிக் காலம் காஞ்சியை யாண்டு உலகோர் யாவரும் அவர் அரசாட்சியைப் புகழ வாழ்ந்து வந்தனர்.

கமலினி முற்றிற்று.

Forms 14, 15 & 16, Printed at the Guardian Press, Mount Road, Madras.